உ

குமரன்றுணை.

# கோட்டாறு

வித்துவான்

வீ. சு.

## பழனிக் குமாருப் பண்டாரம் அவர்கள்

இயற்றிய

# பிரபந்தங்கள்.

இவை

மதுரை

தமிழ்ச்சங்கவித்துவான்

மு. ரா. அருணாசலக்கவிராயரால்


மதுரை

விவேகபாநு அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றன.

இதன் விலை] 1914 [அணா 12

உ
குமரன் றுணை.

இப்புத்தகத்தில் அடங்கிய

# பிரபந்தங்களாவன:—

உ

குமரன்றுணை.

# சிறப்புப்பாயிரங்கள்.



திருவிதாங்கூர்க் கவர்ன்மெண்டுப் பென்சன் சிலாலிகிதப்
பரிசோதகர் நாகர்கோயில்
மகா-ள-ள-ஸ்ரீ தே. சே. கணேசபிள்ளையவர்கள்
இயற்றியன.

சொற்கொண்ட தமிழ்கண்டாம் பொருள்சொன்ன நயப்புஞ்
  சுவணங்கோ ளெணப்பாணற் கருளிறைதொல் வரமே
முற்கொண்ட விழுமுவஞ்சி முகப்பின்னிளிர் சுசிந்தை
  முதல்விழைவின் மறைவழிச்சங் காமுனிவன் பழிச்சத்
தற்கொண்டார் தானெனற்காந் தாணுமா லயப்போர்த்
  தற்பரசிற் சுகப்பெருக்கா றற்புதமுந் நீர்க்கோர்
நற்கொண்ட லாய்மெய்ந்துண் டுவர்கழி இதெண்ஞார
  நனிபொழிவான் வீரசைவ மணிவளனன் குறவே. (க)

சுகப்பொருட்டோர் விடையுந்து சுசிந்தையெந்தை நேசர்
  தொடர்போங்கல் வரய்மையொழுக் கெழுதருநன் னீத்
சிகப்பொருட்கா முறுகவற்சித் தீக்களைகட் டாக்கிச் [தாச்
  சிந்திபிய ஞானிலத்தி லைந்திணையுஞ் செழிக்க

வகப்பொருட்டுய் துறைகள்பல புகப்பெறவே நிறீஇ
யருந்துநர்க்கா மாரமுதம் பொருந்திநிற்கும் பொலிவே
மிகப்பொருட்பே றெனப்புலஞ்சால் வித்தகருள் வியப்ப
விரிதருநாற் பயனெருங்கே விளைப்பதற்கீண் டுற்றே. ()

சிலம்பகப்பா வகியுல்கைச் சிகியூர்ந்து கோலிச்
சேர்கொடிக்குட் சிவமலைதொன் றிலையெனுஞ்சீர் தெரிந்தே
வலம்பகப்பாங் குயர்தனையே மனமுறைமெய் யொன்ற
மருவிவலம் போந்தகரி மாமுகற்கே மதுர
பலம்பகப்பார்த் துரியகதிப் பரிசுபெற முன்னும்
பரமேட்டிக் கணியாகப் பவந்தெறுஞ்சு சிந்தைக்
கலம்பகப்பா விளம்புதொறு முளன்புகமழ் தாவின்
கவிதைகளாற் றொடுத்தணிந்தான் புவிதவத்துய்பொருட்டே.

திருக்கோட்டாற் றெழுகருணைச் சித்திவிநா யகற்குத்
திருக்கோட்டாற் றெழுதருசீர் வெண்பாவந் தாதி
கருக்கோட்டா வடிவீசற் கிரட்டைமணித் தார்நா
கருக்கொணவ மணிமாலை கவினுளவே மிலைச்சி
மருக்கோட்டாம் பொழிலனந்தைச் சிகண்டே சுரநா
மருக்குநான் மணிமாலை யுருக்கமொடு புனைந்தோன்
குருக்கோட்டா வரகுடந்தைச் சாரங்க மாபு
கூறுநெறி கொண்டொழுகும் வீரசைவக் குரிசில். (ச)

அழனக்கு மாருதகல் லாணிழல்பூம் புனற்சார்
பகனவியூட் பற்றறுக்கு மணிசுசிந்தே சன்பூங்
கழனிற்கு மார்வந்தண் ணளிநீர்காப் பெறுமெய்
கடைப்பிடிப்பான் றெருட்டுநெறி காட்டிடுங்கோ மான்புட்
டிழனிக்கு மாற்றமறச் சுவைப்பலந்தூஞ் சோலை
சூழ்தருகோட் டாற்றுறைவான் வீரைநகர்த் தோன்றல்
[illegible]ழனிக்கு மாதுரியம் பயனயந்துய்த் தோங்கும்
பழனிக்கு மாரனெனும் படிபுகழ்பா வலனே. (௫)

---

திருவிதாங்கூர்க் கவர்ன்மெண்டு தேசூர்ப் பாடசாலைத்
தமிழ் உபாத்தியாயர் ஆச்சிரமம்
மகா-ள-ள-ஸ்ரீ தருமவிநாயகம்பிள்ளையவர்கள்
இயற்றியன.

---

சந்தப் பொருப்பி னிழிபொருனைத் தாக்கத் துறையித்
றயங்கொளிவிண், ணுந்தப் பொருவின் னவமணிமிக் குயர்
பொன் மாட முறுமறுகார், முந்தைப் பெருவீ ரைப்பதிக்கண்
முக்கட் கடவுட் பூசைமுனன், புந்தப் புரிசுப் பிரமணிய
னுயர்மெய்த் தவத்தா லுற்பவித்தே. (௧)

முன்னோர் இயலைந் திலக்கணங்கள் முறையாய்க் கற்றிங் கதன்பயனோ, மன்னோங் கறங்க ளெண்ணான்கு மலியு மனந்தைப் பதியினில்வாழ், மின்னோங் கிடையாள் பாகனென விளங்குஞ் சிகண்டேசரற்கு, நன்னோன் பினினோன் மணிமாலை நாகைக் கினிய நவமணித்தார். (௨)

பன்னும் புகழ்சேர் கோட்டாறும் பதியிற் சித்தி யைங்கரற்கு, மன்னும் வெண்பா வந்தாதி வடிவைக் கிரட்டை மணிமாலை, யுன்னும் பொழுதி னனன்மெழுகோத் துருக வுரைத்துக் கேட்பவர்தங், கன்னங் குளிரக் கருதுநருட் கனியக் கழறிற் றேனூற. (௩)

வேறு

நிலம்பக வேர்வீழ்த் தந்தர மருவி நிலவுபொற் கொன்றைய நிழற்கி, மூலம்புதண் புனலார் செஞ்சடை யண்ண லமர்கயி லாயநற் சுசிந்தைக், கலம்பக மென்னு மரியநூ லிசைத்தான் கவியுறுப் பிலகிடப் பிறந்த, பலம்பெறும் புலமைப் பழனிக்கு மாரப் பாவல னுளமிகப் பரிந்தே. (௪)

வேறு

கன்னிபுரி மேவுமெழிற் கன்னிப் பகவதிமே
லின்னிசைப்பா மாலை யியம்பினன்சீ—ருன்னும்
பழனிக்கு மாரனெனும் பாவல னின்சொல்
லழகிற் ககமகிழா ரார்.

திருவிதாங்கூர்க் கவர்ன்மெண்டு நாகர்கோவில் நார்மல்
பாடசாலைத் தமிழ்முனிசீப் பேய்க்குளம்
மகா-௱-௱.ஸ்ரீ எஸ் குளத்தூரையவர்கள்
இயற்றியது.

---

செம்மணிச் சீர்மெய்ச் சிவதாணு வார்சுசிந்தை
மும்மணி மாலை மொழிந்தனன்—செம்மைநெறிப்
பாவலனும் வீரைப் பழனிக்கு மாருதமிழ்
நாவலப மென்சொல்வே ணுன்,

---

திருநெல்வேலிப் பேட்டை
மகா-௱-௱-ஸ்ரீ ஆறுமுகநயினார்ப்பிள்ளையவர்கள்
இயற்றியன.

---

திருச்சுசிந்தைக் கோயிலின்கண் வளர்தாணு மாலயப் பேர்ச் சிவமெ மாற்குக், திருச்சுசிந்தைக் கலம்பகமும் மும் மணிமாலையுஞ்செய்துஞ் செகத்திற் கோர்மா, திருச்சு சிந்தை வியர்போற்று மருங்கையொரு திணைமாலை செய்க் குச் செய்தும், திருச்சுசிந்தைக் கரைவாழ்கன் னிக்கினிசைப் பாமாலை செய்து மேலும்,

விட்டாற்றுத் தொண்டினின்றே நாகைநவ மணிமாலை விளங்கச் செய்தும், கேட்டாற்றுன் பறும்வடிவைக் கிரட்டைமணி மாலையன்பாற் கிளரச் செய்தும், கோட்டாற்றுச் சித்திவிநா யகர்வெண்பா வந்தாதி குளிரச் செய்தும், ஊட்டாற்று மனந்தைச்சி கண்டரிறைன் மணிமாலை யுவப்பச் செய்தும். (௨)

மலைநாட்டா லயங்கள்பல பாடல்பெறு திருந்தகுறை மாற்றிச் சைவ, நிலைநாட்டாண் மையைத்திகழ்த்தி யுவகை தலை சிறந்தருள்கூர் நெறிக்கண் ணுற்றே, தொலைநாட்டான் பலகவிஞர் நார்ப்பாடிக் கவன்றனவைச் சொல்லித் துன்பத், தலைநாட்டா தெமக்கார்ந்தே வாரதிரு வாசகத்திற் றந்தான் மன்றே. (௩)

அன்னவன்றன் றிருவிரைக் கலம்பகமும் புராந்தக மாலையுமாங் கெந்தாப்க், கின்னிசைப்பா மாலைபிள்ளைத் தமிழினவசெய் தெழிற்பாண்டி யினும்பேர் பெற்றோன், சின்னயனத் திருவிரைத் தவத்துதித்தோன் வீரசைவன் றிகழ் கோட்டாற்றி, னன்னர்வளர் தருபழனிக் குமாரச்சுவாமி யென்னு நாவலோனே. (௪)

உ

குமரன்றுணை.

# திருச்சுசிந்தை மான்மியக் குறிப்பு.

சுசீந்திரமென்பது கன்னியாகுமரிக்கு மேற்குந் தென்கடற்கு வடக்குங் குமாரர் கோயில் வேள்விமலைக்குக் கிழக்கும் மகேந்திரமென்னு மலைக்குத் தெற்குமாய்க் கோட்டாறென்னு நதித்துறையில் நாலுவகைத் தீர்த்தங்களையுடையதாய் விளங்கும் ஒரு மகாசிவ க்ஷேத்திரமாகிய திவ்விய நகரமாம்

இங்கு இந்திரன் தேவகுரவனோடு வந்து பூசித்து, சிவபெருமான் திருவருளால் எத்தேவருமறிய முத்தீ மூழ்கி அகலிகை விருப்பாலார்ந்திருந்த அரும்பாவந்தீர்ந்து பெருஞ்சுசியாயினன். இக்காரணத்தினாலேயே சுசீந்திரமென்றாயிற்று.

அன்றுமுதல் அவ்வமரர்கோன் இத்தலத்தின் மூர்த்தியாகிய அமுதலிங்கேசுரர் பிரிவாற்றாமையைத் தன்னகர்ப் பொருள் பலகொண்டு பூசித்திங்கமர்ந்து வாழ்நாளிலோர் நாள் சுசிந்தைப்பிரானார் கசிந்தவுளத்தராய்ப் "பொன்னாடனே நின்னொடு பின்னமாகாமலங்கமர்ந்திங்கெந்நாளும் வந்து நம்மைப் பூசிக்கும்படி அர்த்தயாமக் காலத்தை நினக்கேயருளினேம்" என்று மலர்வாய்மலர்ந்தருளினார். அவனவ்வாறே நாடோறும் வந்து பூசித்து வருகின்றனன். ஆகலால் இவ்வுலகத்தார் புரியும் பூசைகளில் அர்த்தயாமக் காலப்பூசை இங்கு இற்றைக்கும், இலதாய் நிகழ்கின்றது.

முன்னர் சப்தமுனிவர்களும் கயிலாயத்தையடைந்து தன்னைத்தான் பூசிக்குந் தகைமை வேண்டித் தவமியற்றக் கயிலாயபதியார் மகிழ்வோடெழுந்தருளி "முனிவர்களே! ஞானகானனமாகிய தென் கயிலாயமென்றொரு தலமிருக் கின்றது. அங்குச்சென் றித்தவமியற்றுவீராகில் அங் கருள் செய்வோ"மென்று திருவாய் மலர்ந்தருளினார். அவ் வாறே அம்முனிவர்களிங்கடைந்து நோற்றுப் பெற்றனர். இதனாலேயே இது தென்கயிலாய மென்பது தெள்ளிதின் விளங்குகின்றது.

இத்தகைமைகளன்றி, அத்திரி முனிவர் பத்தினியோடும் ஆச்சிரம முற்றதும் அவ்வத்திரியாரது பத்தினியாராகிய அநசூயையார்பால் அயன் அரி அரனென்னும் மூவரும் அருங் குழவிகளா வமைந்ததும் பின்னர் அம்மூவருமே தௌத்தாத்திரையன், சந்திரன், துர்வாசன் என்ன மன்னி யதும், வியாசன், வசிட்டன், வாமதேவன், பூசித்ததும் நம்முதலிங்கேசரது திருமுடிக் கங்கை முக்கணீராயுற்ப வித்து, சத்தியலோகம், பாதாளம், தென்கடல் வழிச் சென்றதும், அரசு, துளசி, கொன்றை, வில்வம், ஆர்ந்தன வும், அயிராவதம், அகத்தியர், நித்தியகன்னியர், தெய்வ தச்சன், உச்சைச்சிரவம், யாக்கியவற்க்கி, சனகாதியர், சங் கராசியர், மூப்பூவேந்தர் முதலாயினோரு மற்றோருரும் பூசித் துச் சித்திமுத்திகள் பெற்றனவும், இக்கயிலாயமாகிய சுசீந் திரத் தலபுராணத்திற் பார்த்து கிடக்கின்றன.

இவைகளிற் சிலவற்றை யெளிதிற் பொருள் விளங் கும் உலகவழக்கச் சொற்களினாலேயே, குறிப்பாக இக் கலம்பகத்திற் பெரும்பாலும் வருவனவழிக்கண்டுகொள்க.

சுபம்! சுபம்!! சுபம்!!!



உ

குமரன் துணை.

# திருச் சுசிந்தைக் கலம்பகம்.

---

## காப்பு.

நேரிசை வெண்பா.

வலம்புரியோன் வேதனொடு வானவரு மேத்தும்
வலம்புரியே ரம்பனடி வான்பூ—நலங்கொள்
சுசிந்தைக் கலம்பகநூற் சொற்பொருளோ டேற்குச்
சுசிந்தை தருவான் றுணை,

## நூல்.

மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

1. உலகேழும் பிலமேழு முவந்திறைஞ்சு முயர்வுடையோர்
தலமாகுந் தரையிடத்தத் தவளவரைத் தகைமையதாம்
வானவர்கோன் றனதுரிய வளநகர்க்கும் வளமெனவிஞ்
ஞானவனந் தனிலமைத்த நலமிகுதென் சுசிந்திரமென்
றூரணமும் புகழ்நாமந் தருட்பதியி னவனேத்தும்
பூரணனுந் தாணுவெனும் பொருவிடைமேற் புண்ணியனே.

2. நெடியவனுந் திசைமுகனு நெடுநாளாத் தினந்தேடி
யடிமுடிக ளறிவரிய வழல்வடிவா யமர்ந்திடுநீ
யரியதவ முனியாகு மத்திரியோ டருந்தவரு
முரிமையொடு கண்டுதொழுற் குவர்களொடு மொருவனென்
மூவுருவ மோருருவின் மொய்த்திவணீ நின்றனையாற்
றேவர்தொழ வித்தலத்துன் றிருவருளின் றிறமென்னே.

இவையிரண்டு மாறடித்தரவு.

1. இனையளவு மெண்பகர்ந்தெச் சீவருக்கு மவரவர்செய்
வினையளவிற் சன்மம் விதிக்கும் பெருந்தகைநீ
மனையறத்தி னின்றவொரு மாமுனிவன் கைத்தலத்திற்
புனையரவ மதிகரந்தோர் புகழ்புனியா யுதித்தனையே.

2. மூச்சுடரைக் கண்ணாகக் கொண்டு முழுதுலகு
மச்சமறச் சிரொளியாக் காட்டிநிற்கு மன்புளனீ
யிச்சகத்திற் பூசிப்பா னெய்துமுனி வராஞ்ச
வச்சுவத்தத் தோரொளிய தாகி யமர்ந்தனையே.

3. நான்முகனும் பாற்கடலார் நாரணனுந் தானுரைத்த
நான்மறையுஞ் செய்கின்ற நற்பூசை கொள்ளுநீ
வான்மருவும் ஞான வனத்திலுயர் முனிவரர்க்கா
மான்மழுவு நீத்துத்தான் மாபூசை செய்தனையே.

இவை மூன்று நான்கடித்தாழிசை.

அதான்று—இது தனிச்சொல்.

1. பதிபல வுறுமெழு வகையுல கமுமிடைப் படவுளி மிக
மெழுமுடி, மதிநதி யரவொடு மதுவொழு கிதழிபல்
வகைவகை மலர்புனை வுறும்.

2. கதியறு படுதிரி புரமவு ணர்களொடு கருகிட வொளி
மிகு நகை, மதிமுக வறம்வள ருமைகளி கொளவருள்
வளரிள நகைநனி செயும்.

3. அடலொடு விதிதலை விரலுகிர் கொடுதிரு கலரவிழ் ம
ரைநிகர் கரங், கடலன வருள்பெறு சுசியிலெ தெனவு
யர் கழலடி நிலைகுறி தரும்.

4. அடியெழு தலமது மரையென வளரிய மனிதனுடல் வி
ழவுறை பத, மிடிபட நனிதுனி பழிபடு மடியவ ரிட
மென வவர்புக மிகும்.

இவைநான்கு மீரடியராகம். அதனால் இது தனிச்சொல்.

1. பூதங்க ளோடுகலை பொருந்து மதியிரவி
யேநந்தி நான்மாவோ டெண்மயமு மாருநீ.

2. வரன்மா லுருத்திரன் மகேசன் சதாசிவம்விந்
தருநாதஞ் சத்திசிவ மாகுநவ வடிவுநீ.

இவையிரண்டு நாற்சீ ரீரடியம்போதரங்கம்.

1. ஆணொடு பெண்ணென லன்றென னீயே.
2. ஆணொடு பெண்ணுரு வானது நீயே.

3. தாயொடு தந்தையி லாதவ னீயே.

4. தாயொடு தந்தை தமரென னீயே.

இவைநான்கு நாற்சீரோரடி யம்போதரங்கம்.

1. வேதமதாதலு நீயே.
2. வேதம தோதலு நீயே.
3. போதம தாதலு நீயே.
4. போதம ளித்தலு நீயே.
5. புவனம தாதலு நீயே.
6. புவனம ளித்தலு நீயே.
7. அவரிவ ரென்றலு நீயே.
8. அவருளி னிற்றலு நீயே.

இவையெட்டு முச்சீரோரடி யம்போதரங்கம்.

1. பொன்னு நீயே.
2. பணியு நீயே.
3. புதிய னீயே.
4. பழைய னீயே.
5. உடலு நீயே.
6. உயிரு நீயே.
7. ஒளியு நீயே.
8. வெளியு நீயே.
9. அகமு நீயே.
10. புறமு நீயே.
11. அறிவு நீயே.
12. அறிவ னீயே.
13. பசுவு நீயே.
14. பதியு நீயே.
15 பகவ னீயே.
16. பரம னீயே.

இவை பதினாறு மிருசீரோரடி யம்போதரங்கம்.

எனவாங்கு இதுவுந் தனிச்சொல்.

பெரும்பொரு ளிதனினும் பெரிதிலை யெனவிங்
கரும்பொரு ளின்பம்வி டளிக்குதல் வகையா
துன்னிய வறிவா ளுற்சட டெளிந்த

தண்ணிய வளத்திற் றுவில தாவுள்
பொருணிலை புணர்ந்து புவனபோ கத்தை
வெறுத்துநின் னின்பம் வேண்டிப் புசிக்குந்
தொண்டர்க டிதிக்குஞ் சோம சேகரா
புண்டா ரதல்விழிப் புனிதா வடியேன்
மனத்தினி லொருவர மதித்தலை வேண்டினே
னப்பொரு ளரியது மிக்கது நிற்கிலை
செப்பிடி னெளிதலை தொப்புமை யில்லா
வனதுக் கமலமென் மனக்குள மலரப்
பழைய தொண்டர்தம் பக்க மாக
வருமென லெளியே னுதவி
னருளுள மிரங்கி நீ யருளுதல் கடனே. (க)

## நேரிசை வெண்பா.

கடனஞ் சயின்றமரர்க் காத்தோய் சுசிந்தை
நடனஞ் சபிலமக ணச்சும்—படனஞ்சப்
பாம்பம் புலியுட் பதுங்குஞ் சலியாம
லோம்பும் புனன்மகட்கென் னோது. (உ)

## கட்டளைக் கலித்துறை.

ஓதா துலக குணக்தோர்ந் தளவினின் பூட்டியென்றும்
வேதா துணவன் றமவாய்ச் சுசிந்தையின் மேவிநின்ற

தாதா ரிதழித் தலைமாலைத் தாணுவன் றண்கழற்சீர்
போதா லருச்சித்த லாம்வாய்மை கூறும் புகழ்ச்சொலுமே.

காட்சி.

கட்டளைக் கலிப்பா.

சொல்லி யம்பருஞ் சோதி சுசிந்தையிற்
சூரி யன்கதிர் வீழ்தபு சோலையோர்
வல்லி தன்றலை மஞ்சடர் தாலமும்
வாரி சங்கு வளையுங் குமுதமும்
பல்லி லங்கித ழின்றிய பூந்திலம்
பான்மு கைத்தள வங்களுங் கொண்டவவ்
வெல்லி லங்குமி னேந்திய தாண்மல
ரென்ன வோர்கூட ரென்றன்மு னேர்ந்ததே. (௧)

(புயவகுப்பு) வண்ணம்.

நேரில ருட்கப்ப ணைத்துக்கு டைந்தளி
நீலரி நக்கிப்பு சிப்புக்கொ டும்பைக
ணீமம துற்றுச்செ ழித்துப்பு சண்டிட
னேயமி கப்பொற்பொ ருப்பைச்சு மந்தன
வூரிமு ழக்கிக்க லக்கற்பெ ருங்கட
லூறிய நச்சுக்கு வப்புற்று யர்ந்தன
வூனமம கட்குத்த விர்த்திட்ட தொண்டர்சொல்
லூசிய டித்துப்பொ றித்தற்கெ ழுந்தன

வாரிய லேப்பப்ப தைப்புற்ற ருஞ்சிவை
வாரொடு கட்டிப்பி டிக்கக்கு ழைந்தன
மாவெள டுக்கற்ற லேப்பத்தி னன்றொட
வாமிக டுக்குற்ற ணேக்கச்சி வந்தன
மூரிய லேப்பட்ட ழிக்கற்கெ ழுங்கடன்
மூளம ழுத்தொட்டு ருத்திச்சு சிந்தையை
மூழ்கற வித்துச்சி றக்கப்பு ரந்தவோர்
மூவிழி யத்தற்ற டப்பொற்பு யங்களே. (௫)

ஐயம்.

கலிநிலைத்துறை.

புயங்க கங்கணத் தானுவன் சுசிந்தையம் பொழிலி
னுயங்க வென்னுயிர் வாங்கிட வுதயன்சே யியமன்
மயங்க வீசிய வலேசொலோ வெனவுறு மின்னிற்
றயங்க வான்புனன் மலர்கொலோ தகவறி கிலனே. (௬)

(அம்மானை) மடக்குத்தாழிசை.

அரிய சுசிந்தைநக ரழியாம னம்பரனு
ரெரியு மழுக்கடவி னேவினு ரம்மானை
யெரியு மழுக்கடவி னேவினரே யாமாகிற்
பெரிய கடற்புனலுன் பின்னேதோ வம்மானை
வருணனுர் வாழ்த்த வழங்கி னர்கா ணம்மானை. (௭)

# திருச் சுசிந்தைக் கலம்பகம்.

## கலிவிருத்தம்.

அம்மான் மகனைத் தெறுமங் கணுதற்
செம்மான் மழுவுந் திடுசெங் கரனைத்
தம்மான் புகழ்சார்ந் தசுசிந் திரமே
யெம்மான் கழலெட் டுமிறைஞ் சிடுவேன். (க)

## தெளிதல்.

### பதினான்குசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இரவினிற் றனிமேய் புவிமகன் முடியி
னிணையடி மலர்புனை வுறவே
யெழிலுட னடந்து பரவையை யுளத்தி
னிகறவிர்த் தொருவனுக் கிணைக்கும்
பரமனற் பசிய துளவணி கடவுள்
பங்கய னிவரொடு முறையும்
பகருதற் கரிய புகழ்மலி சுசிந்தைப்
பணிவரைப் பைம்பொழி லகத்தே
வரசெழிற் கொடிகொன் மலர்மகள் கொலலை
மயங்குறத் தோன்றிய விவடன்
வரிவிழி யிமைத்து மணிலடி பொறுத்து
மலர்குழ லினிஐயங் கிபுங்கண்
ணெரியழற் கொடிய வரவரி யன்னை
வேர்த்தி னிறம்பிறழ் வதுமா

மியல்பின ளானம் முடனுயிர் பொருளா
யிசைந்தமின் னெனமனந் தெளியே. (௯)

நயப்பு.

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய வண்ண விருத்தம்.

தெளியுந் திறமய விளைவென் றவருறு
சிவசங் கரனொர்சு சிந்தையினி
லொளிருந் தனியெழி லொடுநின் றவரிடை
யுறலின் றெனவுழ னெஞ்சயரென்
களிறுந் திசைபுக மிளிருந் தனமவை
ககனந் திரிவரை யின்செயலி
னளினந் தருகழ லொடுசென் றனவன
நடைகொண் டிடினுள தென்றறியே. (௧௦)

நேரிசை வெண்பா.

அரவம் புனைந்த வரனார் சுசிந்தை
பரவன் பினர்பாற் பரிவு—மருவிச்
சுரருஞ் சமனுந் தொழமேவ யருள்வார்
பரமன் றனதொண் பதி. (௧௧)

நேரிசை யாசிரியப்பா.

பதிபசு பாசமு மாகித் தனியாங்
கதியென் றெவருங் கருதா நின்னைக்

கவுதம முனிவன் காதலி தன்னைக்
களவி னச்சிய கசட றுப் பானீ
தெத்தலங் களினு மிக்க தென்ற
குருமொழி கொண்டிங் கவனொடு குறுகி
வேத்திரப் படைமுதல் விளம்பிய வாறுய்த்
தேருநீ தெனத் தெரிய நின்றவ
னோராக் கண்ட கோரக்க வரையி
னயிரா வதக்கோட் டாற்றட மளிப்பித்
தவ்வயி ராவத வருஞ்சுனை யாடிச்
செவ்விய பூசனை செய்திவண் சேர்ந்தவ்
வருமையிற் சிறந்திடும் யானையைப் பணித்தது
குறுமுனி யுறையுங் குவட்டுக் கங்கையைக்
கோட்டாற் குத்திக் கொணரு மந்தக்
கோட்டாற் றின்புனல் குளிர வாட்டித்
தன்னகர்ப் பொருள்வழுத் தவிர்ந்தன வருத்திப்
பூசனை புரியும் புரந்தரன் றன்னை
யாசிலந் நந்தியா லயனரி யாதியாந்
தேவரை வருத்திச் சேர விருத்தி
யாவரு மறிய வனவினை வளர்த்தத்
தீக்குளிப் பித்தத் தீமையை யொழித்துப்

பின்பவன் றனக்குநீ பேசிய வாறு
யன்பொடு தெய்வக் கம்மியை யழைத்துக்
காடது முறித்து நாடது திருத்துவித்
தன்பொடு பூசை யியற்றவுள் ளுவந்தங்
கமுதலிங் கத்துணின் றருள்வடி வெடுத்துக்
கடலது பொங்கிக் கரைபுரண் டன்ன
வுடலொடு முளத்தொடு மொழியிலா னந்தக்
கலிகொள வாயிரங் கண்க ளாலும்
பருகிப் பாடிப் பரவ முன்னின்
றருள்புரிந் தமருமோ ரமலனென் றெவரும்
பரவுஞ் சுசிந்தையிற் பரமா தமியே
னுரைக்கொணாக் கொடுமைக ளுடையே னதனைக்
கரைக்குமா றறியேன் கார்கோ ளுலகி
லவரவர் நினைவுபோன் றன்புரு வாகித்
தனியருள் புரியுந் தயாளுவா நீயே
திருக்கடைக் கண்கொடென் மறுக்கந் தவிர்த்தென்
முடியினின் னடிமலர் முடித்துக்
கடிவிலவ் வடிநிழற் கதியருள் புரியே. (கஉ)

உட்கோள்.

கட்டளைக் கலித்துறை.

புரியுங் கிடைப்பரன் பூந்தண் சுசிந்தைப் புகழனையா
டிரியுங் கயற்கண்க ணெஞ்சக் குறிமுகந் தேற்றுதல்போற்

றெரியுங் குணத்தின் விடமே கலந்துசஞ் சீவியெனக்
கரியுங் குறியுமா நாணன் பிணைமின்னிக் காட்டியதே. (கங)

(மறம்)

பதினான்கு சீர்க் கழிநெடிலடி யாசிரிய வண்ண விருத்தம்.

காட்டு தற்குமுறை நாட்டு தற்குமரி
தோத்தி னுக்குமென மிஞ்சுகண்
காட்சி மிக்குமர னாட்சி பெற்றுலகு
காக்க வுற்றிடுசு சிந்தைசூழ்
காட்டு வெற்பினரி கோட்டி பக்கரடி
காத்ரி புக்கிடப ருக்கொடேண்
காற்புள் கொக்குநரை கார்ப்புள் சக்ரமயில்
காக்கை பற்பறைய றைந்துநீள்
ஓட்ட மொட்டொடொளி போட்டு விற்கணைக
டாக்கி யுட்குரல லம்பிவன்
சாட்டி யக்கயிறு மாட்டி மொய்ப்பவிரை
சாத்தி யெற்றுமற வன்பர்யாக்
தாட்டி கக்குமர வேட்க ளிப்பலதி
யார்க்கு மொட்டிலெமர் பெண்கொளச்
சாற்றி விட்டமதி கோட்டனைச் சொலிக
றாக்க வித்தகனி ளங்கவே. (கச)

(இதுவுமறம்) பதினாறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வித்தகத்தின் பலமலிமாம் பொழிற்சு சிந்தை
விமலனுதல் விழிமுளைத்த வீரன் றன்னால்
வெள்ளியபல் லுதிர்ந்துவிண்ணிற் றிரியா னோடும்
வெட்கமிலா வெய்யவன்றன் குலத்துள் ளானை
முத்தையொத்த கலைகுலைந்து பகன்ம றைந்து
முறைதவறி யிரவுலவு முயலின் கூட்டின்
முதல்வனை யுலகியலாற் குறவர் தங்கண்
முறைபெறுநல் வழக்கறியா தெம்பெண் வேட்கைச்
சித்தமுற்று நினைவிடுத்தான் முடங்க றன்னைத்
திருமுகமென் றொருநாம மென்முன் பாகச்
செப்பியநின் முகத்தொடுவாய் கிழிந்தி டாமுன்
றீட்டியவ னென்முகனாங் கிழித்த தாய்நீ
பித்தலத்தி னிக்கணத்தம் முடங்க லாகு
மெழின்முகத்தைப் பலகூறாக் கிழித்தாங் காற்றி
னெதிரெறிந்து வித்தகனை யெனைவிட் டானென்
றிசைத்திடுவாய் தூதவப்புன் சகியுள் ளாற்கே. (கரு)

தெய்வம் புகழ்தல்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய வண்ண விருத்தம்.

சகியுந்தனி நயமுங்கன தனையும்பெரு நிறையுந்
தழையுங்குண முளனென்றுளி னறியும்படி தனியாய்

நலமிஞ்சிய வுழையன்றென நகைகொண்டுறு மிவளை
நயனங்களி னெதிர்கண்டிட நலமிங்கிலை முனையீன்
றவமென்றுன வருடங்குள மொடுதங்கிடு மிதழிச்
சடிலந்தனி னதிபம்புலி தளிரம்பணி யுடனே
புவமந்தப வளரன்பினொ டுசுசிந்தையி னுறையெம்
முமைபங்குறு பரமன்கழ லுளிலென்றுமுள் குவனே. ( )

## நேரிசை வெண்பா.

உள்ளுவதும் விள்ளுவது முன்றனையா மற்றவெலர்
மெள்ளுவதுந் தள்ளுவது மேற்றுணவாக்—கொள்ளுநரைக்
காத்தருளுந் தென்சுசிந்தைக் கத்தாவே ஏவழியுன்
தீர்த்தமெழுந் தோடுவதென் சீர். (கஎ)

## (மதங்கு) பதினான்கு சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சீரிலங்கு தேவ தச்சன் செய்த பூசை கொண்டவன்
தீமையோட வாட வாறு திரிவிதத்தொ முக்கொடார்த்
தாரிலங்கு வேணி யண்ணல் றன்க ளுன வணிகர்வாழ்
சாலி சூழ்சு சிந்தை வீதி சயில மாதொ டந்தர
தூரி யங்கள் பாரி யங்க ளேங்கி னங்க ளோங்கவே
தூய வானின் மேவ வம்மரு ஈவனா மேரி நண்டென
வாரணைந்தி ருக்கு நின்ற வான்மி னென்ன வாடுமோர்
மாம தங்கி யிடைவி ளங்கின் மாய்வ ரென்பர் மயலரே

துணிதல்.

தரவு கோச்சகக் கலிப்பா.

மயிலினங்கள் குயிலெனவே மதித்துவந்து கலிந்தாடக்
குயிலினங்கள் குறையிரப்பக் குழலிலங்கக் குரலினின்ற
பயிலினங்கு நிலையினுடன் பரனருளாற் சுசிந்தையினை
நயலினங்கு கொடியவன்போர்கடத்திடுங்கொன்னாரமனமே.

வியத்தல்.

கைக்கிளை, மருட்பா.

மணங்கமழுங் கந்தன் மலர்த்தாரும் வாடு
பிணங்கயில்வேற் கண்க ளிமைக்குங் — குணங்கொண்
டிப்பார்ப் பரன்சு சிந்தை யோர்போ
லொப்பாரின் மாவெழிலா யோங்கினளே கோலோ. (௨௦)

மகிழ்தல் நேரிசை யாசிரியப்பா.

கோலென் கோடுங் கொடுமர மென்னே
வேலென வாளென் வீரம் மென்னே
கோலே கோடிற் பாயா கோடா
மேவிக் குற்று வெட்டா வெல்லா
5. வாயி னிவையோ வரிய வாகா
வென்றுள் ளிகழ்ந்தி லேசாக் கொண்டு

தன்னுணை யாகச் செங்கோ லோங்கிக்
காடே மலையே கடலே நாடே
வீடே யாக விரைவி னோடித்
தன்னுயிர் போல மன்னுயிர் புரந்து
மன்னுயி ரெவணினு மறைப்புகன் மாற்றமுந்
தன்னுட் டெரியுஞ் சத்தியாய் நாளு
நலங்கெழு பூசையி னம்ப னடிக்குஞ்
சிலம்பொலி கேட்குந் திருச்செவி யவனைப்
பெருமைப் பாணன் பெறப்பொன் னுதவென்
றொருப்தி யுற்றுப் பரமன் னுயர்வாந்
திருமுகங் கிட்டிச் செலுத்தப் பெற்ற
வருண்மன் னண்ட வறன்மலி நாட்டி
லெண்ணிரு கண்கொளு மீரா றுறுகட்
பன்னிரு தோளென் மன்னு மருங்கையு
மவிந்தார்க் கருளுமப் பதிகண் டார்கை
குவிக்குங் கன்னிக் குமரிக் குடியுந்
தன்னொரு பங்கின் மன்னு மால்வாழ்
பன்ன வரிய பறக்கையுங் கூறவர்
தாகத்தின் வளர்த்த தனிபுழைக் கிளமகள்
பாகத் தாகிப் பரிக்கருள் செய்து

மேவிய குமரன் வேள்விக் குவடும்
வடிவகி ரிணைவிழி வடிவொடு சோதி
ளமொடு வளரும் வடிவையும் புத்தொடு

தளிர்பர னுறையு நாகையுந் தன்னைச்
குழுற வாய்ந்த சுசிந்தைப் பதியில்
வாழும் வெண்டண் மதிமுடிக் கடவுள
ரருளா ரின்ப வானந் தத்தேன்
பருகினர் போலப் பானுவு மதியு

நாளும் படியா நாளிரு பொழுதுங்
காண மலருங் கமலங் குமுதங்
குவளை முகம்வாய் கூர்விழி யற்புதத்
திண்மலர் நான்மண மென்னக் கலந்த
சுவைமிகு மின்பந் தோன்றிட லென்னே

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீரென வழங்கிய
வையரை யவனியி லறிஞர்க ளறைந்த
பொய்யா மொழிப்பு லவரெனும் புகழை
மெய்யே யாக வையமற் றிங்கின்

றிவள்பா லுணர்ந்தன ளென்னி
லெவர்புகல் வாரக வின்பொரு டெரிந்தே. (உ௮)

## குறளடி வஞ்சிப்பா.

தெரியும்பொரு டெரிவிப்பவர்
தெரிகின்றவர் திரிபற்றவர்
புரிபஞ்சடை புனல்வைத்தவர்
புரிமொய்ம்பொடு புரளுற்றவர்
பரிவின்றிகழ் பரசுற்றவர்
பரவன்பினர் பவமட்டிவ—ரெனவாங்—
கெழிற்சுசிந்தைபி னிறைவர் தங்
கழற்பங்கயங்கள் கருதுதல் கதியே. (உஉ)

## நேரிசை வெண்பா.

கதியளிக்குந் தென்சுசிந்தைக் கத்தனே நீயிப்
பதியினுக்குத் தென்கீழ்ப் படியிற்—றுதிக்க
வகத்தீ சுரனென் றருள்விளக்க வோதல்
லகத்தீ சுரற்கருளு மாறு. (உங)

## இருவயினொத்தல்.
## கட்டளைக் கலித்துறை.

ஆராயினெம்பர னாருள் பெற்றா ரருட்கவிகள்
சீரா ரெழிற்பொருள் சிந்தித்துச் சிந்தித்துத் தேறுந்தொறுங்
கூரார்பொருள்பல வாம்போ லிவளின்பங்கொள்ளக்கொள்ள
வேரார்சுசிந்தையின் முன்னன்னைமேயய்ந்திங்கெழுகின்றதே.

## கிளவி வேட்டல்.

### பன்னிரு சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

எழுதாக் கிளவி தொழுதேத்து மெம்மான்
சுசீந்தைப் பதியதனி
லெழின்மன் னுறமெய் வீழ்ந்திறைஞ்சி
யெழுவார் நுகரு மின்பமென
வழுவாக் கரணம் பற்பலவு மருமங்
கவில முதவிடமும்
வரிசை நிலைகள் வழுவாமன் மலிவா
மின்பக் கடலதனை
நழுவாக் கருணை யுடனளித்தாய் நம்பே
றெனையோ வென நுகர்ந்த
நாமெய் யெனநின் கனிவாயி னறவார்
கிளவி பருகிடவே
வழுவாற் செவிக ளுற்றனவர் துன்வாய்த்
தரள முதிர்ந்தாலு
முடனே புரக்குஞ் செயலுள்ளு துதவா
யென்ற னுயிர்த்துணையே. (௨௫)

### இணைக்குற ளாசிரியப்பா.

துணைநமக் கிவனலா திலையெனச் சொலியு
மிணையிலா வடியார்க ளிறைஞ்சுத லறிந்தன்

கவட்டிவர் வழுவுறுக் கவியெனப் பிடியா
தவப்படத் திறந்திடு மடமெலா மலையும்

ஞமலியிற் றிரியுமென் மனனே
புயலது மருவிய பொழில்களுந் தவாஅப்
பொழில்பல வளைஇப புலங்களு மிகாஅப்
புலங்களி னுலாவிடும் புரிவளை களுமிவை
ருலொடு துறைவழி தொடர்ந்துவந்

துயிர்த்திடு மணிகளி னொளியுஞ்
செறிந்திவ ணிறைதலிற் றிகழ்வான்
யாறுடைந் கருநிலை யழுந்தறு தடநிதிக்
குடவளை யுடுவகைக் குருமுத வியசுர
ரெனப்பொரு முலகென் விசைந்து

தனியெழில் குலாவிய சதிரார்
சுசிந்தையைத் துறந்தது மேவனே
யத்தலத் தவனெனு மனன்மழு வலத்துக்
கத்தனைக் கரந்தது மேவனே
பிறப்பெனும் பெருங்கடல் கடத்திடற் கிவணொரு

மரக்கல மெனக்குறிப் பிறந்தது மேவனே
யந்தக னிரவியா மனவுகா லதனு
னந்தநா ளளத்தலை யறிகிலா தெவனே

சென்றநாள் வருஉமெனும் வருஉநா ளுளவெனு
மிங்கிலை யெனத்தெளிந் தமைய
நலம்பெறற் கிதுவென நணியருட்
டொடர்ந்திடா திருந்தது மெவனே
யெனப்பல விதத்தினு மனத்தினைத் திருத்தித்
தன்மைய மெனவே
நின்றிவ ணிரந்திடு நெறியுடை யவருக்
கருளது புரியுமோ ரமலா
விருளுளத் தொடுதிரிந் தெனைத்தையு மறியே
னுய்வகை யறிதரா துழலுவர் தமைவயி
னாதரித் திடுதலே யரிய
காதலி னெனைவயிற் றடிமைகொண் டருளே. (௨௬)

### நேரிசைச் சிந்தியல் வெண்பா.

கொள்ளத் தருவான்றன் குஞ்சிதபா தஞ்சுசிந்தை
வெள்ளத் தலைப்பரமன் மெய்ப்புகழ்நெஞ் — சுள்ளத்தின்
கள்ளத் தருக்கறுத்தக் கால். (௨௭)

நலம்புனைந் துரைத்தல்.

### (வண்டு) தரவு கொச்சகக் கலிப்பா.

காலமலர் மலர்மணங்கள் கண்டறியும் வண்டினங்காள் [ள்
பாலவிழிப் பரன்சுசிந்தைப் பைம்பொழிற்கட் பணிமொழியா

கோலமுறும் பவளவிதழ்க் குமுதமணம் போலிமருதஞ்
சிலமலை முலைசமப்பாற் றெரிந்ததண்டேற் செப்புகவே. ()

பிரிவுணர்த்தல்.

கட்டளைக் கலித்துறை.

செப்போ விலங்கைத் தரத்தாவி தானிற்ற செம்
பொனைக, மொப்போ விலங்கைத் தனக்குடங் கண்முத் தூதி
ரப்ப தென்னென், றப்போ விலங்கைத் தவத்தார் மின்னே
னினைத் தான்பிரிந்தாற், றுப்போ விலங்கைத் தருவேண
மத்தன் சுசிந்தையினே. (௨௧)

வெண்செந்துறை.

சுசிந்தி ரத்தினிற் றெல்லுமை பங்கனைக்
கசிந்தி றைஞ்சல் கருத்துக்கு வந்ததே. (௩௦)

கலிவிருத்தம்.

வந்தனை யோடுவ ணங்கறி யேனைக்
கந்தனை யீன்றசு சிந்தையங் கண்ணு
நிந்தனை யாமெனை நேர்மய னீக்கிச்
சிந்தனை நின்னடி சோர்ந்திடச் செய்யே. (௩௪)

வஞ்சிவிருத்தம்.

செய்ய சோதிசு சிந்தையின்
பெய்ய வென்றனை வேண்டுவ

னய்ய வேமனெ னந்தகாட்
செய்யு மூறு சிதைப்பவே. (ருஉ)

(சம்பிரதம்) பதினறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சிதையாத புதுமைபல செய்வோ மிந்தச்
செகத்தி லுள்ளோ ரதிசயிப்பச் சுசிந்தை மேவுஞ்
சிவதாணு வெனும்பரம னருளி னலோர்
செப்புக்குள் ளடக்கிடுவோங் கயிலா யத்தைக்
கதையோவில் லொருகையினற் கனக லோகங்
காணவெடுத் தெடுத்துமுன்னே காட்டு விப்போங்
கடுகிலொரு வாயில்பல வரவங் காட்டிக்
காதுகளுக் குள்ளிடுவோங் கண்முன் பாகப்பல்
விதமான வாவிபிந்த மண்ணிற் காட்டி
விளங்கவொரு வீட்டினுக்குட் புகவுஞ் செய்வோம்
விருப்பொடுமா காயமதை யருந்தென் றூலும்
வெருளாம லொருகொடியி னருந்தி நிற்போம்
பதராமற் பலகலைக ளுலகிற் காண்போம்
பரிவினர்க்குப் பகர்ந்திடுவோ மெந்தநாளும்
பதியிலுண்ணேஞ் செயலுஞ்செய் திடுவோம் வித்தை
பாரினம்போ லெவர்புரிவார் பகருங் காலே. (ருரு)

பருவரலறிதல்.

வண்ணம்.

பாகருப சுங்கிளி பூவைக ருங்குயில்
பகமயி லன்றிலு ளானரை துன்றிடு
பதுமவ ணஞ்சிவ லாதிய லம்புறு
பதமுறு கந்தர மோடுவி ளின்றெழு
பனிமல ரின்கனி தேனுறை மிஞ்சிய
பசியவி ளம்பொழி லேறுசு சிந்தைம கிழ்ந்தாரும்

நசமக ளும்புன லாமக ளுங்கலை
நணியவி டங்குறை வாமதி யின்றலை
நணிபகி ழும்பா ஞைரம றந்தவர்
நடலைய ருந்துவ ராகவி ளங்கொளி
நருமொள்ப ளிங்கினு ளேதெரி கின்றதி
னலிவுவி ளங்குவ தாகவி லங்குமு கங்காணச்

சுகமொழி செந்துகிர் வாய்தர ளம்பலொர்
துடியிடை வென்றிவ ளுவிசெய லுங்கொடி
துயருற வென்சொலி னைபிரி வென்றொரு
தொடர்மொழி கண்டவ ளாகிய தன்பொரு
டுணைபெறு மென்றுனி யோபிரி வென்றெனி
அகலறு மன்பல னும்மன னெஞ்சமு மூன்றேயோ

சதுமிக முப்பழி தானுறு மென்றுகொ
றமருமி கழ்ந்திட வாடிது வென்றுகொ
றனைநிகர் துன்புள மூடுவி ளைந்திடு
சலனமி தென்றறி யேனிவ டன்னுயர்
தவிரநி னைந்திவ ளோதுநி கழ்ந்தவை
தயவின றைந்திடி னேதுய ரின்றுத விர்ந்தாளே. (௩௪)

குறளடி வஞ்சிப்பா.

தவவரனவர் தங்கோனது
பவமாய்வுசெய் பண்பேயென
வவனைசுசீ னலங்கொரு
தவனூரவ டன்றீமையு
மொழிவேய்புற வோமம்பெறு
குழியாடெனல் கூறுஞ்செய
லதிபாவமிஃ தென்றேமறை
விதிவிண்படு மென்றேதெரி
வுறவாங்கு
செய்வதென் சீர்மலி சுசிந்தைத்
தெய்வநா யகனெனுஞ் சிவகுரு பரனே. (௩௫)

நேரிசை வெண்பா.

குருவே சுசிந்தைக் குளக்கண்ணே முத்தித்
கருவே கதிநிழலாஞ் சம்போ—திருவா

ருருவே யுருவி னுயிரே யொளியே
கருவே ரறுத்தென்னைக் கா. (௩௬)

அருட்டிறமுரைத்தல்.

எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

காத்திடு மிருளை தமரறிந் தென்னுங் கடம்பிரண் டோருயி ரெனநா, நீத்திடல் பிரிவோ வினைதலென் னீயென் னேரிழை யேமட மயிலே, வேத்திட வெவர்க்கு மிகபர மளிக்கு மெழின்மிகு சுசிந்தையி னிறையாய், மாத்திரை யளவு நம்மன மகலான் மலரடித் துணைநமக் குளதே. (௩௭)

இடமணித்தென்றல்.

நிலைமண்டில வாசிரியப்பா.

நம்பி னார்க்கிங் கின்பே நல்கு
நம்பி டார்க்குத் துன்பே நாட்டுந்
தென்சு சிந்தைத் தேவ தேவ
னன்பி னுறு யார்க்கு நீங்கிப்
பொற்பார் வேலை வற்கே சொந்த

வெற்பி னேர்ந்து விண்ணு ளோங்கு
நாங்கு வேங்கை நாகந் தேக்கு
கோங்கு சந்த மாதிக கோடரப்
பூவுந் தாதுந் தேனும் பொங்கி
மேவிச் சிந்தி வாச மிஞ்சு

பஞ்சாச் சேர னும் பூவி
னஞ்சங் கொஞ்சுங் கஞ்ச வாவிப்
பினங் கூந்தற் காப்பேர்க் கஞ்ச
மானனத்திற் காவாய்க் காப்ப
லாய்ந்த கண்கட் கார்ந்த நீல

மேந்து கொங்கைக் கேர்நேர்க் கொப்பு
ஓங்கி யேகச் சேர்ந்தே யாடிச்
சார்ந்த நீரா ளார்ந்த வாசம்
வீதி யெங்கு மேவ மாடத்
தோதி நீவு மாதர் பூணுட்

காணு நின்றன் காமர்க் கண்டு
பேணுஞ் செல்லும் பேரூர் காண்கி
னீந்த பாரெந் சூதார் கொங்கை
மாந்தே னெஞ்சின் வார்மா லென்னே. (௧௮)

இன்னிசை வெண்பா.

என்றைக்குந் தன்றாளை யேத்துநரைக் காத்தலே
கொன்றைத்தா ரீசன் குறிப்பு நிசமென்றிங்
கோராஞ் சுசீந்தை யிடத்தவனை யேத்திதனால்
வாரான்மைக் காலன் மதித்து. (௧௯)

## வண்ணக் கலித்துறை.

மதிநதி சூடுஞ் சடையுடை யீசன் மனம்பற்றத்
துதியென வேதங் கனிவொடு பாடுஞ் சுசிந்தைக்கண்
கதிதர வேயிருன் நிலையென யாருங் கசிந்துற்றுற்
சதிவினை காமன் சமனிட ரோடுந் தடங்கெட்டே. (௨௦)

## மடக்கு கட்டளைக்கலிப்பா.

தடங்க லானதி லாதுபெய் வெய்யில
தடங்க லானதே னச்செறி தண்பொழின்
மடங்க லான்புலி வாழ்மலை நாட்டன
மடங்க லான்மலி வாருஞ்சு சிந்தையிற்
சடங்க லந்த பொருளென் றடிதொழச்
சடங்க லந்த பொருளுந் தருவனே
திடங்க லந்த கலைச்செற்ற பாதமா
திடங்க லந்த கறைநிகழ் கண்டனே. (௨௧)

## (சித்து) பதினான்குசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கண்டிடுதல் சென்றலதி னவகண்ட மென்பர்பல கண்டங்கண் முன்காட்டுவேல், கஞ்சாவொ டேதம் பெறும் பொருள துண்டுலகர் காணக்குடிப் பேமலா, லண்டமவை பலகூ யணித்தே வருத்துவே மார்பகலை யுந்நோக்கிமைத், கல்லாக்கு வேமன்றி நம்பனையி னங்களை யன்போடு முட் கொள்ளுவே,

மெண்டிசை மதிக்கவே யணிமாதி சித்திகளு மிச்சித்தி கட்கொக்குமோ, வெழில்வெள்ளி யுடனெண்ணி வைத்த பொருளையுநா ளேழெனிற் பொன்காணுமேவம், வண்டு மூமலர்க்குழலிர் நஞ்சித்தி தோர்தனம் வழங்குவீ ரேலோர்பொடி, மந்திரம ருந்தென் றளிப்பனோர் சுசிந்தையரன் மாகிருபையா லிங்ஙனே. (சஉ)

(இரங்கல்) வெள்ளைவிருத்தம்.

இங்கே யியமன் னிடரந் தந்தாற் னென்செய் கோம் யா, மங்கே நிரய மணுகிக் கண்டிடி னென்செய் கோம் யாம், பங்கே யெனவுறு நெஞ்சே பயமிலை யென்செய் கோம்யாந், தெங்கேய் சுசிந்தைச் சிவனைப் பரவிலை யென் செய் கோம்யாம். (சங)

ஆடிடத்துய்த்தல்.

தரவு கோச்சகக்கலிப்பா.

செய்களெலா மதன்றாணி யெனப்பிறங்கித் திகழ்கஞ்சக்
கைகளென வழைத்தசையுங் கவின்சுசிந்தைக் காவின்கண்
குய்கமழுங் குழற்கொடிநீ கொஞ்சம்விளை யாடின்னே
மொய்கடுக்கைத் தாரான்றன் முன்னிறைஞ்சி மீளுவனே. ()

கட்டளைக் கலித்துறை.

மீளாப் பிறப்பினை யோட்டுவை யென்றுனை வெள்ளனன்பன்
ளுளாப் பரிந்திங்கு நம்பினன் மாற்றுவை நன்னுநிலக்

கோளாற்ற லற்ற சனகாதி யர்க்கருள் கூர்ந்துமந்த
வேளாற்ற றீர்த்த விழிச்சுசிந்தைக்கண் விடையவனே.

### இன்னிசை வெண்பா.

விடைப்பரனை வேண்டி வினைக்கு விடைகா
ணவிப்ப ரருளாள ராவா ரணிக்கும்
பிசைக்கும் பொழிற்சுசிந்தை யெம்மா னிசைய
வடிக்குமுடி யைச்சூடா ரார். (௪௬)

### கட்டளைக் கலித்துறை.

சூடக மாமணிக் கைம்மா னிடையல்லிற் றாதுகொள்ளா
தேடக மாமணித் தாற்றேட்டை யேற்றென வேவிலவென்
ஞாடக மாமணி கண்டா சுசிந்தையி னேதுமென்சொன்
ஞடக மாமணித் தாலேதச் சும்மைமயி னன்றுகொள்ளே. ()

### குறளடி வஞ்சிப்பா.

நன்றேசெயு நம்பரமனைத்
தென்காணிறை தென்சுசிந்தையி
னன்பாலிணை யடிமலரையெந்—நாளும்
வாழ்த்தி வணங்கிடின் வரர்களும்
வாழ்த்த வெழிற்கதி வழங்கிடு வானே. (௪௮)

## அருமையறிதல்.

### (கார்) நேரிசை யாசிரியப்பா.

வாரிலாடு வானைக் காளிட நின்று
காலொடு நடந்து கடனீர் கொண்டு
இருமூப் பிளிறி யுலாவி விரிந்து
கருவித்து ப்பரந்து கறுப்புக் காட்டிப்
பாவக் கறுப்புப் பாறத் திரிந்து

மேவக் களிறும் விரிசடை வெண்டிரு
நீற்றணி மேனி யாறருவி யலர்தலை
மாறிலா நடந்தரு மால்கறைக் களமுடைக்
கரியுரிக் கஞ்சுகக் கடவுளும் போலத்
தோன்றி யருணிறை சுசிந்தைச் சோலையிற்

பல்நாள் வருந்தும் பாவம் பொறுக்கினு
மொருநா ளின்ப முறும்பெரும் புண்ணியம்
பொறுத்த லரிதென விரிச்சிகன் வெம்மையு
நின்னது தண்மையு நீணில மாந்த
ருன்னக் குளிர்செய் துலகுயிர் தழைய

வருண்மழை பொழியு மரும்பெரும் புயலே
சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டெனப் பொய்யாப்

புலவ ரன்பிற் புகழப் பெற்றனை
யாதலிற் றமைசற் றறைவல் கேண்மோ

வலமர லென்மனத் தளதோன் றறுதான்
பொன்னகர் புகுந்து புரந்தரற் புணர்ந்து
நின்னைப் பெற்ற நெறியுடை விற்கொடி
மன்ன னாட்டினின் னுள்வரு மின்னு
மென்னுயிர் போலோ ரேந்திழைச் சேர்ந்ததும்
பிரிந்தது மாகத் தெரிந்திடு பெற்றி
யாய்ந்திட வரிய தாதலால்
வாய்ந்தது கனவெனு மாய மோயே. (௪௯)

## எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

மாய மென்று கொண்டி டேன்பொய் வாழ்வை மெய்ய தென்பனிக், காய மென்று முள்ள தென்று காக்க னைவன் மட்கல, மாயு டைந்து போகு மென்ற வாறறிந்தி டேனரீ, நாய னென்றிங் காள வேண்டு நற்சு சிந்தை நித்தனே. (௫௦)

## கட்டளைக் கலிப்பா.

நித்த னென்றனை நித்தமு மெண்ணிலா
நீச ருக்குரு நீசனென் றேயெனைப்
பத்தர் கண்டு பழிக்கவல் லாமனின்
பத்த னென்னு பகர்ந்திட நின்றிலே

ளித்திறங்க ளிசைந்தவ னேனுநீ
பித்த லந்தனை யேத்தரு டந்ததாற்
சித்த ரன்பிற் றிரியுஞ் சுசிந்தைமா
தேவ வென்பழி தீர்த்தடி சேர்ப்பையே. (௩௪)

கட்டளைக் கலித்துறை.

அடியா ரகங்க ளகலா னெனினுமிங் கென்னகத்தே
குடியா ரகங்க ளகன்றோட வேநின்று கூத்துவந்தான்
கடியா ரகங்க ளகடுற வுண்டளி காணமுறு
முடியா ரகங்கமழ் கட்மாஞ் சுசிந்தையின் முக்கணனே.

கலிவிருத்தம்.

முக்க ணத்தனை முன்னி யிறைஞ்சிடா
ரெக்க ணத்தவ ராயினு மேத்திடா
திக்க ணத்திற் சுசிந்தையி னேத்துமின்
றக்க னைத்தொலை வித்தது தாங்கியே. (௩௬)

(காலம்) பதினறு சீர்க் கழிநெடிலடிலாசிரியவிருத்தம்.

தாங்கு ளர்க்குத் தீங்கு செய்யுங் காலம் வெம்பித்
தஞ்சமென்று ரஞ்சவுரை கால மெய்ம்மைத்
தவமுளரை நிந்திக்குங் காலந் தீய
சழக்கர்களை வந்திக்குங் கால மெங்கும்

விஞ்சுபுகழ்க் கொடையினரைப் பழிக்குங் காலை
மிக்ககொடு லோபிகளைத் துதிக்குங் காலம்
விரும்பியிழி நீசர்களை விழையுங் காலம்
விமலனடி யார்குழாவை வெறுக்குங் காலம்

மிஞ்சுசின குருநிந்தை யிசைக்குங் காலை
மென்றறைவா ரெக்கொடித்துங் காலமென்றிங்
கியற்றுவரி னதிகபழிப் பிணரா மென்றே
யெண்ணிநற் பெரியோர்கள் வாழுங் காலந்

தீக்குவிளைச் சரக்குடலைச் சோங்கிற் றுஞ்சிச்
சிவச்செயல்சீ வச்செயலீ தென்னத் தேருச்
சிரியரல்லோர் சிந்தையபா னருட்கா லத்தைத்
திமையெனச் செப்பாரிக் காலந் தானே. (௩௪)

ஒருபொருண்மேன் மூன்றடுக்கு ஆசிரியத்தாழிசை.

காலனை வென்ற கழலான் சிந்தையமு
கோல மழுவினை யேழவே யவனுடைய
மாலைமணங் கான்று மருவுமே நெஞ்சே

சோமன் புனைந்தான் சிந்தைத் தெருவி
ஞமன் புறவே நணுக வவனுடைய
பூமன் பணைகள் பொலிக்குமே நெஞ்சே

சூர்பணியும் பெம்மான் சுசிந்தை நியமம்
வர்தகர மோடு வரவே யவனுடைய
வார்வு நவில் பல்லி வழங்குமே நெஞ்சே. (௫௫)

பாங்கியையறிதல்.
கட்டளைக் கலித்துறை.

நெஞ்சத் தணைந்தென் வினையோட்டு மீச னிறைசுசிந்தைக்
கஞ்சத் தனிக்கழ லாரென்பொன் னுள்கடைக் கட்குறிப்பு
நஞ்சத் தடங்கண் ணுயிர்ப்பாங்கி போலு நகைக்குறிப்பு
மிஞ்சத்தம் மெய்யுயி ராயான் பொருளாய் விளக்கியவே. ()

வஞ்சிவிருத்தம்.

விளவற வீந்து மிலைத்தவனை
வளவ னிறைஞ்சி வரம்பெறுமோர்
துளவ னிறைந்த சுசிந்தையின்
டுளமொ டிறைஞ்சவ ரும்பர்களே. (௫௭)

அடிமறிமண்டிலவாசிரியப்பா.

உம்பர்கோன் பூசைக் குவந்துநின் றோயே
அம்புரு நாத்தர் தொண்டுகொண் டோயே
நம்புநால் வர்க்குகன் மறைமுடி நவின்றோய்
தம்பிரும் சோலைச் சுசிந்தைப் பதியோய்
செம்பொன்மா லயனொடு சேரநின் றோயே

யம்பொற் சடையிலம் புலியணிந் தோயே
யிம்பர்நின் றெவ்வல ரும்பரந் தோயே
யம்பிகை பாகத் தருட்பெருங் கடலே
வெம்பி யலைந்து மெலிந்தே னேனே
10. சம்புவே யெனக்குன் றண்ணளிய புரியே. (௫அ)

## (நெஞ்சுவிடுதூது)சீர்வகைக் கலிவெண்பா.

உ

1. தவைமேயோ டருட்பொறையுஞ் சற்குணமுஞ் யார்க்கு
உரிமைபானீ யல்லால்வே றேதோ—நயமோடங்
2. கங்கமதைப் பெண்ணரசி யாக்கியுமெண் ணைபிரவர்
வெங்கழுவி லேற விளைந்ததுவும்—பொங்குவிட
3. முண்ணத் துணிந்ததுவு முட்டினத்து நீற்றறையை
வண்ணத் தடமா மதித்ததுவும்—விண்ணைப்போ
4. யெட்டு மிமயத் தெழிற்சுனையி னையாற்று [ய்
மட்டுமிழ்ப்பூம் பொய்கை மன்னியெழக்—கிட்டிப்போ
5. வீழத் துணிந்ததுவும் வெள்ளத்துள் வன்பீறு
லூமொழாத் திறந்த வொருமகனை—மாசைழப்பூ
6. ணேடும் வருமாறிங் குன்னியநா மன்னாங்கள்
கூடும் பெருந்துறையிற் கொண்களிக—னீடுங்
7. குருந்தடியின் ஞானக் குருவாய்ப் பலரோ
டருப்பரம னாண்டருளுந் தன்பு—புரிந்ததுவுந்

8. தன்மகனைத் தேர்க்காலிற் றந்ததுவு மன்பர்க்கா
நன்மகனைக் கொன்றுணவு நல்கியதுந்—தன்மயமா

9. புண்ணாற்கூ னூட்டி யொருகண்பேர்த் திட்டமற்றைக்
கண்ணப்ப னேர்ந்ததுவுங் காசறுநீ—பெண்ணிற்பல்

10. வின்புவிளைத் தற்கு மெரிநரகி லாழ்த்தற்கும்
வன்புவியின் மேலான வல்லவனீ—வன்பினொடு

11. நம்மைப் புவித்துயரி னாட்டினா னென்றெண்ணி
வெம்மைப் புறநெறியின் மேவாமன்—மும்மைக்கு

12. மாதாரக் கந்தனிவ னாண்டிடுநற் செய்கையலாற்
றீதாகா திப்புவியிற் செய்வினைக்காய்க்—கோதில்

13. வழக்குப் படியென்று மாதக்கோர் நம்மைப்
பழித்துப் பதறப் பகறக்—கழிப்பித்

14. கிழித்தானு மெய்ப்புவியு மேத்தும் புலவ
ரழச்சொல்லி யல்ல கிடித்த—வழக்கறிய

15. வல்லார்கட் பாய்ந்து கொளலென்னும் வாய்மைநிறை
சொல்லொக்கு மென்று துணைகொண்டும்—பொல்லா

16. வழக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழங்கியுங் கேடென் பதுவென்—றொழிக்காத

17. மெய்ம்மொழியை யேற்றெள வியம்பிறர்பா லென்
விம்மையொடு முன்னை யிகலான—வெம்மைப் [னாமை

18. பழிதீரு மேனையர்க ணம்மைப் பழித்தா
விழிவேது மில்லை யினமு—மொழிகேள்

19. புவிக்கண்டற் போதம் பொருந்தப் புகன்ற
செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு—மவித்தொழுக

20. லான்ற பெரியா ரகத்தென்னும் வாய்மையினை
யூன்றுகோ லாக்கொண்டொன்று மோதாத—தான்று

21. திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்றென்—றறைகின்ற

22. வாயுறை வாழ்த்தை மறவாமற் சென்றுளமே
தாயினு மேலாந் தயாபரனை—நேயமுட

23. னெவ்வுயிருங் காப்பானி யார்க்கு மிகவில்லா
னவ்வுயிருள் ளார்நகையு மாகரிப்பா—னெவ்வுலகு

24. மில்லடாக் கொள்வா னெனினு மெழிற் சுசிந்தை
நல்லவக மென்றநம்பி னண்ணினுஞ்—சொல்லின்

25. விருப்பு வெறுப்பிவன் வேண்டா னெனினுந்
தருக்கினொடுமாங்காங்குச்சா லும்-வருக்கவொவ்வொவார்

26. காரணங்க ளாகக் கரியுரித்துப் போர்த்தாங் மா
னைநனைந்த வேனத்த விடங்கொண்டான்-வானனைந்த

27. கங்கை மதியரவங் காணத் தலைக்கொண்டா
னங்கை வலத்தி னனல்கொண்டா—னிங்குருகி

28. புத்திரியு மிந்திரனு மாதித்த னுஞ்சமனுஞ்
சத்தியன கத்தியனுந் தாழ்ந்திறைஞ்ச—முத்தி
29. யளித்தவரைக் காத்திங் கமர்ந்தா னிவன்றாள்
களிப்பினொடு தாழ்ந்து கனிந்து—வளத்தினொடு
30. போற்றிப் பொலன்கடுக்கைப் பூந்தார்நாங் கொண்டுவர
மாற்றற்கு நீவாங்கி வா (௫௰)

## வெண்டளைக் கோச்சகக் கலிப்பா.

வாசவனு டோறுநின்று வந்திக்குந் தென்சுசீந்தை
பாசமுட னொருமை பங்கனைநெஞ் சேதொழுதாற்
காசமுட னேய்திருங் காரிமுகற் கோள்களுஞ்சு
மாசகல வாழ்த்தாரை வாழ்த்தலினேன் மாநிலத்தே

## கலிநிலைத்துறை.

நிலத்தா ரிக்கனை யருவென கெரித்தனோர் நகைக்கிற்
சலத்தா ரிக்கணை மேருவிற் றூங்கலே னையிற்று
நலத்தி ரிக்கண்பு நல்குமாச் சிரமமார் சுசீந்தைத்
தலைந்த ரிக்கண காசனத் தமர்ந்தநற் பரனே. (௫௧)

## மடக்கு அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தற்பர சங்கரி சந்தேகடுஞ்
சற்குண சங்கரி தன்பாகா

வெற்பென வெண்கரி யானலும்
வேண்டிட வென்கரி யானருங்
கற்பக மஞ்சுசு டர்ச்சோலை
கண்டுயின் மஞ்சுசு சிந்தையினை
யற்பினி லென்பணி கொண்டனையவ்
வருளினி லென்பணி கொண்டருளே. (௪௨)

கட்டளைக் கலித்துறை.

கொண்டலைத் தாங்குர வைக்கூவி ஞன்மெய்க் குழைந்
கிழிபேய், கொண்டலைத் தாங்கு திரிந்தேனி னன்பர்கங்
கார்வரிவா, கொண்டலைத் தாங்கு வரியாங்கென் பார்த்தொ
ழற் குள்ளருளே, கொண்டலைத் தாங்கு பொழிலார் சுசிந்
தைக் குளக்கணனே. (௪௩)

சிந்தடி வஞ்சிப்பா.

கண்ணாலத்தின் புலனறியக் கவினுறலும்
மண்ணாலத்தின் புனலுருகி வகைதரலும்
விண்ணாலத்தின் புவிமுழுதும் விளைவுறலு
முண்ணாலத்தின் புறனுடலோ டுயிரெனலு
மெனவாங்
குரைப்பதென் னுலகுளீர் சுசிந்தைத்
தரைக்கணோர் தனிப்பர னருளெனிற் றகுமே. (௪௪)

### இன்னிசைவெண்பா.

தக்காரா கார்விட் டரைமாற்ற வல்லாருங்
கொக்காதிச் சாலகிறை கொண்டூலவைப்—புக்கார்பைஞ்
சோலைபுடை சூழுஞ் சுசீந்திரத்திற்—பாலவிழி
யீசனடி யேத்தா ரெனின். (௬௫)

### (களி) எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

எற்றுதவ னயமேய்வுற வெழுகாச்சுசிந் தையினே
யிடமான்முக மதுகோண்டரு மெழிலொண்கனி யானைப்
போற்றுதவர் தமையன்பொடு போற் றேமுள முருகும்
புகழன்பின ரடியின்பொடு புகழுங்களி யோம்யாஞ்
சாற்றுதவர் சான்றோர்களைச் சார்ந்தண்ணகை புழையார்
சாராயமு முண்ணண்பொடு வந்தே தளர்மயரு
ஞற்றுதவ ரருள்வேண்டியுள் ளளவாக்களி கொண்டே
யவனிக்கொருசுமையென்றிட லறியத்திரி குவமே. (௬௬)

### பாங்கன் வியத்தல்.
### எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இரிதலைக் கனலா யயிற்படைப் பரம சிவனருட் சுசிந்
தையிற் றெரித்த, கருவிழிக் குவளை நகைமணி நுதல்வீற்
கலைமுக மதியிவட் கண்டா, ருருவிலிக் குடையா ரெவர்கொ

னக் , தலைவ னுருவுகொண் மூழுமணி யிவளைத், தெரிதரக் கலந்தும் பிரிந்துயி ரொடுமேதோர்ந் திசைத்திடன் மிகுபிறர் செயலே. (௩௦)

தலைவன் றளர்தல்.

ஆசிரியத்துறை.

செய்குவதென் பாங்கன் சென்றனனோ தெரிந்தனனோ தெளிந்துண் ணுண்கொண், டெய்குவதென் னென்றுபுறத் தொழிந்தனனோ வுமைபாகன் சுசிந்தி ரத்தி, னெய்குவ தென் னுயிராமே ரிழையு மொன்றாய், வைகுவதென் றென் றென்றான் மதிப்பறிந் திங்கின்னம் வந்திலனே. (௩௧)

தலைவிவருந்தல்.

நேரிசை வெண்பா.

வந்திக்கும் வானோர் மகேசன் சுசிந்தையுளார்
நிந்திக்க வன்பனெனை நீத்தகலக்—கந்தர்ப்பன்
காலந் தெரிந்துவளை கச்சுடைசோ ரச்செய்தான்
சீலந் தெரிந்தவன் போற் றேர்ந்து. (௩௨)

தாதிதலைவனை வேண்டல்.

இன்னிசை வெண்பா.

தேரிபங்கும் வீதி செறிடுபடச் சேனியர்க
ளோரிபங்க ளார்க்கு மிறைசுசிந்தைத் மாறடுத்தத்

தாரிலங்கு வேலோய்நிற் றொழுவார்போல் வேள்வியோராற்
சீரிலங்கு செல்வ நியக்கும். (௭௰)

## தலைவி யிரங்கல்.

### ஒருபொருண்மேன் மூன்றடுக்கு வெள்ளொத்தாழிசை.

தியங்கச் சுசிந்தையினிற் செவ்வான் றீத் தாக்கப்
புயங்கத்தின் கைப்போலென் பொற்பழிய விட்டு
வயங்கத் துறந்ததென் னென் மன்

ஆயார்போ லஞ்சுசிந்தை யம்புலிப்புற் சீற
வீயார்செல் வம்போ லெழிலழிய விட்டிங்கு
வாயாடி நீத்ததென் னென் மன்

நல்லார் சுசிந்தையினி னள்ளற் கரிமோதக்
கல்லார்சொற் போலென் கவினழிய விட்டின்று
வல்லாரிற் சென்றதென் னென் மன். (௭௧)

### பதினான்குசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மண்புன லனல்கால் வெளியவை யவையின் மருவிட
மெய் கண்வாய் மூக்கு, மடைநிகர் செவிதந் தம்புலங் கெட
வன் மறலியென் னிறுதிவந் தொறுத்தாற்-, கண்புன லுகு
த்து நுரைதள்ள வாயிற் காண்டிடக் கபமுர மடைப்பக்,
கடமழி பொழுதுங் கலங்கிடா துனையே கருதிட வரமெற்

இன் றருள்வாய்-, வெண்பனி மதியை யிடித்ததின் றுளியோ
விரைந்தெழுந் துயிர்த்திடுஞ் சினையோ, விண்டிகழ் பீனென்
றிடக்கயல் பாயும் விந்தைகண் மிஞ்சுகோ ட்டாற்றுத்,
தண்புனற் றுறையார் தருமுயர் சுசிந்தை தனிலுயர் யாக்
கிய வருக்கி, தனைத்தனொ டமுத லிங்கத்துட் கொண்ட
தலைபுடைத் தாணுவாஞ் சிவனே. (எ௨)

பாணனை வெருளல்.

(பாண்) கட்டளைக் கலித்துறை.

சிவைசேர்ந்தபங்கனைச்சீகாழியன்புகழ்ச்சீரிசையாழ்ச் [திய
சுவைசேர்த் தவனொக்கும் பாணா வுனையொரு தொல்ப [தை
னவைசேர்ந்த தோற்றபெண்பாணினி பாமென்பணஞ்சுசிந்
நவைசேர்ந் திடவெனை நீத்தான்றன் சீர்த்தி நவின் றிடனே.

(குறம்) பதினாறுசீர்க் கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நவிணவிலென் றுன்குறியென் னாவின் னின்று
நடிக்கிறது துடிக்கிறது நவிலக் கேண்மோ
நகங்களெலா மெமதெனினுங் குமரன் வேள்வி
நகக்குறத்தி யானம்மே குறிகள் சொல்வேம்
புவியதனி லெவர்களுக்குஞ் சொல்லிப் பெற்ற
புகழ்பெரிதில் விதிசாயப் புலவ ராகப்
புருந்தவிரு பதினான்கி னிரட்டி யோரும்

பொருந்திடவயமூன் றுடையகலைக்குஞ்சொன்னேங்
கவினுமென்றன் குறியனுவும் பிரகா துன்றன்
கைக்குறியு மெய்க்குறியு முகத்திற் கண்ணிற்
காண்குறியு மென்னையினைற் குறியுஞ் சோடு
காட்டினவே நீநகைத்துப் பசப்பி னென்னை
யுவமையிலா வருட்சுசிந்தை யுமையோர் கூறற்
குரிமைபெறுமுன்பரென வொருவேற் காளை
யுறவுபிடித் தகன்றனனென் றயர்ந்தா யின்னே.
யுற்றிடுவான் கஞ்சிகந்தை யுதவு வாயே. (௭௪)

### வாயுறைவாழ்த்துமருட்பா.

உதவிடுமோ மெய்ஞ்ஞான மோட்டிடுமோ காலன்
சதிபிடரை யூழ்வினையைச் சாய்த்திடுமோ மேலாங்
கதிவழியைக் காட்டிடுமோ காசிரய நோய்க்கள்
கதகமெனவாமோ வழிதனங்க ளென்றும்
மதிவழியி னிற்பாய் மனமே மகவான்
றுதிமுறைசெய் தேனத்தாஞ் சுசிந்தைப் — பதியி
னென்நாளு மெவ்வுயிரு மெங்கு மிலையந்து
தன்னேரிலாது தங்கு முக்கண்
முன்னோனை மெய்ப்பொருளை முன்னி
யின்னே யுன்னை யிவன்றனை யெனவே. (௭௫)

விரைந்து வருத்துநீ யோர்முனிவாய்ப் பட்டது
தெரிந்து மறந்திடுஞ் சீரிலார் போலுங் கருங்கடால்

அன்பன் றுறந்த தறிந்துங் கரைந்தெனை நீ
துன்பஞ் செயுபா தோயக் கருங்கடா
துன்பஞ்செய் யுன்மேற் சுடர்வேல்வேள் விட்டது
வன்பன் றெனமேலை வாய்மை போலுங் கருங்கடால்

தன்னைச் சுசிந்தைச் சயம்புமழுச் சுட்டு
மென்னைக் கடுகி யிரைவாய் கருங்கடா
லென்னைக் கடுகுமுனை யினையுண்டிப் பாருதவ
னுன்னைக் கசடதென லொக்கும்போலுங் கருங்கடால்.

### தாதி தலைவிக்கு தலைவனியல் புரைத்தல்.
### கலித்துறை.

கரும்புஞ் சேலுங் கடுக்குஞ் சொற்கட் கவின்மின்னே
சுரும்புந் தேனுஞ் சூழ்காப் பரமன் சுசிந்தைக்கண்
விரும்புந் தாக்கிற் பொருட்க லாற்சொல் வினைமாற்று
றிரும்பும் பொன்று மில்லங் காண்பா னிறையோனே. ()

### தலைவி தாதியுரை வெறுத்தல்.
### கலிவிருத்தம்.

இரையும் வேலையு மிந்துவும் வாட்டிடத்
தரையி லீசர் சுசிந்தையன் குன்றனி

வரையின் மாழை வரைபெற வாயினுந்
திரையின் மாட்டெனை நீத்தமெதன் செம்மையே, ()

(மடக்கு) பதினாறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

செம்மலங்கு வளையல வன்செவிற்
செம்மலங்கு வளையொடு பேர்த்தலுஞ்
சேலையன்ன மெனக்கலை கொய்கடைச்
சேலையன்னமென் ஞெக்கிய ரார்த்தலு

மெம்மதத்தறுங் கட்டுமி னென்றிடு
மெம்மதத்தருங் கட்டுரை யோலமு
மேரடித்தல நாகநெ ளிப்பவு
மேரடித்தல காம்பதர் தூற்றலுங்

கம்பிசைந்திடு மிவ்வொலி யோடும
கம்பிசைந்திடு மோலு நிறைந்திடுங்
காரிணங்குபொ ழிற்றென் சுசிந்தையிற்
காரிணங்கு களத்தனிக் கண்ணனூர்

தம்மை யன்மைவே றுந்தெய்வத் தால்விரோ
தம்மை யன்மை தவிர்செய வின்றெனத்
தால மேலவர் சித்தி நவின்றிடாத்
தால மேநெய் தறிமரத் தாலமே. (௮௨)

## திருச் சுசிந்தைக் கலம்பகம்.



### பஃறொடைவெண்பா.

தாலந் தகரத் தனிக்குழற் சங்கரிக்குஞ்
சீலத் துயர்ந்த திருமழிசை யாழ்வார்தன்
பாலொத்த பைந்தமிழாற் பாயோடு பின்சென்ற
மாலுக்குந் தன்பால் வழங்குஞ் சுசிந்தையரன்
சாலக் கலைத்துறை தாந்தேடப் பட்டாங்கெத்
தூலத்து ணின்றாலுந் தூயவுளத் தல்லாலெக்
காலத்தும் யாவுளுமா காண். (அக)

### தலைவனிடத் தலைப்படல்.

### வஞ்சித்தாழிசை.

கானமுறுங் கலைமருள்கண்
வானமுகில் வளர்குழலா
டானமருந் தலைமொழிய
நானமரு நலமுளவோ

கரிபணியுங் கனதனமா
ரரிபணியஞ் சிடையகலாள்
பரிவினுறும் பதிமொழியத்
திரியவுறுஞ் செயலுளவோ

சுரர்கடொழு சுசிந்தையுறை
பரமனருள் மணிமொழியாள்

மருவுமெழின் மனையொழிய
வுரிமையுறு முறவுளவோ. (௮௪)

வஞ்சித்துறை.

உழையிடங்கொ ளொருவனைக்
குழையிடங்கொள் கழனிகாத்
தழைசுசிந்தை சதிமனு
மழையினன்பர் மனிதரே. (௮௫)

நேரிசைச் சிந்தியல்வெண்பா.

மனித ரெனினுமுயர் வானுலகு முண்டாந்
தனிமைக் களப்பரமன் றன்னைத்—தினமுமோர்
வான்சுசிந்தி ரத்தேத்து வார்க்கு. (௮௬)

(தழை) கட்டளைக் கலித்துறை.

ஏந்தந்த னத்தகத் தெம்மான் சுசிந்தை யிளம்பொழிலின்
மாந்தந்த தண்டழை நீதந்த தென்னநம் மாதுதலைப்
பாந்தந்த தம்மோக்கு மென்றுமன் னைகண் படைத்தமுலை
சேர்த்தந் தவேள்கொண்ட சீவன்பெற் றுணிவினைச் சேர்ந்தெனவே.

தலைவி முன்பனிவரற் கிரங்கல்.

நிலைமண்டிலவாசிரியப்பா.

சேர்ந்தா னீத்தல் சீரின் றென்ப
தேர்ந்தா ரெல்வா னுச்சங் கோடப்

போரிற் சாய்ந்து புறந்தந் தூட்கித்
தேரிற் சாய்ந்து செல்வார் மேலுஞ்
சீறிச் செல்லுந் தீயோர் போல
வேறித் தாக்கி யிருள் முடுக்கி
விறித் தொடர்ந்து மேலகழ்ப் பிடித்துக்
கந்துடை மறன்மெய் கறுப்பக் கோபச்
செந்தி யுள்ளிற் சேர்த்து வெதுப்பக்
கடுவிடத் தீப்பாய் கண்ணன் காக்க
வேதியன் முத்தீ விளைத்துக் காயக்
காதலின் வாசவ னாதிக் கடவுள
ரவ்வக் கினிதன் னருகின் வாட்ட
மாந்தர் மதியுமிழ் மாட நீத்து
வையகத் துட்கடை வாய்க்காப் பிட்டுச்
செய்பில வம்பஞ் சிற்றுயின் மேவி
மயிர்த்துக் கலைகள் வாரிப் போர்ப்பச்
செயித்துத் தன்கோல் செலுத்தி யாண்ட
வன்பார் வரையென வான வரம்பன்
றன்முறை செய்யுந் தன்விற் கொடியை
நிறுத்தப் பட்ட நெடுவரை புக்குச்
சிறுகற் பொதிய மொருகற் பூர
வொருவரை யென்ன வுறைய வடர்த்தப்
பனிமலை யீன்ற பாகீ ரதியென்

றோடிய யாற்றை யொலியுள் ளடங்க
மதிபல கொண்டு வழிவிடு பாலம்
புதுக்கிய தென்னட் போர்த்துறை வித்துக்
கருங்கடல் வடவை கதுவி யெழுந்தாங்
கொண்புகை மண்டும் வெண்கட லாக்கி
விண்ணின் றிழீஇ மண்ணின் றெழீஇச்
சாரும் குயிலுஞ் சாரிகை மயிலுஞ்
சேருமோர் பொழிலு ளரிமொய் சுனையுங்
குயிலலி னறியுங் குறிவழி யல்லாற்
றெரிதர வரிதாச் சேர்ந்து பொதிந்து
வழிநடை யெதிர்வரா வரையா முட்டினு
மொழியினு மன்றி யெழிறெரி வரிதாய்
மறைபக் கவிந்து மண்விண் டெரியா
துறவெண் புதிதாய் வருமுன் பணிநாட்
சுரர்பதி யேத்துஞ் சுசிந்தா புரியி
னெரியோ டாடு மிறையோ னருளை
மறந்தார் போலு மிருந்தா ரென்னி
னிறந்தா ரிலையென விருந்தேன் குறையே. (௮௮)

செவிலி கிளியொடு கிளத்தல்.

வெண்டுறை.

குறையளக்கு மவர்முடியுங் கொடைவரையா திடுமணி
யுங் கொண்டுசேந்த, நறையுளிக்கு நளினமல ரடிகாங்கட்

குறியாறு நண்பற் கண்டே, மறைதுதிக்கு மான்சுசிந்தை
மலர்க்காவின் கிளியே, சிறைபிருக்கு மெம்பொனிடர் செப்
பர்மேயோர் மொழியே. (௮௯)

## ஆசிரியத்தாழிசை.

பொறிமெய் நெஞ்செனு மூன்றிற் கன்பரு
டொழிலர் தாமுறை சுசிந்தை போலனே
யெழிலொ டென்னுளத் திசைந்த வீசனே. (௯௰)

## வெண்டாழிசை.

ஈசனைச் சுசிந்தை யின்கண் ணுள்ளிற்
பாசமுற் றிறைஞ்சல் பகட்டின் மேவு
நாசனைப் போக்கு நலம். (௯௧)

## (தவிம்) பதினறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நல்லதுறந் தார்ப்புரப்ப வவர்த்து றந்தின்
னட்புரிமை பூண்டார்போ னட்புற் றூறு
நச்சியனல் வளர்த்தாசி நாப்பண் ணட்டு
நலியாமற் றலைகீழா நின்றிட் டாலும்
வல்லைபுத்தோ டலைமனைதைக் கவினத் தாற்செல்
வாசிபினை நிறுத்துதல்போல் வாசி தன்னை
வாங்கிவிடாச் சாதனையா கந்தான் செய்யும்
வழிபேனை வழியானும் வசங்கொண் டாலும்

பல்லுகுத்துக் கதிரவனைப் பணிவித் தாண்ட
பாலவிழி மான்மழுக்கைப் பரைபாகத்தன்
படிவவிலக் கணமதையுட் குறியாக் கொள்ளும்
பாவனையன் பிலையற்செய் தவமே யாகு
மல்லதுமற் றிலையென்றிங் கான்றோ ரெல்லா
மறைகுநராற் றென்சுசிந்தை யமலன் றன்னை
யன்புறுமெச் செயல்செயினு மகலாச் சிந்தை
யடியவர்க்கன் புற்றவமென் றறைகு வோமே (௩௨)

தேர்வரவுரைத்தல்.

கட்டளைக்கலித்துறை.

ஓநம சங்கர சம்போவென் றன்பர்ணந் தோதுமொலி
வான மளக்கும் பொழிற்சுசிந் தாபுரி மன்னுகல்போ
ஞான மலர்க்குழ ஞைபகி யோநந்தம் நாயகன்றன்
மான மணத்தின் வருந்தேர் மணிபொலி வந்ததுவே.

கலித்தாழிசை.

வந்தைய வென்று சுசிந்தையின் வாழ்த்தினர்
சிந்தையி லீசன் றிகழ்வனை
சிந்தையி லீசன் றிகழப் பெறுபவர்
சிந்தைக ணீளணற் பஞ்சென முற்றினு நீங்குமே. (௩௩)

## கற்பிற்படுத்தல்.

### கட்டளைக் கலித்துறை.

நீங்கேனென் றுட்கொண்டு நீக்கிடும்பொன்னு நீளயிலோய், தாங்கேனென் றுண்ணினைத் தாங்கினைந் தாணுசிந் தைக்கிறையே, யீங்கேகைக் கூட்டிற் றிருவிருமொன் றெனவேயிசைவீர், பாங்கேய்வெண் பாவொ டகவல் பொருந்தொரு பாவெனவே. (௩௫)

## கலவியின்பம்.

### நிலைமண்டிலவாசிரியப்பா.

பாகற் கோட்டிற் படர்தகிர் வல்லியு
நாகிள வண்டு நவிற்றலுங் கனியு
யதர மருக்கு லளக மழமொழி
புணர்முலை யிசைந்தவற் புதவொரு மகளாய்
மீக்குவந் தேக்கு வேங்கை சந்த
நாட்பூத் தூவி நண்ணி நாடலுங்
கரிமருப் பிதனின் றுறுங்கிளி கடிதலும்
புதைபடு மூலம் பூவகழ்ந் தெடுத்தலுஞ்
சிறுகருந் தினையிடி தேன்மிசைந் திடலு
மருவியி னூற்றேன் வாய்ப்பெய் திடலு
மருவி யேற்றலுங் குரவை முழக்கலுங்
குரலெழக் கூயெதிர் வரைமொழி கேட்டலு

மாயிவ் வகைபல் லற்புத மாகக்
கானவர் மகளிர் களிக்கொண் மாரு
விமயத் துச்சி யெழூந்திடு மருவி
யாதா ரத்தங் கருளுட னமருங்
கேதா ரேசர் ஜடைமுடி நதியா
யெழுந்தார்த் தோடி பிறந்தார் பாவத்
தழுந்தா தாக்கு மப்பதி சூழ்ந்தான்
கெல்லையில் புகழ்சேர் வில்லினை யுடைய
கொல்லி வெற்பன் குளிர்கா டாக்காய்
கிளர்மலை முகத்துக் கிருமைநீர் வார்த்த
வொண்கோட் டாரு மொருமக னன்பாற்
றெளிசி னெழுகித் தேவகி தன்சேய்
கனிகொண் டாடக் கானக் கோழி
பிணுபயில் சிவல்கட் கிரைமிக வாயர்
கொல்லை யாய்ச்சியர் குழலின் முடிக்க
முல்லை தோன்றி முகைக ளவிழ்க்கச்
கமல முகமுங் கழுநீர்க் கண்ணும்
மலர்ந்து நோக்கி மணிகளைக் காட்டிச்
சூழப்பெற்ற சுசிந்திர மதனி
லிருவரோ டிற்று மொருவனு முக்கட்
பெருமான் றனது பேரின் பெண்ணை
வரும்பெற லாயிவ் வுசலத் தின்றேன்

திருந்திய வமுதத் திரளையா மிவடன்
மொய்ம்பொடு முன்னி முயங்குந் தோறும்
பொய்ப்பின் றொருமுறை போற்பல முறையு
மெய்பனித் துருக விதிர்ப்ப விளைந்தன
பூம்பதப் பெருவிரல் புறந்தாள் பரடு
குறங்கடி காமன் கொடிஞ்சி கையடி
கரும்பிடை யிரதக் கனியின் பாகே
மலைமுலை நிலையுர மணிச்சுழி யுந்தி
விலையற வெழுந்தன விண்ணில வமுதே
யாடிக் கபோல மணிநீ லக்கண்
டேடருங் குரல்வளை சேட்கனித் தேனே
திலகமென் னுதலிடை சிரமுறு முச்சி
யிலவித ழெழுந்தன வெண்ணரு மமுதே. (௯௬)

தலைவி தலைவனை நிமித்த வழிப்புகழ்தல்.
கட்டளைக் கலித்துறை.

அமுதச் சிவலிங்கத் தம்மான் சுசிந்தை யருளனைபோய்
குமுதச்செவ் வாயிதழ் தோள்கண் ணிடத்திற்குறியெனவிச்
சமயத் துணைப்பெறு மாறுய்த் துடித்தன்பு சாற்றினவெவ்
வமயத் துனக்கென் னிகழ்ந்த ததையறை வாயெனக்கே. ( )

தலைவன் பேற்றுற் புகழ்தல்.
கட்டளைக் கலித்துறை.

வாயா மனிதப் பிறப்புன மில்கரு மாற்றினென் னுள்
ளோயாதுன் யாக்கிய வர்க்கியை யோம்பர னென்சுசிந்தை

வேயாருந் தோளி யவன்கழ லோதினர் மெய்ப்பயனுன்
வாயா லுரைப்பதென் சான்று நினைப்பெற்ற மாமணமே.().

(ஊசல்) பன்னிரு சீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

மாமணமென் டிசையாட மகரந்த மிசையாட வண்ட ராட, மலராட மயிலாட மையாடுங் குழலாட மணிமேவப் சுட்டி, சோமனுத லிடையாடச் சுடர்க்குழைகள் செவியா டத் துண்டத் தாட, தூக்குபணி மணிநகையைப் நிகர்த்த னமென் றதன்முன்றிற் றுள்ளி யாடப், பாமங்களின் னவரி சைநம் பதிகேட்கிற் பற்றுறுவான் மிகவென் றுன்னிப், பரி வினிவர் நாவுரைந்தாங் கெனச்சகியா ரின்னிசையின் பண்பு தேர்ந்து, பூமணந்தென் னுடனுயிருட் பொருந்தியவீர சுசிந்தையான் புகழைப் பாடிப், போற்றிசைப்பப் புகழ்ந்து ளமைப் குழைந்தாடப் பொறிமயிலீ ராடி யூசல். (௯௬)

தலைவனை மேலவர் வாழ்த்து.

புறநிலை வாழ்த்துமருட்பா.

ஆடகமா மேருத்தோ ளண்ணலை மம்புயமா
மேடவிழ்பூந் தாட்பொன்னை ரிம்மயிலா ளோடுமுனை
மாடமலி வீதிகண்மொய் வான்சுசிந்தை மன்றத்துள்
ளாடவிசைந் தென்கவியை யாட்டித்தற் பாடவருள்
செய்தெனையாட் கொண்டவரைத் தென்மொழியாள் பாகமொ
மெய்திகழுங் கொன்றைமதி வேணியனின் மெய்தழுவி[டு

நின்றுபுறங் காத்திடநீ நீக்கமறு மெய்ப்புகழ்சேர்
கன்றுபுரி மக்களுநயர் நன்மணிபொன் னுகியசீ
ரின்னாளின் மேலுமேமேலா பெருஞ்ஞான்றுந் தோன்றிப்
பொலிவொடும் வாழுதி பொருந்தி
சௌவிகடற் புகழ்மூதி லொப்பிலா வலகே. (௧00)

திருச் சுசீந்தைக் கலம்பகம்

முற்றிற்று.

---

சிவதாணுநாதன் திருவடி வாழ்க.

உ

குமரன் றுணை.

# திருச் சுசிந்தை மும்மணி மாலை.

---

காப்பு.

எம்மணி மாலையினு மேர்ச் சுசிந்தைத் தானுவற்கு
மும்மணி மாலை மொழிபொருட்—செம்மை
யொருகொம் பிருசெவி மும்மதத்தொண் ணால்வாய்த்
தருவஞ்சைங் கையான் றரும்.

நூல்.

வெண்பா.

---

சுசிந்தா புரியிற் றுளவனைப்பால் கொண்டு
கசிந்தார்க் கருள்புரியுங் கத்தன்—றசும்பேய்தென்
காலைத் தொழிலருட்டென் காலைக் குடிகொளத்தென்
காலைத் தொலைத்தருள்வான் காண். (க)

கலித்துறை.

காண்பாருக் காகுங் கயிலாய நாதனைக் காசிலுயர்
பூண்பாருக் காகும் புரந்தரன் போற்றும் புகழ்ச்சுசிந்தை
யூண்பாறுக் காகு முடலென்றுள் ளுன்னி யுவந்திறைஞ்சு
மாண்பாருக் காரென்று மாயா வவன்கழன் மன்னுவரே. (உ)

## ஆசிரியப்பா.

மன்னிய மறைவாழ் மரபின் வந்திங்
கன்னையைத் தந்தைதன் னருளான் முடித்தங்
காத்துஞ் சினத்தாற் கதிர்வடிக் காவலர்த்
தேய்த்தோன் றெய்த்தவத் தீவினை யான
விடமறத் தெய்வத் தலம்பல வியையக்
கட்டடர் செய்து கண்ட நாட்டிற்
கொருசிமண் ணடக்குங் கோடகச் செவிவாச்
விஞ்சை பூதி விண்ணுறு முக
வெண்கிரி மேவிநின் றன்கோல் கொண்டெள்
ளுண்மையி னுண்டுடு மொப்பறு சேர
ருரிமையிற் பணிகொள் ளருணிறை சுசிந்தையி
லிரவியு மிருளு மிணைந்தா லென்ன
வெரிதெறு மேனியிற் கருமுகில் வண்ணந்
கலந்து மேற்கொளுங் கரியுரிக் கஞ்சுக
முண்ணிலை மருவுமவ் வொளியையு மிருளையு
நண்ணிநிற் காட்டு நுதல்விழித் தேவே
யென்னுளி னிலைத்தனை யெளியேன்
பன்னுசொன் மாலையும் பரிந்தணிந் தருளே. (௩)

## வெண்பா.

அருளார்ந்த மேனி யணிந்தக் குழைக்கா
திருளார்ந்த கண்டத் திறைவே—தெருளார்ந்த

மங்கை யிருவர் மகிழச் சுசீந்தையிலுன்
செங்கையின்மான் காட்டுந் திரு. (௪)

## கலித்துறை.

திருடிய கைவெண்ணெ யோடுரற் கட்டிலுஞ் சிறையிற்
பொருடிகழ்பூங்கொட்டிலுப்பொலி சேய்மயல் பூத்தபொற்
கிருடிகளேத்துஞ்சுசீந்தைப்பிரான்மெய்யெரிபினிற்கண் [பிங்
டருடிகழ் வாயின் மருள்குறை வாமென்ப ராய்ந்தவரே. ()

## ஆசிரியப்பா.

ஆயர் கூட்டத் தார்ந்தான் காத்து
மாய வான்கன் றுல்வான் மருவ
நீண்டு கிளைத்தீ தூண்டரு வெள்ளிற்
கான்கடுந் தோட்டுக் கனியை யெறிந்து
கிண்கிணி கொஞ்ச மண்கனி மிஞ்சப்
பண்பட னடிக்கும் பாலனு முனையு
மிடமுறச் செங்கே ழிதழ்மலி கமலத்
தடமலர்த் திருவுஞ் சதுர்மறை வரனும்
வலமுற வெண்சிகு வாழ்வெண் கலையு
மலமர முடிக்கு மரணையு மகங்கொடு
கற்ப மளிக்குங் கருணை நீடி
யற்புத வடிவா னயந்தொழில் புரியுங்

தனிமுதற் பொருளாந் தாணுவே பிறவிப்
பிணிப்பறுத் தருளுந் திருச்சுசிந் தையிற்றன்
சீர்விழாப் போற்றத் தேரூர் நின்று
வாரணி வனமுலை வருந்திட வருமிளக்
கார்விழிக் கனிமொழிக் காரிகை தனையவட்
செட்டுடைத் தந்தைதாய் தியங்கக் கொண்டா
னென்றுனை யுலகோ ரியம்பலா லவனை
யிட்டமெய் வைப்ப விடமோ வின்று
மட்டவிழ் பலமலர் கட்டிய முடிபோ
லெவ்வயில் கங்கையை யேற்றைமற்
றெவ்விடைக் கோடலவ் விடத்தெழில் விளக்கே. (௬)

வெண்பா.

விளக்கா மிரவிமதி வீடாகு மண்ட
மளக்கா வகைநிறைவா னொருக்—களக்கார்ப்
பெருமா னருட்சுசிந்தை பேணி நமக்காத்
திருமா னிடத்தொடுற்ற சீர். (௭)

கலித்துறை.

சீரார் கயிலையிற் றன்றனைப் பூசிக்குந் திண்மைபெற
வாரார் கடுந்தவ மாற்று முனிவர்க்கு வாழ்பரன்றென்
பாரார் கயிலையி லாமெனக் கண்டுற்ற பண்புபெறு
மேரார் கயிலையி தாஞ்சுசிந் தாபுரி யேத்துமினே. (௮)

## ஆசிரியப்பா.

ஏற்றுத் துவச மெழுப்பிய சாற்றி
னாற்றிசை யோருங் கூடிக் காண
மகிடா சூரன் மாயப் போரிற்
பருவிட வடிவம் பலபல வாகிப்
புகுதக் கண்டு பொருதவை தொலைய
விந்தை தான்செய் விந்தையிஃ தென்று
சிந்தை களிக்குஞ் சீரின தாக
வன்கா னுற்ற மாமது கொண்டு
தன்கா லாக்கிச் சார்ந்து நடித்தலும்
பன்னிரு நயனன் றன்னயி லேவப்
புன்னெறி யவுணன் போராற் றாது
வெந்நைக் காட்டி விற்படை தாழ்ப்பக்
கண்டிடை யெழினியாக் கவிகைதன் கையிற்
கொண்டு சாய்த் தாடுங் குடைகூத் தென்ன
முத்துக் குச்சுகண் முற்ற வார்த்த
பட்டுக் குடைகள் பலநட் டாடலுங்
கட்டெழி லக்குகன் காரவ் வவுணன்
பட்டது கண்டு பாவையா மரங்கிற்
சுட்டிக் கொட்டிய துடியாட் டென்ன
வீரச் சிறுவர் மெய்கள் வளைத்துச்
சூரக் கர்ணத் துள்ளற் களியும்

வாணன் மகளான் மறைத்த மகனைக்
காணக் காமன் காட்டிய பேடெனன
மஞ்சள் பூசிச் செந்துகி லுடீஇ
மஞ்சனம் விழியி னூற்றிவட் டிகையாற்
றொய்யில் வரைந்த பொய்ம்முலை காட்டி
நெய்யணி குழலி னீண்மலர் சூடி
யொருபாற் காட்டு மிருமெய்க் கூத்து
மண்டெழி லச்சேய்க் கண்டிடச் சசியாள்
கொண்ட கடையக் கூத்தோ வென்ன
வகட்டிற் சாய வாடை யுடுத்திக்
கதுப்பின் மஞ்சள் பூத்தாக் கவினக்
காருடல் வெள்வாய்க் கடைசி யென்னும்
பேருறு பள்ளுப் பெட்புறு கூத்து
மவ்வனி ருத்த னருஞ்சிறை மீட்கநீ
கெவ்வமின் வரிகொள் ளெழிற்குட மென்ன
மண்பொன் செம்பின் வாய்த்தபல் கும்ப
மொண்சிரத் தண்டி னுறவைத் தோங்கி
விம்மி நடிக்கும் விநோதக் கூத்து
மம்மால் வாணனொ டரும்போர் செய்து
மம்மரிற் கொண்ட மல்லோ வென்ன
வரிவா ளீட்டி யலகயி றண்டக்
கருவிக டொட்டுக் கனிந்து வாங்கி

யொருவரோ டொருவ ருக்கிர மோடு
மருவிப் பிடிக்கு மல்லக் களியு
ம்மாமன் விட்ட மதயா னையைமர்
லாவி நீக்கற் கரங்கண் கொண்ட
வல்லி யாட்ட னாமென் மெய்ப்போற்
கைகா லியக்கும் பொய்க்கரி யொடுமுன்
ன்னுகி யாட்டு மால்விக் கூத்து
மூர்க்கமெய் யவுணர் மோகங் கொண்டிறப்
பார்க்கவி கொண்டெனப் பாவைக் கூத்தும்
புரங்கடா மெரிப்பப் பொருதழ லவுணர்க்
கிரங்காக் கொட்டியு மிரிந்தவவ் வவுண
ரெரிந்தவெண் பொடிகொண் டிறைவி பாணி
பரிந்து கொட்டப் பார்த்தா டுந்தன்
பாண்ட ரங்கப் பண்புறு கூத்து
மென்னத் தொண்ட ரிணர்க்கை கொட்டி
முன்னி யாடலு முதிர்வுள் ளன்பர்
வெண்பொடி கொண்டு செஞ்சடை விரிய
வொண்படி பதிர வொருகா றூக்கித்
தன்பெறு தாளத் தாண்டவ மாடலுங்
கணிகையர் வாய்கை கண்கா லொத்த
வினிமைகொ ளிசையு மிதவி நயமொடு
மதனவு மருள் மருட்டி நடித்தலும்

முதற்பல கூத்து மொய்த்துச் செறியக்
கரிமேற் பேரியுங் காளைமேன் முரசும்
பரிமேற் படகமும் பதினெண் மேளமு
மார்த்தலை கடல்செவி டாகப் பவனி
நாலா நாட்கொ ணல்விடைச் சேவை
யாலாற் காண்பான் மழையாற் றழுத்
தரியா தாவி தனைப்பான் றுணியு
மொருவ னன்பிற் குவந்தெச் சாற்றினு
மாகவைந் தாநா ளச்சேச் சேவை
யோகையி னளித்தவ னுயிர்காத் திட்ட
வருணிறை சுசிந்தைநாயினைமலா வப்புகழ்
தெரியக் கண்டுந் தீர்விலுள் ளன்பு
சேராச் சிறியேன் சிறுமையை
யோரா தவ்வன் பூட்டினை யுவந்தே. (௨௯)

வெண்பா.

உவந்தா லலாதலக ரோம்பாநன் வேம்பு
மவங்காழ்க்கு மித்தியம தன்றே—னிவந்த
கவர்காழ்வி லாச்சுசிந்தைத் தாணுவரை நந்தம்
புலன்தாழ்ப்ப நின்று பணி. (௩௦)

கலித்துறை.

பணியைப் பணியெனக் கொண்டார் சுசிந்தைப் பரசிவனும்
பணியைப் பணியெனக் கொண்டே தன்மேனியிற் பற்றியபண்ணு

பணியைப் பணியெனக் கொள்வானீ யஞ்சுத லற்றுளமே
புணியைப் பணியெனக்கொள்ளமேன்மேலும்பகருவையே.

ஆசிரியப்பா

பகருதற் கரிய பனிமதிக் கலையை
யுகவிடத் தப்புறத் துலாநதிச் சுறவைப்
போய்ப்பொரப் பாயுங் காய்சின் வாளைகள்
சூழ்கோட் டாறுடைச் சுசிந்திர மதனின்
மாணிக்கப் பொருப்பின் மரகதக் கொடி
மாணிப் பொன்னோ டருங்கருந் தாது
மெரிகனற் கொழுந்தொடு சிறுமுகிற் றிரளுங்
கூடிய வெனவிரு கூற்றொரு மேனியின்
பாடிவண் டரற்றிக் கூடுங் கொன்றையொடு
தூளவணி முடியுஞ் சுடர்விழி திலகக்
குளமும் விளங்கக் குலாவிக் கார்நிற
வரியொரு பாலி னழகெழத் தோன்று
மற்புதத் திருவுரு வாகிய பரனே
மெய்ப்புவி யயனையும் வைத்தவ னனுமனை
யக்குறி யெப்பா லாக்கினை யதனையென்
சிக்கறுத் தெனதுட் டெளிவுறச் செப்பே. (௧௨.)

வெண்பா.

செப்புக்கோர் செப்பாய்த் திகழுந் திருச்சுசிந்தை
யொப்புக்கோ ரொப்பாகவோத்தகமும்—வைப்புக்கொட்

டானுவலின் கேச ரடி தாழா தார் நாவிறுதி
நாணுவர்தென் கோணு நமற்கு. (௧௫)

கலித்துறை.

நம்பிக்கை யாயிச் சுசிந்தையிற் றங்கழ ஞுடிநின்ற
செம்பிக்கை யானனைச் சேவைதந் தாண்ட திருக்கருணைத்
தும்பிக்கை யானைத் துப்பினை யின்றசெந் தாமணியே [சே.
வெம்பிக்கையாற்றொழு தேனினையேயென் றும் வேண்டருட்

ஆசிரியப்பா.

வேண்டாமை யொன்றனை வேண்டுவ னகீத
மீண்டைப் பெற்ற வீரமில் யாக்கை
யாண்டே பலவுற வாயினு மின்னே
மாண்டே யொழியினு மன்னே யென்றன்
மனதுன் றன்னை மறத்த லொன்று
வேண்டுத லொன்றனை வேண்டுவ னகீத
யின்றே நாளையே யென்றே யாயினு
மெங்கே யேனு மெவையா யேனு
மாண்டே பிறக்கினு மாயா தாரு
ணீண்டே நீடு நின்கழ னினைப்பே
யாதலி னீண்டே யருளுதி யெனக்கே
காயா மலருங் கம்பு நேமியுந்
தூநீர் வனசமுஞ் சுருதியு மூசியுங்

கொண்டிரு பருக்குமுட் கூறே பட்டு
விண்டுவு மயனும் விளங்கிய வடிவொடு
சுசிந்தையா நகரிற் றாநீர் சடையிற்
கசிந்தரு ளொழுகவாழ் கயிலைநா யகனே. (கரு)

வெண்பா.

நாயக மாகிய நற்பூஞ் சுசிந்தையைத்
தாயக மாக்கிய தாணுவாந்—தூய
விடைக்கொடி யோய்மான் மேவினப் பாவி
ணிடைக்கொடி யாட்கெங் கிடம். (கசா)

கலித்துறை.

இடத்தார்ந்தெழுந்தறமெண்ணான்குமோம்புமையோர்துகிறன்
கடத்தார்ந் தெழுந்தரக்கின் றேருவிற்காட்டுங்கவின்சுசிந்தைத்
தடத்தார்ந் தெழுந்தவக் கன்னிநன் மங்கலத் தாணுவனே
குடத்தார்ந் தெழுந்தமுனிக்கருளக்கொண்ட கோலமென்னே.

கோலப் பொன்னகர்க் குஞ்சரம் வேண்ட
ஞாலத் தருள்வான் போல வெழுந்து
கமலக் கோயில் சுரையவி மறையோல்
வனமுளை பூசி மணற்பரப் பேடல்
கலவ னடைவழி யறியா விதிவரி
பல்லுயிர் படைப்பிப் பண்பினி லயனு
மலைக்கர மொள்வளை யானிரை முல்லை

வேணுக் குழனீர் மெய்ச்சுழி நேமி
யியையய்வெவ் வுயிர்க்கு மினாதரு காப்பிச்
செயனிறை வதிஞற் றிண்ணிய மாலுங்
கங்கை சுமந்து கடுக்கை தாங்கி
யம்பிறைத் தாரொடு பொங்கர வங்கொடு
களமை காட்டிக் கருணை தண் கொண்டு
மறிமா னேந்தி மருவலிற் பரனு
மாயின நாமிவ் வருட்சிவ தானு
விருவரோ டொருவனு மிசைந்து மூவருந்
தானே யாமத் தனிமு வர்க்குங்
கோனு நிலைமைக் குருபர னென்று
காமரிற் கோட்டா ருகிய கன்னி
கமல முகத்துக் குவளை விழித்துக்
குமுதவாய் திறந்து தளவுபன் னகைத்துச்
சைவலக் குழலிற் றண்மணம் புற்புத
முலைமே விப்பி முத்தணி சேர்த்துக்
காழ்நரைக் கலையுடுஇக் கடிகி னடித்தாச்
சூழ்வர வளிமுரல் தோத்திரத் தோடு
வலையலைக் கரத்தாள் மலர்பல தூவித்
தொண்டரிற் சூழுஞ் சுசிந்தையெம் பரனே
யிருவரு மறிதரா தெழுமல்
வுருவெழி லொடுமுறத் துளவென் றேதே. (கஅ)

### வெண்பா.

ஓதற்குத் தக்க வுறைபோ லருட்டாணு
நாதற்குத் தக்கவரு ணற்சுசிந்தை—மேதக்க
வத்திரிக்குள் ளன்பளித்த வப்பரனைப் போற்றுதொழில்
கத்திரிக்குங் கோல்பவங் கட்கு. (கக)

### கலித்துறை.

கழுக்கை யெடுத்தவ னென்ப விடத்துழை காணவல
மழுக்கை யெடுத்தனை யாயினீ செய்கின்ற மாயமென்னல்
லொழுக்கையெடுத்துக் கொளாதுழல்கின்றவொருசிறியே
னிழுக்கையெடுத்தெறிந்தேதன்சுசிந்தைத்தொண்டேற்றவனே.

### ஆசிரியப்பா.

தொண்டினர் தண்டினர் தூவெண் பொடியினர்
மொண்டிதர் கைகண் முகிழ்ப்பத் தலையி
லெண்மரீ ரறுவ ரீரைந்தொ டொருவ
ரிருவரிந் நான்மைபி னீரெட் டிரட்டியோ
டொருவர் வர்க்கப் பெரியவெண் ணினர்க
ளருளுட னண்ணி யாடிப் பாடிச்
சூரற் படையான் சேல்பெறக் குவிர்ந்து
வாரிசித் திருதலை வாய்ந்திடும் பதலை
வலக்கைச் சுட்டால் வாய்ப்புக் கண்டு
பெருவிர லாதி நான்காற் பெருக்கிச்

சிறுவிர லாதி மூன்றுகொடு திருத்தி
யிசைபெற விடக்கைச் சிறுவிர லாதி
நான்கா விடத்தலை நளிர்கொள வெறிந்துமை
கருமுறை தாள வரையொடு தகுசெந்
தூக்கு மதலை துணிவு கோயி
ணிவப்பு கழாஅ நெடுந்தூக் கென்னு
மெழுவகைச் சீரு மிசைகொள வாரும்
பிறைமதி கணைவில் பாம்புபுள் ளடியெனு
மங்கம்* பெறுமநு துரித மாதிய
சங்கை யறச்சம† முதல்யதி யாறும்
பொங்கப் பலவிசைக் கருவிகட் பொருந்தச்
சேர்த்து முழக்கக் திருதோ மென்றிங்
கெடுத்த ஆல்விட் டிடுகால் காட்ட
வெண்டிரை யளந்து செஞ்சடை பரவச்
சுழற்றி யாடுஞ் சுசிந்தைத் தாணுவே
முயலகன் றுடிக்கு முடிப்பவோ முற்றவப்
பயனுறப் பதத்திற் பாலித் திடவோ
மலைமகள் வாது மாற்றவோ மகிழவோ

---

* அநுதுரிதமாதியங்கமாறு — அநுதுரிதம், துரிதம், இலகு, குரு, புலுதம், காகபதம்.

† சமமுதல்யதியாறு — சமம், விடமம், மிருதங்கம், வேதமத்தியம், கோபுச்சம், சுரோதோவகம்.

புலிதரு காலன் போற்றவோ வொருத்தி
கைந்நீ சலையைக் கடுப்பாம் பென்றுள்
நையுற்று விடுத்ததி னஃதா யுதித்த
தனிப்பணிப் பாதன் றவப்பயன் பெறவோ
வவசரந் தாங்கட மாக்காந் கிங்கட
மெவர்பொருட் டிடச்செயற் கென்பதுகிளத்தே. (உக)

வெண்பா.

கிழக்குறுமே யுத்தரமுங் கிட்டுஞ் சுசிந்தை
மழக்குழையான் மேனின் மலனை—வழுத்திமுன்
னின்றிசை யேபாடி னீங்கு பிறகாண்பார்
தென்றிசையே காண்பார் சிறப்பு (உஉ)

கலித்துறை.

சிறந்தவ ரன்றியர்க் கெட்டாவென் றானுஞ் சிவக்கொழுந்தை
மறந்தவ ரன்றியர் மன்னிக் குடிகொண்ட வான்பதியாந்
துறந்தவ ரன்றியர் சூழுஞ் சுசிந்தை யிதிற்றொழுவா
ரிறந்தவ ரன்றிமண் மேற்பிற வாதவ ரென்பதினே. (உங)

ஆசிரியப்பா.

என்பு கரைக்க விறந்தவர்க் கருளு
மன்பு மிகூஉ மந்தி யிந்தி
யந்தி வளையு மத்தல மித்தல
மங்கருள் பவனே யிங்கருள் புரிவோ

ஞாயினு மொன்றிற் கறிபி னீங்க
ஞெருக்கா லாடி னுபர்கதி யூட்டும்
திருக்கோட் டாறுந் தெண்ணீர் நதியு
மிந்நதிப் பெயர்கொண் டிசைந்து விளங்கும்
பத்தி யின்ப முத்தி முதற் படிவச்
சித்தி விநாயகர் சிறப்புற் றோங்கி
வேட்டார்க் கருளுங் கோட்டா றென்னுந்
திருநக ரதுவுந் தீர்த்தமோ டாங்கு
போய்வந் தவரும் போந்து வணங்கும்
தாயகக் கன்னியாந் தாயுறை தலமு
மருங்கு கொண்ட வளமலி சுசிந்தையி
னிருந்தார் நினைந்தா ரேத்தின ரெவர்க்கு
மிம்மை யின்பமு மும்மை முத்தியு
மளிப்பா னாகி யம்புலிச் சடையுட
னமர்ந்தான் றாணுவ னதனை
னமர்கா ணலம்பெற நண்ணுவீ ரீங்கே. (உச)

வெண்பா.

ஈங்கே தனைத்துதிக்க வெண்சுசிந்தை யீசனை
பாங்கேய்கே தாரப் பனிவரையா—வாங்கேயார்
பன்னதியும் பஃறலமும் பார்த்தேதற் கருளியதா
லெந்நதியு மெத்தலமு மீது. (உரு)

## கலித்துறை.

ஈதே பொலனுல கேர்சத்ய லோகம்வை குந்தமெழிற்
சீதேவி யேத்துஞ் சிவலோக மென்னை யெனிற்றினமும்
போதேகொ டிந்திரன் போற்ற வயனரிப் பொற்புடனம்
மாதேவ னார்தவி னாற்சுசிந் தாபுரி வாழ்த்துமினே.(உசு)

## ஆசிரியப்பா.

வாழ்வுந் தாழ்வு மலர்ச்செடிச் சாடி
சூழ்வும் பிரிவுஞ் சொலக் கூத்தவையே
யின்பமுந் துன்பமு மெண்ணி னோயே
வளமையுஞ் சிறுமையு மாண்ட மகனே
யாக்கையு மாவியுஞ் சூறையுந் துரும்பு
மென்றிவை வெறுத்திங் கிறப்பும் பிறப்புங்
கடலலை போன்மெனக் கருதி வெரீஇ
நித்திய மெதுவென நேர நினைந்துட்
சத்திய மறிவார்த் தானுக் கியதீ
யத்திறத் தொன்றினு மணுவு முறாது
ஆதல வாழ்விற் பொருந்திட வேண்டுங்
காத லென்னுங் கரை காணாது
கூவெனுங் குரவையிற் குருட்டெரு தாகிப்
பாவ மென்னுஞ் சேவகன் றள்ளப்
பூவெனும் பெண்ணெனும் பொருகாற் கலக்கு

டாசை யென்னு மலைபடிப் பட்டு
நாசத் தொழிலா நகங்க ளிடிக்க
மோசமா மட்டைகண் மொய்த்துப் பிடுங்கச்
சூதெனும் பாம்புகள் சுற்றி யீர்ப்பக்
காசறு களிப்பெனுங் கராக்கள் கௌவ
வளவாத் துயரும் றழுங்குமென் னுண்ணின்
றூர்த்தருண் மருந்து வார்த்தெளி விளக்கிக்
கொடையலைக் கரத்தாள் கூம்பருட் கப்பலின்
மடியா தேற்றி வாய்த்துதிக் கரையின்
வைத்கா தரித்தனை வான்றெழுஞ் சுசிந்தைக்
கத்தனே முற்றிலுங் காத்து
முத்தியைத் தருதியென் னுள்ளின் முன்னினனே. (உஎ)

வெண்பா.

முன்னிய யாவு முடிப்பா னருட்சுசிந்தைத்
தன்னிக ரில்லாத் தயாபரனை — யுன்னியெழும்
வன்பகத்தை மாற்றி வணங்குவீ ரேற்காப்பான்
றன்பதத்தை யன்போடு தந்து. (உஅ)

கலித்துறை.

தந்தந் திகழ்கரி தந்திட்ட தாகிய தண்ணிதந்
தந்தந் திகளனை நீள்ஞான கானனத் தார்ந்திசைந்தே
தந்தந் திரிந்தே கிடத்தெளிந் திந்திரன் றூழிறையைத்
தந்தந் திறத்தினிற் றூழீ செழிற்கதி சார்ந்திடற்கே.

## ஆசிரியப்பா.

சாந்த வெண்கரி தாழ்ந்திடு மெய்ப்புகழ்
வாய்ந்த ஞான வனத்தினி னகர
மாக்கு வித்திடுமிந் திரனது பாவம்
போக்கிச் சுசிசெய்த புகழ்வினைப் பெயருந்
திருத்தப் படுமச் செல்வ னுமமு
மிசைந்திடச் சுசிந்திர மெனப்பெயர் தந்திங்
கன்னவ னின்ன லகற்றி யென்றுந்
தன்னை வணங்குந் தன்மை யளித்துய
ரமுதலிங் கத்துணின் றருள்வடி வெடுத்தங்
கணையிடை மூளைத்தெழு மருட்குறிப் பெயராய்த்
தழையப் பெற்ற தாணுவே சரண
முழையிடங் கொண் டொருவா சரணஞ்
சனகா தியர்க்கரு டந்தாய் சரணம்
பொங்கிய நதிமதி புனைந்தாய் சரணஞ்
சங்கரா சரணஞ் சதாசிவா சரணஞ்
சரணஞ் சரணந் தற்பரா நீயே
காடு திருத்திய கவின்சுசீந் திரமாய்
நாடுமென் னுளத்தினி னண்ணினை பொன்றின்
குன்றினை யுறுதியாய் வேண்டுவ னஃதென்
னிடுக்கொ ளித்திருந்திடு மிழியழு பகையா
மடவிரை மடமையா மிருளறத்
துடைத்தெறிந் துறைதலென் றாயவோன் சுசியே. (௩௦)

திருச்சுசீந்தை மும்மணிமாலை

முற்றிற்று.

சிவதாணுநாதன் திருவடி வாழ்க.

உ

குமரன்றுணை.

கன்னியாகுமரி

# இன்னிசைப்பாமாலை.

---

## வெண்டளைக் கொச்சகக்கலிப்பா.

### காப்பு.

பதியார்ந்த செஞ்சடையோன் வான்கபிலை நின்றுலகு
கதியார்ந் திடவெழுந்த கன்னிப் பகவதிமேற்
அதியார்ந்த வின்னிசைப்பா மாலை சொலவெனது
மதியார்ந் தருள்புரியும் வல்லபையைங் கைக்களிறே.

### நூல்.

பூவாரு நான்முகனும் பொன்பாக னும்புலவர்
நாவாரு நான்மறையு நாடு மலர்ப்பதத்திப்
பாவாரு மாலையையன் பாற்கொண் டெனைக்காப்பாய்
காவாருஞ் சீர்க்குமரிக் கன்னிப் பகவதியே. (க)

பொல்லேன் புரையேன் புலையேன் புகழ்ந்துருகி
நில்லே னினையே நினையே னெடும்புகழ்ச்சி
சொல்லேன் றுதியேன் றொடரேன் றுரிசறவே
கல்லே னெனைக்காப்பாய் கன்னிப் ப்கவதியே. (உ)

## ௮௨ கன்னியாகுமரி இன்னிசைப் பாமாலை.

ஏரா ரிடைக்கொடியு மின்புறமெய்ச் செந்தளிருஞ்
சீரார் நகைமுகையுந் தேன்வா யிதழ்மலருங்
கூரார் மொழிக்கனியுங் கொண்டென்முன் சேர்வதென்றோ
காரார் கருணைமிகுங் கன்னிப் பகவதியே. (௩)

முத்திக்கு வித்தாய் முளையாய்த் தளிரிலையாய்ப்
பத்திப்பூப் பூத்தடியர் பாலுட் பழுத்தொளிர்ந்து
தித்திக்குஞ் செங்கனியாய்த் தேனாய்நீ சேர்ந்திடநான்
சத்தித் திரிவேனோ கன்னிப் பகவதியே. (௪)

அன்பா லான்பா லகன்றகப்பா லாதரிக்கு
முன்பாலென் பாலாந் துறத்து மறுபகையின்
றுன்பா லடைந்தேன் றுயரொழிப்ப தென்றேனும்
கன்பாலன் பின்றேலென் கன்னிப் பகவதியே. (௫)

படைப்போர்க்குங் காப்போர்க்கும் பார்வா ரொருங்கிமைப்பிற்
றுடைப்போர்க்குஞ் சத்தியெனச் சூழுநின் முன்னென்னி நப
மடைப்போர்க் கடங்கா வறப்பெருக்கம் போலவெறுங்
கடைப்போக்கி றேடிடுமோ கன்னிப் பகவதியே. (௬)

அன்ன நிறைய வறம்வளர்த்தா ளீபேபெண்
றன்னவங்க ணற்றோர்க் குறும்பயனிங் காகுமென
முன்னவர்கள் கூறு மொழிகொண் டுனையடைந்தேன்
கன்னலெழி லார்குமரிக் கன்னிப் பகவதியே. (௭)

மடலார் மலர்மணம்போல் வையச் சராசரத்தி
னுடலாவி யாயமரு முன்பா லடைந்தேனென்
னூடலையற வென்முன் னடித்துவந்தா லாகாதோ
கடலருகிற் றென்குமரிக் கன்னிப் பகவதியே. (௮)

ஆனார் கொடியா ரரனா ரகத்திலகு
மானார் விழியு மதிமுகமுங் காட்டியுன்றன்
றேனார் மலரார் திருவாய் மலராயோ
கானார் குழற்குமரிக் கன்னிப் பகவதியே. (௯)

உம்பர் துயர மொழிந்தற் கெழுந்தவனைக்
கும்பமுனி போற்றுமருட் கொற்றவையென் றற்றேற்குச்
செம்பவள வாய்மலர்ந்தோர் செய்திசொல்ல லாகாதோ
கம்பலையார் தென்குமரிக் கன்னிப் பகவதியே. (௧௦)

தண்டலையின் வண்டொலியுஞ் சாகரத்தின் சங்கொலியு
மண்டலையி னார்ப்புமெழில் வாயிலின்முன் மன்னுதலால்
வண்டலைத விற்றிரிந்தேன் வந்தழைக்க லேறலையோ
கண்டலையுஞ் சொற்குமரிக் கன்னிப் பகவதியே. (௧௧)

போரார்ந் தெழுந்தவுணர் பொன்றச் சிலைவளைத்தாய்
வாரார்ந்த வென்றுயர மாற்றவலி யொன்றிலையோ
சீரார்ந் தலைபுரனுந் தென்குமரி மாநகரிற்
காரார்ந்த கூந்தலெழிற் கன்னிப் பகவதியே. (௧௨)

சண்டனயன்முதலோர் தந்தயரந் தாழ்ந்திடற்கா
யண்டர்தொழ வந்த வருளா லெனைக்காப்பாய்
விண்டருபூஞ் சோலை விளைத்தமலர்ப் பூசிக்குங்
கண்டனைய சொற்குமரிக் கன்னிப் பகவதியே. (௧௩)

மலையரசன் றென்னன் மகர மனைத்துறையின்
வலையரசன் பெண்களென வாய்ந்திடுநீ யித்துறைநீ
ரலையருகிற் கன்னியென வாகியதன் பார்பொருட்டோ
கலைவளர்க்குந் தென்குமரிக் கன்னிப் பகவதியே. (௧௪)

என்னை வருத்து மிராகாதி புட்சட்கிங்
குன்னிடத்தி னீள்புருவ வொண்சிலைபுங் கண்ணம்புந்
துன்னிடலா லென்னுட் டுயரொழிய வந்தருள்வாய்
கன்னமெழிற் றென்குமரிக் கன்னிப் பகவதியே. (௧௫)

விடையவன்பாற் சூது விளையாடி மும்முறைவென்
றுடைமையெனக் கொண்ட வுலகமதி லோர்தலமாய்
நடைவிளக்க வோசோலை நன்கமைத்து வந்தமர்ந்தாய்
கடையே னகம்போலக் கன்னிப் பகவதியே. (௧௬)

முன்னவனை வென்ற முதன்முறைமைக் காங்காங்கே
யன்னவனைத் தன்வாமத் தாக்கி யமர்வதினுந்
தன்னரசு மிக்கதென்று சார்ந்தனையோ விப்பதியிற்
றன்னல்லிலான் காண்பருமென் கன்னிப் பகவதியே. (௧௭)

கன்னியாகுமரி இன்னிசைப்பாமாலை.

புட்பறக்கப் போக்குடம்பை போற்போ முடற்பொய்மையைப்
பெட்பமுறு மங்கலச்சொற் பேணியோ மெய்த்தவத்தர்
கட்பமைய மெய்பாக்கு நன்மையாமீது மெய்யென்றார்
கட்புடைசொற் கட்குமரிக் கன்னிப் பகவதியே. (கஅ)

சித்தமொடுன் சேவடியே சிந்தித்து மாயையினை
யத்திமலர் போலென் றறிபவரோ டக்குணவயோ
முத்தனுடன் வாதாட முன்னி வளைக்கரத்துக்
கத்தனுடன் வந்துதித்த கன்னிப் பகவதியே. (கசு)

விதியைப் படைத்தவுந்தி விட்டுணுவின் காதுதித்த
மதுகயிட வன்மாய மாகிருபை செய்தாயென்
அதிமுறைகள் கொண்டுள்ளத் துன்பொழித்தாள்வாயெவர்க்
கதியளிக்குந் தென்குமரிக் கன்னிப் பகவதியே. [௨௦ .

ஓதரிய துன்பா லுனையடைந்தே னோம்புனையே
மாதவவி ராமன் வணங்கவணைக் கன்பருளிச்
சேதுமூ லத்தலமாய்த் தென்கடற்பாற் சங்கணித்து
காதபூகு காட்டுமுயர் கன்னிப் பகவதியே. (௨௧)

வாகுவலி யாலவுணர் மாய்த்தாயெற் காப்பாயுன்
பாகுடைய மென்சொற் பசுங்கிளிகள் கேட்டலம்பு
மாகுகனுன் பேசரனார் மன்னுந் துறைப்பொழிலின்
கார்குழலார் தென்குமரிக் கன்னிப் பகவதியே. (௨௨)

 கன்னியாகுமரி இன்னிசைப்பாமாலை.

விதியே சொலைவுமெனும் வேண்டார்பா லாக்காமற்
பதியேயென் பார்பாற் பணிப்பாயோ வென்னைமுக
மதியே மலர்த்து மலர்விழியும் வான்பதமுங்
கதியே கவினுமெழிற் கன்னிப் பகவதியே. (௨௩)

வரையா துன்னைத் துதித்து வாழவெனக் கின்பாலிற்
பிரையாப் பொருந்துமயற் பெட்பாலாம் வன்மனைத்
தரையா ரனல்வெண்ணெயின் றன்மையுறச் செய்யாயோ
கரையார் கடற்குமரிக் கன்னிப் பகவதியே. (௨௪)

வாதுற்று நின்னை மலரசிதி யென்றறியாக்
கோதுற்ற வாணனையுங் கொன்றமரர்க் காத்திடுநீ
தீதற்ற சித்தமய தீர்த்தெனைக்காப் பாய்பரதன்
காதற் குமரிநகர்க் கன்னிப் பகவதியே. (௨௫)

சும்ப னிசும்பனுப சும்ப னிவன்மகனி
டம்பநிறை வாளானெனுந் தானவரை வென்றவன்மை
பம்பாத்தி னேன்வினையைப் பாழ்படுத்தப் பற்றுதோ
கம்பமிலாத் தென்குமரிக் கன்னிப் பகவதியே. (௨௬)

துங்கமலி சூலந் துலங்க வெழுந்தெனதுட்
பங்கமடந் துன்பம் பறிக்க வரற்குனது
கிங்கமது தீர்ந்ததுவோ செம்பவளக் கட்டொடுபொற்
றங்கணமார் கைக்குமரிக் கன்னிப் பகவதியே. (௨௭)

வண்டைநிகர் கண்ணிணைதுன் மாயையற வாள்வீசச்
செண்டைநிகர் கொங்கையொளி திண்ணிருட்குத் தீபமிடத்
தண்டைசிலம் பொன்மலத்தைச் சாய விடித்திடநான்
கண்டையந் தீர்வதென்றோ கன்னிப் பகவதியே. (௨௮)

மாலாழி யானோடு வந்த புகழ்ந்திணங்கப்
பாலாழி நோக்கம் பரவுங் கருணையொடென்
மாலாழி மாற வளர்ந்து வனப்பொழுகுங்
காலாழி காட்டாயோ கன்னிப் பகவதியே. (௨௯)

விண்குளிரத் தெவ்வர் வெருவித் துயர்கூர
மண்குளிரக் கொண்ட மரக்காலை யென்மலப்பாம்
பெண்குழுவை மாளவெனுள் ளேற்றியெழிற் றண்மலரைக்
கண்குளிரக் காட்டாயோ கன்னிப் பகவதியே. (௩0)

மலமொழித்துப் பேரின்ப வாழ்வளிப்பா னீயிருப்ப
நலமொழிக்கு மற்றின்ப நாடி யலைந்தேன்றன்
சலமொழிப்பாய் துன்பச் சரக்குலக வாரியுடற்
கலமொழிக்குங் காற்றெனவே கன்னிப் பகவதியே. (௩௧)

வகரத் தயலயன்முன் வாய்த்தமலை யென்றுணயுத்
தகரத் தயலாதி சார்ந்தமரை தாழ்ந்தேனை
வகரத் தயலொன்றை வாய்மலர்ந்தா லாகாதோ
ககரத் தயற்குமரிக் கன்னிப் பகவதியே. (௩௨)

தஞ்சமென்று நின்சரணந் தாழ்ந்தேனை யன்பாக
வஞ்சலென்று வாய்மலர்ந்திங் காதரித்துக் கொள்வாயே
பஞ்சவர்க்குத் தூதானோன் பக்கத் துணையாகிக்
கஞ்சனுக்குச் சூழ்வுரைத்த கன்னிப் பகவதியே. (௩௩)

முக்கோணச் சக்கரத்தி முத்தலைச்சூ லக்கரத்தி
தக்கோர லார்மறத்தி சார்ந்தவர்க்காந் தற்பரத்தி
மிக்கோ ளெனவெவரும் வேண்டவருள் சிற்பரத்தி
கைக்கோலத் தென்குமரிக் கன்னிப் பகவதியே. (௩௪)

அட்டாக் கரத்தியொளி ரைம்பத்தோ ரக்கரத்தி
வெட்டாத சக்கரத்தி வெட்டுமிளிர் சக்கரத்தி
தட்டா துலகுயிருட் சார்ந்துநிற்குந் தந்திரத்தி
கட்டாயெற் காத்தருள்வாய் கன்னிப் பகவதியே. (௩௫)

நாற்பத்து முக்கோண நற்சக் கரத்தாளும்
வேற்பற் றியகரத்தான் மெய்யனையு நீயேயா
னாற்பற்று நுண்பொருளான் னுண்ணறிவோ டுன்கமலக்
காற்பற்றுந் தந்தெனையாள் கன்னிப் பகவதியே. (௩௬)

வேதாந்த சித்தாந்த மேவியவெண் ணெண்கலைக்கு
நாதாந்த மென்றனையே நான்மறையு மோலிடுநின்
போதார்ந்த பாதப் புணையெனக்குத் தந்தருளாய்
காதார்ந்த வள்ளையெழிற் கன்னிப் பகவதியே. (௩௭)

மாடுமணி மாட மனைவிமக்க டன்கனவா
வீடுனடிப் பூவா விரும்பமுத நின்புகழா
நாடுமன மென்றனக்கு நல்குவையோ நீள்குழலாங்
காடுவளர் தென்குமரிக் கன்னிப் பகவதியே. (௩௮)

பொய்க்கிரியை போற்றிப் புலன்றியங்கி நைவேற்குன்
மெய்க்கிரியை போற்றி விளங்குநெறி செய்வாயோ
மைக்கிரியைப் போன்ற மகிடா சுரனைவென்ற
கைக்கிளியார் சொற்கிளியாங் கன்னிப் பகவதியே. (௩௯)

வளர்ந்தமதி யோருமுனை வந்திப்ப துன்றனது
கிளர்ந்தவரு ளல்லாற்றங் கேள்விகளா லாகாதே
யொளிர்ந்திலங்கு முன்னையென்று முன்னவருள்செய்வாயே
களந்திகழ நற்பணிகொள் கன்னிப் பகவதியே. (௪0)

பரமன்முகச் சத்தியைத்தன் பான்முகமாப் பெற்றிடுநின்
பிரமன்காற் சத்தி பிறங்கிடவே கொண்டலர்ந்த
சரணமலர் தாழ்ந்தேனைத் தாங்குவைதீ யோர்க்காய்மால்
கரமன்னுஞ் சத்தியுங்கொள் கன்னிப் பகவதியே. (௪௧)

புக்கிநின்றுன் பொன்னடியே போற்றவர மெற்கருள்வா
யக்கினியே கண்களென வந்தகனே கார்குழன்மெய்
யக்கினனே நுண்மருங்கா யார்த்தவுணர்ச் செற்றவிளங்
கைக்கிளியார் தென்குமரிக் கன்னிப் பகவதியே. (௪௨)

இருளுளத்தை மாற்றிடவென் றெண்ணி யிரந்தேனுக்
கருளுளம தாக்கியெனை யாட்கொள்ள லாகாதோ
வொருபரசி ராம னுளுற்றுகணை சத்தீர்த்தக்
கருணைவளர்க் குங்குமரிக் கன்னிப் பகவதியே. (௪௩)

பூமன் னவரென்றும் பொன்னுடைய ரென்றுமெனை
வேமன் றுயருறுமோ வென்றழிய ஞாயமுண்டோ
வீமன் பவங்கொலைத்த மெய்த்தீர்த்தங் கண்டோர்வெங்
காமன்றெவ் வாங்குமரிக் கன்னிப் பகவதியே. (௪௪)

வந்தனமாய் நின்றுனது மாணடியே தஞ்சமென
நொந்தலைந்திங் குற்றேற்குன் னோக்கருளிக் கொள்வாயே
யிந்திரன்பா வந்தொலைத்த வேர்பெறுநற் றீர்த்தமுறு
கந்தமலி யுங்குமரிக் கன்னிப் பகவதியே. (௪௫)

சேணுவக்கச் சக்கரமாந் தீர்த்தமொடு தென்சுசிந்தைத்
தாணுவனுக் காட்டியநீர் சார்ந்தபெருந் தீர்த்தமதும்
பேணிவைத்த நீயென் பிறப்பொழிப்ப தற்கரிதோ
காணுவர்க்குத் துன்பொழிக்குங் கன்னிப் பகவதியே. (௪௬)

நங்கையெனு நின்னடியே நம்புமெனைக் காப்பாயே
செங்கையெழிற் காவித் திரிதீர்த்த மாயமுனை
சங்கை யகற்றுமுயர் சாவித் திரிப்புனலாய்க்
சங்கையம ருங்குமரிக் கன்னிப் பகவதியே. (௪௭)

சரசோதி தன்பாவந் தாழ்ப்பவந்த தீர்த்தமுட
னுருவாமம் முந்நதியு மோர்கன்னித் தீர்த்தமுமா
வருமாகி னித்தலம்போல் வையகத்தி லுண்டோவென்
கருமாற்ற னிற்கிதோ கன்னிப் பகவதியே. (௪௮)

தன்னடியைப் போற்றவரு டந்தா யடியேனு
நின்னடியைத் தஞ்சமென்று நேர்ந்தேனென் றுன்பமெலா
மின்னிடியைக் கேட்ட விடவரவம் போல்விலக்காய்
கன்னிவப லார்குமரிக் கன்னிப் பகவதியே. (௪௯)

சனகரொடு தேவரெலாந் தாழ்ந்திறைஞ்சுஞ் சங்கரனை
மனமுடனீ பூஞ்சோலை வான்புலத்தாற கொண்டமர்ந்து
தினமியற்றும் பூசைத் தெரிசனமுந் தந்தருள்வாய்
கனகமணிக் கைக்குமரிக் கன்னிப் பகவதியே. (௫௦)

சின்னிலங்காய்த் தேசமெலாஞ் சென்றலைந்து நொந்தேன்றன்
மனவிளக்காய் வாய்ந்துள்ளின் மன்னியருள் செய்தனையா
னனவினிலு மல்லாம லுண்மலரா நின்னடியைக்
கனவினிலு நான்மறவேன் கன்னிப் பகவதியே. (௫௧)

பகவதியம்மன் திருவடிவாழ்க.

இன்னிசைப்பாமாலை

முற்றிற்று

---

உ

குமரன் றுணை.

# திருமருங்கையொருதிவண மாலைக் கருத்து.

---

மருங்கூரென்பது, மருத்துவாழ்மலையென்னுங் கோரக்கர் வரைக்குக் குடக்குஞ்-சுசீந்திரத்துக்கு வடக்குங்-கோட்டாற்றுக்குக் குணக்குந்-தேரையார் கார்புதுருக்குத் தெற்குமாய் விளங்குகின்ற மயூராசலமென்னு மலைமேல் யாவர்களுக்கும் இகபரவின்ப மெளிதி லளிக்குங் கருணைக் கடலாகிய நயது கந்தசுவாமியா ரெழுந்தருளியிருக்கின்ற ஓர் திவ்ய தலமாம்.

இத்தல முருகக்கடவுளரே இகபரவின்ப மளிக்கத்தக்கவரென்று அவரிடந் தனது குறை நயந்ததாகவே அகப்பொருளில் அவர்க்குகந்த குறிஞ்சித் திணையிலே குறை நயத்தலென்னும் பொருள் கொள்ள ஆழ நீளமுடைய சொற்களில்லாமல் தற்கால வழக்கச் சொற்களால் நாடக வழக்கும் உலகிய லொழுக்குமாய்ப் பெரும்பாலுமுறக்கூறப்பட்டதெனக் கண்டுகொள்க. சுபம்.

---

உ.

குமரன் றுணை

# திருமருங்கை ஒருதிவண்ண மாலை.

## காப்பு.

சிவத்தொடு சித்தத்தைச் சேர்க்க வறிலேன் திருவருளா
புவக்கக் குறைநயந் தாங்குசொன் மாலை யொருதுறையாப்
பலக்கட னார்க்கு மருங்கைக் குமரன்மேற் பன்னுறமா
றவத்திற் கிளைத்தமின் னார்மேல வைங்கரன் றுடுணையே.

## நூல்.

திருவாருஞ் சோலை மருங்கூர்க் குமரன் செழுஞ்சிலம்பின்
மருவாருங் கூந்தற் கிளிமே மலாக்கை மடமயிலே
யுருவாரும் பானு வொருகோடி கூடினவ் வொண்சுடரே
பொருவாருஞ் சோதியி னோர்வேல ரஃதிற் பொருந்தினரே.

மன்றாடி மைந்தன்ம யூரா சலத்தனென் வல்லிலையைக்
கொன்றுக மார்கின்ற கந்தன் மருங்கைக் குளிர்வரைவாய்ப்
பொன்றுத சித்திய ரென்னவெல் லார்க்கும் புலப்படுத்தி
நின்று பொருவர் நிலைவென் கொல் லோவென்ற னேரிழையே.

தந்தை மகிழத் தனிமறை தந்து சதுர்முகனைச்
சிந்தை மருளச் சிறைசெய்த சேவலன் றென்மருங்கைப்
பந்தை மருட்டு முலையாய்கஞ் சாரலின் பாங்கர்நின்றார்
விந்தை மனதைக் கவற்று முருவிக்கு வில்லினரே. (௩)

பாமலை யாவு மலைக்கு மொருகைம் மலைபடக்கி
யேமலை யாது சிறுதறி யாரும் மியல்பினரு
பூமலை யாகும் புயத்தர்நின் றார்மலைப் பூண்முலையாய்
நாமலை யாதருள் வேலன் மருங்கை நகத்தரே. (௪)

கண்கருத் தூற்ற பயனைக் காண்பர் கருதுவார்தம்
புண்கருப் பையினைப் போக்குங் குகன்மருங்கைப் பொருப்பி
னுண்கருத் தென்கொன் னுலல்கிலர் வந்திங்கு நொந்தொருவர்
தண்கருத் தேமய மாகிநின் றாயன்னை சாற்றலென்னே. (௫)

போதமெய் யெற்குத் தருங்கருணைக் குகன் பொன்மருங்கைச்
சீத மிகும்வரைச் சாரலி தனிற் செயுஞ்செயல்வா
யேத மெவர்க்குந் தொலைப்பான் றிறங்க ளிசைந்தெவரு
மோத வரிய குறையொன் றுளாரென வுற்றனரே. (௬)

அடுத்தவர்க் காக வடங்காரைச் செற்ற வருட்குகன்போ
லெடுத்தவை வேனின் வடுக்கூ ரிடுக்விழி யேயழுங்கீ
றடுத்த மருங்கை வரையா ரொருகுறை யோரினின்றூர்
மடுத்தரு நீலக் கருணை மழைக்கண் மடப்பிடியே. (௭)

கன்றூற் கனியுகுத் தோன்மகள் காதலன் கன்னிமைந்தன்
குன்றூற்றன் வேலி னகடு நிறைத்த குகன்மருங்கை
நின்றூற்றல் காட்டு நிகரில ராயோர் நெடுந்தகையா
ரின்றூற்று விப்பவர்க் காண்குநர் போலின் றெதிர்ந்தனரே. ( )

கந்த மலிந்தமந் தாரன்றென் கன்னியின் காந்தனென்புன்
பந்த மகற்று முருகன் மருங்கைப் பனிவரைவாய்
நந்த மருங்கா நலிவொன் றொழிபவர் போலுநண்ணி
வந்தமாந் தாரிங் கொருவ ரெவரோ வணக்கிளியே. (௯)

கண்டார்கருப்பைக்கருக்குங்கருணைக்குகன்மருங்கை [வேல்
விண்டா ரகைமணிப் பூண்மலைக் கொங்கையின் னேமிளிர்
கொண்டார்க்கொருவர்நின் றூர்குறைகொண்டவர்கூர்ஞ்செய
னெண்டா ரகலத் துளக்குறிப் பொன்று முணர்த்திலரே. [வி

முத்தி யளிக்கு மருங்கைக் குகன்வரை மொய்குழலே
சுத்த வருவிச் சுனைமலர் நாடுந் தொழில்புரிவாய்
வித்தகர் மற்றவர் பாலோர் குறைநயம் வேண்டுதல்போற்
சித்தங் கனிந்தென் மருங்குவந் தாரொரு திண்ணியரே. ()

ஐயர் பொருட்குப் பொருள்கேட் டறிஞர்க் கருளியவேற்
கையர் மலர்ந்த கடம்பர் மருங்கைக் கவினுடைநான்
மைய முடையாய் மலைத்தே னழித்திடும் வாய்மகிழ்ந்தார்
சைய மொருவர் கருத்தென்கொல் கையுண்டு தண்டழையே.

சீர்கண்ட வாணின் வெளுத்துத் திரிந்து திரைபருகி
பேர்கண் டிறங்கு மருங்கை முருக னெழிற்சிலம்பிற்
கார்கண்ட மஞ்ஞைக் கலாபத்தி னெண்டழைக்கையினொரு
போர்கண்ட வேலர்நின் றூரெழிற்காட்சியென் பூங்கொடியே.

குண்டிகைக் கையுடைச் சாரணர் கூட்டங் குலைத்துமுத்தத்
தண்டிகை கொண்ட மருங்கைச் சரவணன் றண்வரையிற்
சுண்டிகைக் கைவனஞ் சீர்செயும் வாயொருதோன்றறழைப்
பிண்டிகைக் கொண்டுநின் றூரென்கொல்லோநிலைபேசரிதே.

வாரண முன்றில் வயங்குந் துவசன் மகிழ்மருங்கைப்
பூரண முற்ற சிலம்பி னொருவர்தம் பூங்கரத்திற்
காரண மென்னைகொல் சோகத் தசோகக்கவின்றழைகொண்
டாரண முற்று மறிந்தாரிற் காணவிக் கார்ந்தனரே. (கரு)

ஆதியு மந்தமு மில்லாத நீள்புக ழாறுமுகன்
சோதியு மாரமுஞ் சூழு மருங்கைச் சுடர்க்கிரியி
னீதியு ளேபமு முள்ளா ரெனவுண் ணினைக்கத்தக்கார்
சாதி யுறுந்தழை தாங்கிநின் றூரென்றன் றூர்குழலே. (கசு)

வந்தனத் தார்க்கரு ளுங்கும ரேசன் மருங்கையன்ன
யந்தனிப் பாதங்கட் கொக்குங்கொல் லென்றிவ்வசலத்துற்ற
சந்தனச் செந்தழை தாங்கி யொருவர் தனித்தெதிர்ந்து
நொந்தன ராகிநிற் கின்று ரவருண்மை நோக்கரிதே. (கஎ)

மும்மைக்கு மின்ப மளிக்கு மருங்கை முருகன்வெற்பிற்
செம்மைக்குட் செம்மைய ராய்ச்சிறந்தோங்கொருதிண்ணிய
நம்மைக்கொண்டோர்நன்னயம்பெறுவாரினயந்திரங்கி [ர்தா
யிம்மைக்குள் ளின்பமி தாமென மாந்தழை யெந்தினரே.()

மதயானையைத்தெற வாயையங் காக்கும் வலியுடைய
சுகமா ரரவம்மைம் மஞ்ஞைமூன் றெல்கல் கடுத்துவிடும்.
பிதமாக நிற்குமிவ் வேந்தல்கைம் மாந்தழை யின்றழையே
சதமா மெவர்க்கு முருகன் மருங்கைத் தடமுலையே. (௧௯)

செங்கார் பொடிபுனை வேலன் மருங்கை வியன்கிரியிற்
பங்கார் வனமுலை யாயென் பகருவன் பல்கலையுந்
தங்கார் திருமுகங் காட்டி நிலைதரி யாதுநின்று
நொந்தார் கனியொன் றலவன் பெடையை நுகர்விப்பவே.

வண்டார் கடப்ப மலரான் மருங்கை மணிவரைவாய்த்
தண்டார் பிறங்கு மொருவடி வேலினர் தண்பொழிலி
னுண்டா துவந்து மதுகரந் தேனை நுகர்விப்பக்கண்
கண்டார்வ மீறிக் களைத்தார் கருத்தென்கொல் கார்குழலே.

இனியொருதுன்பிலையென்னத் தொலைத்தின்பெனக்களித்த
தனியெழில் வேலன்குகன்மருங்கைச்சிலைத்தண்பொழில்வா
கனியொன்று மந்திக் கொருகடு வன்றரக்கண்டயிற்கை [ய்க்
நனிவெறி யாட்டயர் வாரினின் றொருநாயகமே. (௨௨)

ஆயா ரிலரிவ ரென்ப தறிவிக்கு மாணைத்துத்
தூயா ரொருவர்புன் னாண்டிலின் மீளிற் றடித்தனர்வேற்
சேயார் மருங்கைச் சிலைத்தேன் குளகு திளைத்துப்பிடி-
வாயார வோர்களி றூட்டக்கண் டுற்றுள் வருத்தத்தினே.

விணில்வந்த தேவர் விரும்பு மருங்கைநம் வேலர்வெற்பிற்
குணில்கொண்டு புட்கடி வாயன்கொருசற் குணத்தரன்றே
யணில்வாற் றினைநின் றேர் கிள்ளைதன் பேட்டை யணைத்துச்
மணில்வந்தொருவலை புட்படுபுள்ளின்மயங்கினரே. [செல்ல

பரமன் சிறுவன் மருங்கை முருகன் பரங்கிரிவாய்
வரமன் பிணையைக் கலையொன் றணைக்க மகிழ்ந்தவையு
முரமன்குறிப்பென்கொல் லென்னையுநோக்கினரோடரியோ
டரமன் னயில்விழி யேயொரு வேல ரயர்ந்துநின்றே. ௨௫)

வான்றலை வான்மதி தான்றலை காட்டு மலைதொலைத்த
வூன்றலை வேலன் மருங்கை வரைச்சுனை யுள்ளிரு
மீன்றலை மூக்கொடு மூக்காய்த் திடிக்க மிகமெலிந்திக்
கான்றலை நின்றன ரோர்சிலைக் கையரொன் கார்க்குழலே. ()

அண்டர்க ளேத்துங் குமரன் மருங்கையன் றொருவர்
மண்டழகுற்றேர்மயிறன்பெடையைமருவமயல் [கையைநீ
கொண்டவனொன்முன்வெண் ணெய்யாக்கரைந்தவக் கொள்
கண்டனை யேயுளம் வாழ்கிலை காண்டலை கைக்கிளையே. ()

எனக்கன் பருளுங் குமரன் மருங்கை யெழில்வரைவாய்ப்
புனத்திலோ ரன்றில் பெடையைப் புணரப் புயந்துடித்தல்
வனப்பினர் கண்டு மயங்கிநின் றாரம் மறக்கத்தைநீ
வினைப்படக் கண்டனை யேயுயிர் வாழ்கிலை யேந்திழையே.

சீர்மலிந் தோங்கு மருங்கைக் குமரன் றிருச்சிலம்பிற்
கார்மலிந் தார்ந்திடக் கண்டொரு கைச்சிலைக் காமனன்னா
ரோர்மலிந்தாமுவமப் பொரு ளொன்றினையெண்ணினர்போற்
றார்மலிந் தோங்குங் குழலாய் விளங்கத் தளர்ந்தனரே. ()

போர்கொன்ற வேற்கை மருங்கை முருகன் பொதியவெற்பி
லேர்கொண்டவாவிபுட்சைவலக்துன்னக்கண்டேங்கிநின்றார்
சீர்கொண்டகைச்சிலையோடொருதின்னியர்சித்தமென்றே
கார்கொண் டிருண்டுசு ருண்டலர் காட்டுங் கருங்குழலே. ()

கரும்பின் சிலைநுத லாய்நம் மருங்கைநற் கந்தன்வெற்பி
னிருங்கடி மன்னு மலர்த்தொடைமார்போடெதிர்ந்தொருவ
ரருங்குணத்துப்பிறைதோன்றக்கண்டேமுற்றயர்ந்துநின்றா
பொருந்தும் பொருளொன்று கண்டவர்போலும் புகன்றிடினே. [ர்

திண்கொண்ட கந்தன் மருங்கைச் சிலைப்புரு வச்சிலையாய்
தண்கொண்ட காவி னொருகொம் பிருகொடி தாமெதிர்ந்தா
கண்கொண்ட கண்ட முகமுக நீட்டிக் கவினிநிற்ப [னரே.
நுண்கொண்ட வேலினர் நோக்கியென் னேக்கியோ நொந்த

தாரணி தன்னின் மருங்கைக் குமரன் றணிகைவெற்பி
லூரணி யாகுஞ் சுனையிற் குவளை யொளிரக் கண்டிங்
கேரணி மார்ப ரொருவ ரிணைப்பொரு ளென்குறித்தோ
ரீரணி யொன்றிழந் தார்போன் றிரங்கினர்சேற்கண்ணியே;

என்றுமே. தன்னைப் பரவிடு மன்னை யென்க்கருளிக்
குன்றுதோ றுடுங் குகன்றன் மருங்கைக் குளிர்வரைவா
யொன்றுமா னொன்று மருள்க்கண்டார் பொருளுள்ளென்கொ
நின்றுகைத் தாரோர் நெடுந்தகை யாராயி னீள்விழியே. [லோ

நாக மிணைத்த புயத்தா ரொருவருண் ணுடலென்னே
மாக மருவும் பொழின்மருங் கைக்குகன் மாமலைபிற்
றேக முடையவர் போலே சுனையிடஞ் சார்ந்ததனீ
ராக மலையா நிலைமைகண் டேங்கி யயர்ந்தனரே. (கரு)

மாகந் தருவும் பொழிலார் மருங்கைநம் மாமயிலோ
ரூகந் திருந்து முலையாய் செழித்தவோர் நல்லிளம்பூம்
பூகந் திரண்டுறக் கண்டொரு மன்மதப் பொற்புடையா
ராகந் தளர்ந்தன ரென்னையோ வொன்றை யகநினைந்தே.()

அற்புத மாரு மருங்கைக் குகனு வினன்குடிவாய்ப்
பொற்புடைச் சாமி மலைச்சுனை நீரினிற் பூத்தவொரு
புற்புதங் கண்டு பொருமைய லாகிப் புலனழிந்தார்
கற்புரை தோளிற் கதிர்வே லுடையவோர் காவலரே. (கஎ)

அத்த னருளு முருகன் மருங்கை யணியிமையாய்
சுத்தநன். [illegible] கொடுஞ்செயன் மாருச் சுடர்க்கிரியோர்
மத்தக வாரணந் தாழ்வரம் மத்தக வாய்மைகண்டார்
சித்த முருகி யெவையோ சிந்தித்துத் தியங்கினரே. (கஅ)

புதுமதி யோன்சுதன் கந்தன் மருங்கைப் பொதியமிலற்பி
னிதமதி யுற்றவோர் வேலரங் கோக்கரும் பிங்கிலக
வதிமய லுற்றகந் தாங்கா தயர்ந்தன ரன்னைகண்டாற் .
சதிசெயு மாவினையக் காணுமை யான்செய் தவச்செயலே ().

ஆயு முதிரத் தயிலன் மருங்கை யணிவரையோர்
வேயுயர் வோடு விளங்கக்கண் டாரொரு வீரரிழி
பேயுறு வாரினுங் கண்டறி யோம்விம்மும் பெற்றிகளெந்
தாயுவ ளேயமென் கொல்லோ பிடித்துத் தளர்ந்தனரே. ()

பழமலை நாதன் றனயன் னயனங்கள் பன்னிரண்டா
னழகிய சோலை மலையன் மருங்கை யணிவரைவா
யெழுகிய தேனொடு காந்தண் மலரவங் கோரயிலார்
பிழியுண் டவ்ரினின் னூரவர்க் காண்டிலை பெய்வளையே. ()

அயிலிற் புகைவர் குடர்த்தொட ராக்குநல் லாறுமுகர்
மயிலிற் றிகழு மருங்கையன் னைத்தினை மாவயின்று
பயிலிற் கிளியோன் றலைக்கு மலக்கிலைப் பார்த்துவெய்ய
வெயிலிற் புழுவாய்ப்பொருதயர் தாளெருமெய்ம்மதனே.

வளரு முகிலுறு சோலை மருங்கையின் மாமயிலோன்
களிறு முழங்குந் திருச்சபி லத்துக் கவின்சுனையிற்
கெளிறுதெளிந்தபுன லுட் டிரியவோர்கேண்மைமிக்கா [வே.
ருளமெலிவாகினருவ் வெண்ணமென் கொலோவொண்டொடி

வந்தனஞ்செய்வார்க்கருளுங் குகன்றென்மருங்கைவெற்பிற்
சந்தனஞ் சார்ந்தொரு மென்கொடியும்பர் தனித்தசைய
விந்தனஞ் சேர்ந்த வெரியரக்காகின ரென்னினைத்தோ
வந்தனந் தாங்குங் கொடியா யொருவ ரணித்துநின்றே. (௧)

மால்கொண்டளித்தநல்வள்ளிமணாளன் மருங்கைவெற்போர்
சூல்கொண்ட யானை யசைந்து நடப்பது தோன்றவடி
வேல்கொண்ட கைபெழி லோடொரு வீரர்மெலிந்துநின்றார்
செல்கொண்ட கண்ணா லகிலந் திருத்துந் திருநுதலே (௨)

பெரும்புகழ்மன்னுமருங்கை முருகன் பிணிமுகவா [யொன்
யிருங்கடுப் பாம்பி னிடையாய் கருத்தென்கோ லேற்றறி
றருங்குழைக நின்றெழுக் கண்டெம் குறையிட்டயர்ந்துநின்றா
ரொருங்கெவ் வுலகு மொழுப்பராக் காட்டோ ருரத்தினரே.

கருவண் டிருத்துங் குழலாய் மருங்கைக் குகன்வரைப்பா
லொருநண்டிலா விடக்கண்டா ருறுபொருளோர்ந்த தென்னே
முருதுண் டிலைத்துவண் டார்க்கு மொருதொடை மொய்ம்பு
ரிருளுண்டிலா வியவுள்ளத்த ராயயர்ந் தேக்கினரே. [டையா

வருந்து மவர்க்கரு ளுங்குமரேசன் மருங்கை யன்னாய்
மருந்து மலைச்சுனை வாயொரு கச்சப மன்ன நின்றக்
கருந்து மறலைவிடுத்தென்கொ லோர்பொருளாய்ந்தவராய்த்
திருந்து முகத்தொடு தேம்பின ரோர்கைச் சிலையினரே. )

கண்கண்ட தெய்வ மெவர்க்கு மருங்கைநங் கந்தன்வெற்பிற்
றண்கண்ட கார்மயி றன்கலா பத்தொடு சார்ந்தகவப்
புண்கண்ட சோரி யருவடி வேற்கையோர் போர்க்களிறூர்
நண்கண்ட வெய்மயிர்ச் சிக்குமான் போலு நடங்கினரே.

சேரார் திரிபுரந் தீயச் சிரித்தவன் சேய்விறெடு
பாரார் பரவு மருங்கைப் பணிவரைப் பாற்புயலி
னேரார் களிறென் றொருபிடி பின்றொடர்ந் திக்குவரப்
போரார்விழியம்பெய் தீர்கொலென் றோர்மதன் போந்தனனே

காமன் மகட்கருட் காந்தன் மருங்கைக் கவின்சிலம்பிற்
பூமன் புனத்தொரு யானையா னெய்தகோற் புண்ணொடுநீ
ருமன் கருங்கணம் பெய்ததுண் டோவென் றலாவினின்றார்
மாமன் மகன்கொல் லெனவோ ரெழிலேரம் மாணிழையே.

ஆறிருக் கோடணி யத்த னளித்தநல் லாறுமுகன்
வாரெழி லிப்பொழில் சூழு மருங்கை மணிவரையிற்
பேரெழில் காட்டு மயிலோ டொருவரென் பூங்குழலும்
மூரெது வென்றிங் குருகவி னவின நுண்மையினே. (௫௨)

அன்ப மெனவையுந் தொலைத்திங் கெவர்க்குந் துகளறுநல்
வின்ப மளிக்கு மருங்கை முருக னிமயவெற்பின்
முன்பறியாரொருசேவகர்வேலினொடென்முன்புறநின் [டியே.
றன்பதியாதென் றுரைத்தார் கருத்தென்கொல்லொண்டொ

கயலுற்ற கண்ணிநங் கந்தன் மருங்கைக் கனகவெற்பிற்
செயலுற்ற நன்றெலா முள்ளா ரெனுமுகச் சீரொருத்த
ரயலுற்ற வென்ற னருகிற் கனியக் கனிந்தடைந்தும் [னே.
பெயருற்றதென்னவென் றன்பின்வி னாயினர் பெற்றியென்

பாடும் பணிக்கருள் கந்தன் மருங்கைப் பனிவரையி
னோடும் பணியல்கு லாயுயர் வேலோ டொருவரரு
ணாடும் பணியினீ ராடலென் னென்று நவின்றாநின்றார்
தேடும் பணிதற்குத் தெவ்வரு மென்னுந் திறத்தினரே. ()

உள்ளுறை பாம்பி னுரியுடை யென்னு முயால்குலா
யெள்ளுறை செய்யி னுயிர்கோறு மேவு மெழின்முருகன்
புள்ளுறை கேதன மோடார் மருங்கைப் பொருப்பொருவ
ருள்ளுறைவென்கொனீர்னாடும்பூவென்னென் றிங்குற்றனரே.

கடம்பலர் தாரன் முருகன் மருங்கைக் கவினலையா
யிடம்பல வாரந் திமிசகி றேக்குறு மேர்வரைநந்
தடம்பல வாந்தனம்பூசலென் னென்றன்பிற் சார்ந்துநின்றார்
விடம்பல வூட்டிப் பிடித்தவோர்வேலினர்மெய்ம்மெலிந்தே.

காண்பவ ருக்கருள் கந்தன் மருங்கைக் கவின்சிலம்பின்
மாண்பல வுற்ற மடப்பிடி யேயொரு வாள்விசைய
ரூண்பல நாளற்ற யோகியிற் றாழ்ந்துநும் மூருடையார்
பூண்பதி யாதென்றாற் றாரவர்க் காணிற் பொருகளிறே. ()

பிடித்திடு வேலு நடத்திடு மஞ்ஞையும் பேச்சினுக்கா
யெடுத்திடு வார்க்கருள் கந்தன் மருங்கை யெழில்வரைவாய்த்
தொடுத்திடு பூந்தொடையோடொரு தூயநற் றோன்றலன்று
யுடுத்திடு மென்றுகில் வன்னமென் னுங்கட் கென்றுற் றனரே.

வாரணை சிந்தலக் கீசன் சுதன்குகன் வையமுதற்
காரணை நந்தன் மருங்கை முருகன் கயிலையன்னைய்
பூரணை நந்தரோ ரானந்தம் வேண்டிப் புகுந்தனர்போன்
றோரணைத் தூய்க்கு முனைவங்கட் கென்னென் றுலாவினரே.

பன்னுருங் கந்தன் மருங்கைப் பனிவரைப் பாங்கரினிக்
கன்னனுந் தோளார் வரையாது வார கடைப்பிடியோர்
வன்னகந் தன்னைக் குரங்குகைக் கொண்டு வலிந்துயிர்பின்
மன்னக வாறிற் பிடித்திட லேய்க்குமென் மாணிழையே.

உடுவூ டெழும்பொழி லார்மருங் கைக்குக னெண்கிரிபி
னடுநான் மலைபுலை நம்பாவின் வேலர் நலிவதுவெங்
கடுவூ மரவைப் பிடித்தூக் கற்றேய்க்குங் கடுங்கவிநீர்
மடுவூர் சிறுபுன் னலவனுக் கொல்கும் வழக்குறுமே. (௩௨)

தானவரைச் செற்று வானவர்க் காத்த தனிமுருகன்
வானன் மருங்கை வரைவரை யாத வருகையிரும்
பானதைக் காந்தம் வலிப்பதொப் பாமிஃ தவருக்கித்தக்
கானக மீர்த்தது கொல்லோவென் செய்வரோன் கார்மயிலே.

கூற்றுக்குத் தெவ்வரை யூட்டு மருங்கைக் குகன்வரையிற்
காற்றுக்கு ளாடுங் கறங்காய்ச் சுழன்று கடிதலைந்து [லால்
நாற்றுக்கு மேற்பல நுண்டழை கொண்டிவ ணேந்ததல்
வேற்றுக்கு ணங்கண்டி லேனென்று நின்றனர் வேலவரே.

முன்னாட் டவத்தின் பயனை முளைத்த முறையெனமுன்
பின்னாட் டொழுற்கருள் கந்தன் மருங்கை யெழிற்சிலம்பிற்
பன்னாட் டொடர்ந்தும் பரிந்துங் கனிந்தும் பரசியபே
றெந்நாட் கிடைத்திடு மோவென் றிரங்கின னேந்திழையே.

கலையைக் கலைக்கும் விழியாய் மருங்கைநங் கந்தன்வெற்பிற்
சிலையைப் பிடித்தவர் நம்மிடஞ் செய்யுஞ் செயல்களெல்லா
முலையைப் படைத்தமின் னாரை வளைக்கு முறைதரலான்
மலையைப் பிளப்பது சிற்றுளி யென்னும் வழக்குறுமே. ()

பொடியிட்ட மேனிக்கொடுகொட்டிக்கூத்தன்புதல்வனெழிற்
அடியிட்ட நட்ட மியைந்தான் மருங்கைச் சுடர்க்கிரித்தேன்
வடியிட்ட சொல்லியில் வேலர் குறிப்பித்த வாய்மையுநான்
மடியிட்ட சொல்லான் மறைத்தநுங் கோடியின்மட்டலவே.

கடைக்கூத்தி னன்பெண் குடக்கூத்தி னன்மகன் காதலனைக்
குடைக்கூத்தி யன்ற குமரன் மருங்கைக் குளிர்வரையிற்
படைக்கூற் றிகலயி லார்படி யாத படிப்புழிநிலை
விடைக்கூற்றி னன்பொய் விளம்பாததுமில்லைமெல்லியலே.

௧௦௮ திருமருங்கை ஒருதுறைமாலை.

சித்தர்க ளேத்து மருங்கை முருகன்செந் திற்சிலம்பர்
புத்தமு தச்சொலா யென்னுட் கனிவித்த போதனைகள்
வித்து முளைதளிர் கொம்புபூ பிஞ்சு விளைத்துவெங்கா
யொத்துறு பக்குவத் தேகாந்த னூதனு மொத்தனவே. ( )

மாழைச் சிலைச்சிலை யான்மகன் கந்தன் மருங்கைவெற்பிற்
கூழைச் சிகழிகை மாதேயிவ் வேலர் குழைந்துநின்றென்
னேழைச்-சிறுமதி யைத்தன் மதிக்குள் ளிணக்கிடுஞ்சொல்
வாழைப் பழத்தினி லூசி யிறக்கிடு மாண்புடைத்தே. (௭௦)

வல்லற் களத்தன் மகன்குமரேசன் மருங்கையன்னைப்
மல்லற் றிணிதடந் தோளர் வழங்கும் வழக்குகட்குச்
சொல்லத் தகுவன வாம்பல சொல்லியுந் தோற்றனனாற்
கொல்லத் தெருவினி லூசிவிற் காதென்றல் கோதலவே. ( )

தொண்டரல்லார்க்குத்தெவ் வாமருங்கைக்குகன்றொல்வரை
பண்டருமின்சொன்மென்சொல்லாற்படித்தபதயருட்[யர்
கொண்டறிந் தேனின் மொழியா யுலகியல் கூறறிஞர்
கண்டது கேட்டவர் பண்டித ராமென்றல் காத்திடலே. ( )

சீரனைக் காட்படுஞ் செய்கையனா யென்றன் றேமொழியே
மாரனைக் காய்ந்த விழியான் மகன்றிரு மான்மருகன்
கீரனைக் காத்த முருகன் மருங்கைக் கிரியினிப்பூந்
தாரனைக் காய்ந்துங் கனிந்தும் புகலத் தளர்ந்திலனே. (௭௩)

விடையுகைத் தான்சுதன் வேலன் மருங்கைவியன்கிரிவாய்க்
கடையுறுங் காற்குங் கலங்கா வுளத்தொடு காணகின்றார்
நடைபெறுங் கேண்மை பேருமென் றெண்ணுதுயிர் நட்பி
பெடையெதிர்கொள்ளாவலவனிலைபிற்பிரிகிலரே. [லராய்ப்

பைந்தளிர் மேனித் திருவே மருங்கைப் பதியினுள
நைந்தவர்க் காக்குங் குமரன்றன் செந்தி னகத்திலரி
மைந்த னுருவுட னம்மாட் டடங்கிய மாண்பினர்தா
மைந்தவித் தார்க்குவ மிக்குங் கமடம தாகினரே. (௭௫)

சகத்திலென் றுன்பந் தவிர்த்தின்பந் தந்தோன் றனிமுனிவன்
மகத்தினில் வந்த கடாவிவர் கந்தன் மருங்கைவெற்பி
னகத்துள தொன்று மறைகிலர் காமனன் னரணங்கே
யிகத்து மடற்பரி யேறி வருகுவ னென்றனரே. (௭௬)

கருக்கும் பவங்க ளெவர்க்குங் கழலவென் கன்மனத்தை
யுருக்குங் கருணை முருகன் மருங்கை யொளிர்வரையா
ரிருக்குந் துதிக்கு மெழில்வெண்பொடியுமிளமுலைகசே[யே.
ரொருக்கும் புனைவனென் றுரென்கொ லோகொடிதேந்திழை

தன்னின் வடிவந் தனித்தனி தீட்டிக்கை தாங்கிநம்மூர்
முன்னின் மகிழ்ந்து புகுதுவனென்றுமொழிந்தனனச்[வின்
சொன்னின் னிடத்திற் சொலற்குயிர்வாழ்ந்தனன்றாமொழி
மின்னின்மிளிருமவ்வேலன்மருங்கைவெள்வெற்பிடத்தே.()

குன்றத்தை வைத்தமுலைபாய்கொடிதுகொடிதென்கோலோ
மன்றத்துள் ளாடி மகனுங் குமரன் மருங்கைவெற்பர்
மன்றத்து மேறுவன் மன்றத்தர் தேறவம் மன்றவர்முன்
மின்றத்துவாளான்மெய்புங்குறைப்பேனென்றுவிம்மினரே.

அழிவென்று மில்லா மருங்கைக் குமர னருட்கிரியிற்
பழியொன் றிடும்பொய் பகர்ந்தறியேனிங்கோர்பாதகர்முன்
கழிவொன்றிடாதொன்றுரைத்தன னின்மெய்க்கவினெழுதி
கிழியொன்றெடுப்பனிங்கென்றனராலெங்கிளிமொழியே. [க்

கையி னொளிரயிற் கந்தன் மருங்கைக் கனகவெற்பி
லைய மிலாத வறிவின ராயங் கறைந்தவென்றன்
பொய்யைமெய்யென்றுவந்துற்றனர் பூங்கொடியேயவர்க்கு
செய்ப வுரையொன் றறிகிலன் செப்புந் திறமெனையே. [ச்

முன்பிற் புகழ்ந்தெனை யூர்தியாக் கென்று முடிவணங்கும்
வன்பிற் றிரிந்த வசுரனை யாவரும் வாழ்த்தவுய
ரன்பிற் பணித்த முருகன் மருங்கை யசலமன்று
யின்பிற் சிறந்தவிவ் வேலவரைச் காக்கி னிரும்புகழே. (அ௨)

கற்றவர் போற்று மருங்கைக் குகன்கவி யாணவெற்பி
னுற்றவர் போலின் றுயங்கி யிரங்குமிவ் வுத்தமரை
மற்றவர் போலெண்ண லாமோ மதிமுக வார்குழன்முத்
தூற்ற வரிசை யெயிற்றுவக் கருங்கணென் னொண்டொடியே.

கடலு மலையு மொருங்கு கலக்கயிற் கையினொடென்
னுடலு முயிருமொன் றாகக் கலந்த வொருமுருகன்
மிடலுட னேக்கு மருங்கைச் சிலம்பன் மிளிர்தழைபூ
மடலுமிழ் தேன்மொழி யாய்தரு மோவிங்கு வாடுவதே. ()

ஊன்றந் திலங்கிடும் வேலன்கை வந்து முணங்குறுமோ
யான்றந்த கண்ணி மருங்கை முருகன் மயேந்திரத்துக்
கான்றந்த தண்பொழி லூடுசந் மித்துமென் கால்கொடுபைந்
தேன்றந்தி லங்கி நறுமணங் கான்றவிச் செந்தழையே. ()

பூமனை வாரணக் கந்தன் மருங்கைப் பொருப்பினிற்புன்
றீமதி வாரணத் தைத்தெய்வ வாரணஞ் செற்றதிற்கான்
மாமத வாரண மாய்ந்தவன் கைத்தழை வாடிடவோ
பூமணி வாரணம் பொற்குட மென்முலைப் பூங்கொடியே. ()

தொடச்சுடும் வேங்கை யெனத்தீச்சொலிக் குஞ்சுடரயிலாற்
றிடத்தட வேங்கையைச் செற்றார்தங் கைத்தழைதேம்பிட
கடத்தட வேங்கை மலிபுமருங்கைநங்கந்தன் வெற்பிற்[வோ
புடத்திடும் வேங்கைப் பணியமர்மென்முலைப்பூங்கொடியே.

ஆண்டலைக் கேதனன் மஞ்ஞையன் வேலின னாறுமுக
னீண்ட கடப்ப மலரான் மருங்கையி னேரிழையே
மாண்டகு தோளுடை மாமதன் கைத்தழை வாடிடவோ
சேண்டரு சந்தனப் பைந்தழை யன்றிது செந்தழையே. ()

மாயவன் கொண்டது கொல்லென வந்தவோர் வன்கிடியைச்
சாயமுன் கொன்ற திறலார் தழையுந் தயங்கிடவோ
சீயமுன் செற்றவன் சேய்மருங் கைக்குகன் செஞ்சிலம்பி
னேயகன் றற்றிடுஞ் செந்தழை தன்னினு றண்டழையே

இன்ப மளிக்கு மருங்கை முருக னிமயவெற்பிற்
றுன்ப மெவர்க்குந் துடைக்குந ராயெழி றோன்றுமுகத்
தன்பகங் காட்டி யிரங்கி யலையுமிவ் வாண்டகையார்
தன்பத நோவத் தருமோ தடங்கண்மொய் தாழ்குழலே.()

எத்தனை கூறியுங் கேளா தெதிர்ந்த விகலசுரன்
சித்தனைந் துட்கச் செருச்செய்த சேவலன் செஞ்சிலம்பை
யொத்தவன் றோளுடை யாருளங் கோணி யுயங்கவற்றோ
முத்தி யருளு மருங்கைப் பொழிலன்ன மொய்குழலே.(கூக)

வள்ளிக் குவந்த மணாளன் மருங்கை மணிவரைவாய்க்[பாழ்
கொள்ளிக்கண் வேங்கையும் வேங்கையுமெங்குங் கொளவிரு
கொள்ளிக்கண் ணாரு மெறும்பாய்த்திரிந்துட்குலையவற்றோ
வொள்ளிக்க ணன்னவிவ் வேரொழி லாரிங்கென் னொள்ளிழையே.

பாத மொலித்தலி லாநடைத் திக்கட் படுபுலியுஞ்
சீத மிகைசகி யாமற் குகையுட் செலப்பரந்த
கூதிரி னிக்கதிர் வேன்மெய்ம் மதனார் குளிரவற்றோ
வோதருஞ்சீர்க்கும ரேசன் மருங்கையென்னொண்டொடியே,

மாண முடைய முருகன் மருங்கை வரையனையாய்
நீணக வெண்கு சிறுபுற்றில் வாய்வைத்து நேர்ந்துறிஞ்ச
வேணக மோடுமொய்த் தியலெழமழை யென்றிறைக்குந்
தூண முறுந்துளிச் சாரலிற் றோயவோ தூயவரே. (கூச)

எதிரைப் பெறுத தனியா மருங்கை யெழிற்குமரன்
வெதிரை யகிலடர் வேள்வி மலைக்குகை வேங்கைபுக்கப்
பிதிரை மயக்கி யெழுமுன் பனியிற் பிறழ்ந்திடவோ
கதிரை மயக்கி யொளிரும்பொன் மேனியிக் காவலரே. ()

வணங்கற் கருளு மருங்கைக் குமரன் மருத்துவெற்பின்
மணங்க ணாரந்தழு நொச்சியு நின்று மலர்ந்துதவ
வுணங்குக ளாட்டெழும் யாமத்து மார்ந்திங் கழியவற்றோ
குணங்கண் மிகுந்தவெங் கொம்பேயயிற்கையிக் கோதிலரே.

நகுந்தலை மாலையன் சேய்மருங் கைக்குக னுகத்தின்வா
புகுந்தலை கூளி கொளத்தெவ்வ ரைத்தெறு மோர்திறலார்
புகுந்தலை வுற்றிடுமெண்ணம்புண் ணுதல்பொறுக்கவுண்டோ
மிகுந்தலைந் தார்ந்தல ரேந்தியின் றண்டரு மென்கொடியே.

வித்தை விளக்கு மருங்கை முருகன்வேள் விப்பொருப்பிற்
றத்தை விளக்கு மொழியாய் வளைத்து தழுவியவா
யத்தை யொழிந்திங் கமர்தல்கண் டார்ந்த வறிவுறுமெய்ம்
முத்தை விளக்குங் கரும்பர்மெய் வாடன் முறையலவே. ()

தெவ்வர் களையுஞ் செருச்செய்தன் பூட்டுந் திறத்தினிலென்
னெவ்வ மகற்று முருகன் மருங்கை யிருஞ்சிலம்ப
ரொவ்வ வுவமையோன் றில்லார் தமைநிக ரோரெழிலே
வவ்வ வுறுந்துயர் மாற்றிக்கொண் டாலன்னை வான்புகழே.

தன்னை யடைந்தவர் தங்களைத் தாங்குந் தனிமுருகன்
பின்னை திகழு மருங்கைச் சிலம்பைப் பெறுமுலையாய்
மின்னை யுமிழுங் கதிர்ச்சுட ராழியன் மெய்யனெழி
றன்னையொத்தோங்கிவர்க்கன்பிலையேனந்தவமென்னையே.

பலிதான் விரும்பரன் சேய்மருங் கைக்குகன் பாரவெற்பின்
வலிதான் மிகுத்த வொருவேல ரன்புன் மதிவழிதன்
கலிதான் றவிர்த்திட வந்துநின் றூரென்ன கன்மமிதே
புலிதான் பசிக்கினும் புல்லருந் தாதென்றல்பொய்த்திடுமே.

தேனூர் மொழிமயற் கந்தன் மருங்கைச் செழுஞ்சிலம்பின்
வானூ ரவுயிர் வாங்கும்பைம்பஞ்ஞைவல்லோதியின்வாய்த்
தானூகத் தன்கண் கொடுக்கச் செலுமியல் சான்றுறுமோ
மானூகத் தோளுடைத் தாட்டகர் வந்திங்கு மன்னுதலே. ()

உரையாடி டரிங்கோ ருண்மைவிள் ளீரெணை யோம்பிலிரே
லரையா டிடுமர வல்குலி ஞரிஞே ராரணங்கால்
விரையா டிடுமென் குழலீர் மருங்கைநம் வேன்மயிலோன்
வரையா டிடும்புனத் தேதன் செயற்படி வாழியவே.(க0ங)

கலியைத் தொலைக்கு மெவர்க்கு மருங்கையெங் கந்தன் வெற்
றிலையைப் பிடித்தவர் செய்தியென் னேயுயர் சீவனது [பிற்
நிலையைப் பிடிப்பவ ராயினு மிப்பட னேர்வதிங்கோ
ரெலியைப் பிடிக்க மலைகின்ளு வாரி னிசைந்திடுமே. (௧0௪)

அடித்தடித் துத்திருத் தன்புட னன்புடை யார்க்கருளி
பிடித்துருத் துத்தெவ் வரைத்தெறும் வேல னிருங்கருணை
வடித்தகொத் துப்பிர சம்பெயுஞ் சோலை மருங்கையன்னு
ளடித்ததிர்த் துச்செய்த செய்திக ளெற்கன்புகாட்டியதே.

பத்தியுஞ் சித்தியு முத்தியு மெற்கன்பிற் பாலித்திடுஞ்
சத்தி யயிற்கை முருகன் மருங்கைத் தனிவரையாய்ச்
சித்த நிலத்தினீ வைத்த கருணைத் திருமுளையைக்
கைத்த மனத்தே னறியாத புன்மை களைந்தருளே. (௧0௬)

என்னைக் கலந்த வெழின்முரு கேச னிருங்கருணை
தன்னைக் கலந்த மருங்கைச் சிலம்பர்கைத் தண்டழைக்கோர்
பொன்னைக் கலந்த புணர்முலை யாளன்பு பூப்பவெற்கு
முன்னைத் தவமென்கொ லோவின்று கண்டிட மூட்டியதே.

திருவார் மருங்கை மயிலயில் சேவல் சிறியவென்னுள்
வருமோர் முருகன் சிலம்பன் செழுந்தழை வான்புவிநீ
டருளார்ந்திலங்குமெண் ணான்கற மாமழையார்ந்தொளிர்ந்து
மருவாரும் பூங்குழ லார்கற்பு வாழிய வாழியவே. (௧0௮)

திருமருங்கை யொருதிணைமாலை முற்றிற்று.

---

உ

குமரன்றுணை.

# திருவீரை மான்மியச் சுருக்கம்.

---

திருவீரை யென்பது, திருநெல்வேலிக்கு மேற்கும், பாடகப் பிள்ளையார் கோவிலுக்கு வடக்கும், பொதியமலைப் பாவவிநாசத்துக்குக் கிழக்கும், அரிகேசவனல்லூருக்குத் தெற்குமாய், தாம்பிரபர்ன்னி நதியாற் சூழப்பட்டுப் பற்பல தீர்த்தங்களையுடைய வீரவனல்லூரென்று வழங்குகின்ற வோர் சிவநகரம். இது, புன்னைவனமென்றுந், தவவனமென்றும், ஞானவனமென்றும், மற்றும் பற்பல அற்புதக் காரண நாமங்களையுமுடையன; இங்குள்ள மூர்த்தியானவர்:- புன்னைவனேசர், தவவனேசர், ஞானவனேசர், பூமிநாதர், எனப்பற்பலஅற்புதக்காரணநாமங்கள்பெற்று விளங்குகின்றனர்.

இங்கு, மகத்துவமிகுந்த அகத்திய முனிவர் மெய்ம்மையாகிய நைமிசாரணிய முனிவர்கட்குத் தலவிசேடம், தீர்த்தவிசேடம், மூர்த்திவிசேடங் கூறிக் கூட்டிக் காட்டிச் சேவிப்பித்துப் பூசிப்பித்துத் தமக்குப் பதியாகப்பெற்ற பொதியையிற் புக்கனர். அதுகண்ட அம்முனிவர்கள் இவரது பிரிவாற்றாராய் இவரது தெரிசனை மாறுதலாகிய விப்புன்னைவனத்திற் பன்னசாலை செய்திருந்து நெடுந்தவமியற்ற, அவ்விடைப் பரங்கருணைத் தடங்கடலாகிய கடவுள் ஓர் புன்னையடியிற் பிரசன்னரா யவர்களுக்கு அஞ்ஞானமற்ற மெய்ஞ்ஞான மோக்கத்தை யளித்தனர்.

## திருவீரை மான்மியச் சுருக்கம்

பத்தியிற் சிறந்த சித்திரசேனனென்னுஞ் செழியன் சேர்ந்து தனக்குக் குறையாயிருந்த புத்திரப்பேற்றைக்குறித்துப் பத்தினியோடு மெய்த்தவம் புரிய, அங்குக் கனிவொடு தோன்றிக் காட்சியளித்துப் புத்திரப்பேற்றையு மருள்செய்தனர்.

பின்னரப் புத்திரனாகிய வீரவன்மனென்னுந் தென்னவன், சித்தசுந்தரனைப் பூசித்துச் சந்திரசூட சடாதாரக் கடவுளதருளினாற் காடு களைந்து நாடுதிருத்தி, சிறப்புவாய்ந்த சினகரந்தேவர்கோயின் முதலிய வியற்றிப் பண்ணற்கரிய நன்னகர் புரிவித்து மேன்மையுற்ற நால்வருணத்தோர் முதலியோரையு மமைத்து, நம்பிரானாருக்குக் காலநியமக் கட்டளை முதலியன வேற்படுத்திப் பிரியாத அன்பொடு பெரும்பூசையியற்ற அக்காரணானந்தர் பூரணானந்தராய்க் காட்சியளித்து யாவினுமரிதாம் பேரின்ப வாழ்வளித்தனர்.

பூமிதேவியானவள் பூபாரந் தாங்காளாய் வருந்திக் கடவூரி லொழிந்த சமனைவேண்டி யருந்தவம்புரிய, உளமகிழ்ந்துதித்துக் கருதியவாறு நமனையு நல்கிக் கவலை தீர்த்துப் பின்னுமவள் வேண்டிக்கொண்டபடி எங்கும்விளங்கப் பூமிநாதரெனப் பெயரையுமேற்று விளங்குகின்றனர்.

இன்னு மித்தலத்தில் அகத்திய முனிவரது சாபத்தாலரவுருவாய வந்த நகுடனுடைய சாபவிமோசனஞ் செய்து தேவபதவி யளித்ததும், விராட்புருடன் முதலாயின பற்பலராற் பூசிக்கப்பட்டருள்செய்தனவும் விரிக்கிற் பெருகுமாதலின் இப்பதி மான்மியமாகிய வீரைத் தலப்புராணத்திற் கண்டுகொள்க. சுபம்.

உ

குமரன்றுணை.

# திருவிரைக் கலம்பகம்.



## காப்பு.

பூவார் திருவிரைப் பூமீசற் கன்புறுகற்
பாவார் கலம்பகம் பாவிக்கு—நாவாய்வன்
கல்லங்கம் பெண்பொன்செங் கல்லெனக்கண் டார்பதிகஞ்
சொல்லங்கொம் பொன்றனடித் தொண்டு.

## நூல்.

ஒருபோகு மயங்கிசைக் கோச்சகக் கலிப்பா.

ஆறடித்தரவு.

பூவைத்தும் புகழ்மலியப் பொலங்கிரியை வளையவுமா
லேவைத்தங் கிவரிரதத் திணைக்கால்க ளெனவுமலாற்
காண்பொருளெல் லாமெவர்க்குங் காட்டவிரு கண்களுமா
மாண்பொடுதா னருளியவிண் மதியிரவி களினொன்றைப்
பூணுமர வதன்மணியாப் பொருவித்தவ் வரவெயிறே
காணுமதிப்பிளவிரண்டாக்காட்டினைபின்சடையென்னே.

நான்கடித் தாழிசை மூன்று.

தண்டவினை யேனைத் தலத்தியற்று வானெனவுந்
தொண்டர்களை யிப்பதியிற் றொழுவருளு வானெனவு

மண்டருடன் மற்றெவரு மறியவெம னைக்கடவூர்
தண்டனைசெய் திப்பதியிற் றான்காத்த தற்புதமே. (க)

எத்தலத்தி யாவ ரிடுசாப முந்தொலைப்பா
னித்தலத்த னென்றெவரு மெண்ணவிண் ணிறைட்சிபெற்றுக்
கைத்தலத்தி னெல்லியெனக் காணுமர வாம்வடிவை
யித்தலத்தி லேமுனியா யியற்றியது மற்புதமே. (உ)

தந்தையசை யிலனென்றுந் தனதடிமை யுலகென்று
முந்தைமறை யந்தம்வரை மொழிந்திடவே நின்றிடுநீ
யெந்தைவல்லா ளன்கௌரிக் கின்குழவி யந்தணன்செய்
சந்தவணி கற்குவிலை தானான தற்புதமே. (ங)

தனிச்சொல்

அதான்று

ஈரடித் தாழிசையாறு.

பட்டிமையிட் டுயர்வுடைய பரிசுபெறும் பாக்கியனீ
பிட்டினுக்கா ளாச்சென்று பெய்கூலி கொண்டனையே. (க)
மணிவளையின் றனம்பகர்ந்து வருநயங்கொள் வாணிகனீ
துணிவினொடு மண்சுமந்து சூரலடி பட்டனையே. (உ)
தவப்பான்மை யாவருக்குந் தந்திடலென் றிசைத்திடுநீ
யுவப்பாயோ டொன்றேந்தி யூர்ச்சொ றிரந்தனையே. (ங)
பின்னமற நான்மறைகள் பேசியுமுன் னின்றிடுநீ
யன்னமறை யறியாம லழல்வடிவ மாயினையே. (ச

எப்பொருளுந் தானா யிலங்க விருந்திடுநீ
மெய்ப்பொருளீ தொன்றென்ன மேவி விளங்கினையே. (ரு)

பூரணனா யெவ்விடத்தும் பொலிவுடையோ னாகியநீ
தாரணியோர்க் கருட்ரவித் தவவனத்திற் சார்ந்தனையே. (சு)

தனிச்சொல்

அதனால்

முச்சீரோரடியம் போதரங்கம் நான்கு.

எல்லாம் வல்லவ னேநீ | சொல்லா யார்பவ னேநீ
யாவுநி றைந்தவ னேநீ | சொற்பொருளானவனே நீ.

இருசீரோ ரடி யம்போதரங்க மெட்டு.

ஆதிநீ | அன்றுநீ | அங்குநீ | எங்குநீ
சோதிநீ | இன்றுநீ | இங்குநீ | இறைவனீ.

தனிச்சொல்

எனவாங்கு.

பதினேழ்டி யாசிரியச் சுரிதகம்.

பொன்னகர் புகுந்து புதுமணங் கான்றங்
குன்னிய குளகா னுயர்வனம் புதுக்கி
யடிவழி யமுத மாயிரம் பணத்தான்
படிகொளு மயர்வறப் பான்மையி னளித்துத்
தன்னையண் டினர்முற் றணந்தவெற் கதிரை
மன்னுற விரும்பத் தக்கதன் மலிய

மல்லொடு கனியளி மாரி பெய்யும்
பலசூளை யாசினி பரிமுதற் பொருளும்
பொழிலுறு தனிவளம் பொருந்தும் வீரையின்
முக்கண பரமா முத்தியை யருளென்
றன்பர்க ளேத்து மரனே யடியேன்
மிக்க தொன்றும் வேண்டிலே னந்தத்
தக்க வடியா ரடியவ ரடித்தாட்
கிச்சை யாகி யிரந்தன னதனை
வெய்ய வினையாம் வெப்பந் தீர்த்திங்
குய்யு மாறென் னெஞ்சலை
பெய்வித் தருளலுன் பெருமையிற் றிறனே. (க)

நேரிசை வெண்பா.

திருவார் தரளத் திரளாற் கரையாம்
பொருநா நதித்துறைக்குப் பூணுந்—திருவீரை
மாநகரின் மன்னு மதிச்செஞ் சடையாயென்
பாநலமாக் கொண்டெனைக்கண் பார். (உ)

கட்டளைக் கலித்துறை.

பாரனந் தங்குரு வாமதி சூடுமை பங்கினனை
யாரணந் தங்குரு வாரங் கயன்மன்னு மம்புயஞ்சூழ்ந்
தேரணந் தங்குரு வான்பொழில் வீரையி னேத்திடினற்
சீரனந் தங்குரு வாழ்வுறு மற்றொரு தீங்கிலையே. (ங)

## நேரிசை யாசிரியப்பா.

திங்கனி செறியுஞ் சம்புத் தீவிற்
பாங்கொடு பரத ணண்டகண் டத்துட்
குங்குமம் விளவகில் கொக்கா மலக
மங்குலிற் றருவி வான்மதி தாங்கி
யெழுந்தபூங் கைலை யென்னும் பொதிகையு
மழிந்துதிர் கொங்கு மருங்கனி யிரதமுங்
கலந்தவின் சுவையினக் கைலைதன் முடியி
னலங்கலா யொழுகிய வருண்மிகு யாறுங்
குலச்சிறை பணிகொளுங் கொழுகொம் பாமெம்
மங்கையர்க் கரசியார் வளர்த்த நன்னெறி
தங்குநற் செழியன் றனியெழி ணடுந்
தமிழ்ச்சுவை மணத்தொடு தழைந்துயிர் மகிழ
வமிழ்துறும் பொருநை யார்ந்து கழனிகள்
விளையுமுப் போகமார் வீரைமா நகருங்
களைமிகு மாயிரக் கணக்குறு மருப்புக்
களபமா தியவெண் கடமதக் களிறும்
வேதமெய்ப் பரியு நாதநற் பறையு
மாதரத் தன்பரை யழைக்குமான் கொடியும்
பொன்னினு மின்னும் பூங்கொன்றைத் தாரு
மன்னிய வடியவர் தன்னுளந் தெளிந்தின்
புன்னிய வெவையு முதவுங் கருணையாத்

தன்னிக ரிலாதுகோ ளுங்குதன் னாணையு
முடையவெம் பரமா வுபர்கதி யருளோன்
றாயிர மாந்திரு நாமமு நவின்றுநின்
றாபவர் துதிக்குஞ் சோம சேகரா
வலைமகட் கற்பமுஞ் சலியாது மகிழ
மலைமக ளெனுமெழின் மரகத வல்லியைப்
பாகத் தணைத்தவெம் பதியே சமனுக்
காகப் புவிமக டாகமாத் தொழுது
போற்றிட வருளிய பூமி நாதா
வென்னையுங் காத்திட வேண்டு
மன்னையப் பாநா னன்னிய னலனே. (௪)

## கொச்சகக் கலிப்பா.

அன்னமண்ட மெனவனைய வம்புயத்தின் மணியுகுக்குஞ்
சென்னலைவேள் சிலையெனுஞ்செய்த் திருவீரை யிறையவனீ
சொன்னமலைவளைத்தலுக்குத் துணையாமென் மனமெனும்வ
கன்னவிய வளைந்துனது கழலடிக்கன் பாக்குவையே. [ன்

## நேரிசை வெண்பா.

ஆக்கினாய் வேளைநீ றந்தகனைப் பூங்கழலாற்
போக்கினாய் வீரைநகர்ப் பூமீசா—போக்கியுமென்
புன்னகையாற் றீய்த்த புரமதுபோற் போக்கிலையா
லின்னமெமர்க் கஞ்சுதறீர்ந் தில். (௫)

(மறம்) பதினைன்கு சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

---

தீர்ந்த நெஞ்சுட ஞர்ந்தி டெந்திற நேர்ந்திடாதெமத
னைவுமீனே, சேர்ந்து நின்றொரு வேந்த னீந்திடு சேட்டிதெ
ன்று கைநீட்டி[illegible]னைய்-, வார்ந்த டார்ந்தல நேந்திமங்குலை மானு
மோதியள் பாலொடு, வாழ்ந்திடும்பர மேசர்தங்கிய மாண்பு
மந்திரு வீரையி-, னீர்ந்த ணிந்திலை யேந்து சந்தவி ருஞ்சில
ம்பமர் வேடரென், றெண்ணிலாதெமர்மாதுவேண்டிடு மேந்
தமெலங்கடம் வீரமுட்-, டேர்ந்தி டும்படிகூர்ந்தவெம்பொறி
சேர்ந்து சூழ்ந்திடு மரணிமேனே, சேதமாம்படி மோதிவீசுறு
செய்தியல்லதை யில்லையே. (எ)

(இதுவுமறம்) ஷை.

இல்ல றம்புரி துறவ றம்புரி யெவரு நாடியிறைஞ்சிடு,
மெம்ழில்கொள்வீரையி னமலனுக்கெம திறைவர் மாதையெம்
மலைமுனி-, நல்லமங்கல தெரிசனம்பெறுநன்மைதேறி யளித்
ததா, ஞமுமிங்கு வளர்ந்துநங்குடி நன்னுமான்மக டன்னை
யே-, வல்ல வெங்குல மறவ ராய்வரு மாண்பினுனுய ரிறை
வர்தம், மகனெ னும்படி வந்த வேலுடை வள்ளலுக்கிவ
ணீந்தனஞ்-, சொல்லருங்குல மகளை வேண்டுபு சுருள்விடுத்
திட வந்தநீ, தாகணுனுயிர் வாங்கி லேம்புகை தூர்ப்பல்விட்
டுவற் சொன்மினே, (அ)

## கட்டளைக் கலிப்பா.

சொல்ல ரும்புகழ் வீரையி லேயரைச்
  சோம னைத்தலை யிற்புனைந் தீசனு
ரெல்லொ டும்பொரு மேர்மணிப் பூணொரு
  தேறி வீதிவி மாவரு காட்சிதேர்ந்
தில்லெ னுந்துடி யேரிடை வாள்விழி
  யேழை யாமெனி ளங்கொடி யேகுமுன்
னல்ல லங்கச னம்புய நெஞ்சுற
  வாவி போவிழந் தாடன் னறிவையே. (௯)

## மடக்கு-அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அரிதான் றூங்கு மாம்பல்களே
  யதரந் தாங்கு மாம்பல்களே
வரியேர் விழியங் குவலயமே
  வாயான் மொழிந்து குவலயமே
பரசு முமையாம் வான்கொடியே
  படர்ந்த பாக வான்கொடியே
யிரவார் கண்டத் தெழின்மணியே
  யெனக்குன் வீரை யிடமணியே. (௧௦)

## (தென்றல் விடுதூது) விருத்தக் கலித்துறை.

அணிமலி வீரை நகரினி லாரு மழகேசன்
கணினழ லான்முன் கருகிய மாரன் கருதாதே
துணிவொடு வாதை புரிவதை யாவி துறவாமுன்
றிணிவொடு செப்பென் னுயிரனை யார்பாற் சிறுகாலே. (௧௧)

(நெஞ்சுவிடுதூது) நேரிசை வெண்பா.

காக்கொன்றைத் தாரங் கலைமதியன் பால்வீரைப்
பாக்கொண்டு நெஞ்சே பணிந்தயன்மா—லேனாக்குடையார்
பாங்கி னளியாமுன் பக்குவமாக் காத்திருந்து
வாங்கிவா நான்பெறவே வாழ்வு. (கஉ)

கட்டளைக் கலித்துறை.

வாளுந் தனுவு மெடான்பகை வீரை வரதருக்கென்
றேளுந்தனமுந் துணைவிம்மி நுண்ணிடை தொய்யவெய் தான்
வேளுந் தனதெரி வீசும் பிறையுங்கண் வேல்விடுத்தெந்
நாளுந் தனதுகொள் வேனென் றவர்தமை நாடினளே. (கங)

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய வண்ண விருத்தம்.

நாடச்சிர லாடக்கய லாய்வுற்றன மிசையே
நாடிச்சிற கால்விட்புற மூடப்படி விளையா
நீடிக்கதி ரோடித்தலை நீர்கொக்குண னிகர்பூ
நேரிற்குனி வார்நற்செநெல் வீரைத்தனி விடையாய்
கோடிச்சசி காவற்கடை கோனற்றமர் நகரார்
கோழிக்குரல் ஞாளித்திரள் கோளிற்றெரி வரிதாய்
மாடத்திணை யேவிட்டலி னாடித்தனி வருமான்
மாசற்றிவ ளோடற்பினில் வாழக்கட வதுவே, (கச)

பதினான்கு சீர்க் கழிநெடிலடி யாசிரிய வண்ண விருத்தம்.

கடவப் பரிகரி கனகப் புவிதரு மிரதத் தொடுமே வார்
கடகத் திருவடி விடையைக்கவினெடுவங்தேயிம்பர்வினோர்

திடவுக்கிரவிய நடனச்சதிர்பல செறியத் திருவிரைத், தெருவிழ் பலர்தொழ வெழு முத்தமரிவர் செங்கேசு ளொண் சடைமேற், குடமுற் றிடுமதி பகைமுற் றரவொடு குறுகச் சலியாதே,குளிரப்பிணியிடைய் றுகைக்கனிவொடுகொண்டா ரென்றுபல,வடிவத் தெரிவையர் மயலுற்றிவை சொலிமறு கச்சிவைபோர்பான், மகிழத் துவசநல் விழவிற் பவனியு வந் தேதந்தனரே. (கரு)

## நேரிசை வெண்பா.

தந்தாதி யாரூர் தனித்தமறை காவாரே
லெந்தாகி லத்தவரு மேசுமிவ்—விந்ததமறை
வந்தானிவ் விரையினோர் மானேந்தி மாறந்தான்
மந்தானி லத்தேர் மதன். (கசு)

## (குறம்) எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய வண்ண விருத்தம்.

மதிபொங்கொளிர் வரைமாழைய வீரையும்பழ வரைசீ
வரையுந்தமிழ் வரையோடுமெ மலையுங்குடி யெமதே
விதியின்றனி விதியோடெவர் விதியுங்குறி வழியே
வினையங்கொடு சொலுவேமெழி லெருநின்படி வமதா
நிதியென்றிடு மவளானவெ னிலையைஞ்சுகை யுறலா
னிறையைந்தலை யவர்விரையில் விடையின்புடை வரவே
யிதவின்சொலெ மயிலேகுறி யனுவும்பிச கிலேநீ
யெதிர்கண்டனை மயலேயவ ரிரவிங்குள ரயரேல். (கஎ)

(புயவகுப்பு) வண்ணம்.

அயனரியெ னாளுநைந்து முடியடிக டேடிநொந்து
மறிவரிய தாயெழுந்த வரையென்றி லங்கிமே
லணிகளிடு தீபமென்ப விலகுதமி ழோதுகும்ப
வருமுனிவ ருருகின்ற வருடங்கி யங்கலோ
னியலிரவி யாறுதங்கு முடியுடைய தானசந்த
வரையெனவு மேவிவஞ்ச ரிகளுங்க லங்கமூ
வெயிலடரு மாடகஞ்செய் மலைதழுவு சோதிதந்து
மிமயவரை மாதணைந்து மிசையெங்கு மிஞ்சுமோ
ரியலிசைய நாடகங்க ளிகபரசு சாதனங்க
ளெவையுமுணர் ஞானவன்ப ரியலின்ப சந்தமா
லிகைகளிசை மாலையென்று மிசையவுயர் மூவர்தந்த
விசைபரவு தாமமெங்கு மிளிருஞ்சு கந்தமே
பயகலச மூறுகண்ட விடையனுதி வாள்கைகொண்டு
பணையினிடை மோதலுண்டு பணிகொண்டு மென்றுமே
பலவளமொய் வீரையின்க ணருளுருவ மாயெழுந்த
பரசணியு நாதரின்ப மிகுமம்பு யங்களே. (கஎ)

(அம்மானை) மடக்குத் தாழிசை.

புயலகலாப் புன்னைப் பொழில்வீரைப் பூமீசர்
முயலகன்மே னட்ட முயன்றனர்கா ணம்மானை
முயலகன்மே னட்ட முயன்றனரே யாமாகிற்

கயல்விழியாள் பாகங் கரந்தனளோ வம்மானை
கயல்விழியுள் ளவனுளமேற் கரப்போவலீ தம்மானை. (கக)

கட்டளைக் கலித்துறை.

அம்மானை யப்ப னெனக்காண் முனிவற் கருளுமைங்கை
யம்மானை யப்ப னெனும்வீரை மாநக ரத்தனுக்கெ
னம்மானை யன்ன முலைமலை யாதலை யன்றுவிட்ட
வம்மானை யன்றி யறைந்தா யிழைசென் றறைந்திலளே. ()

(கர்) குறளடி வஞ்சிப்பா.

அளிக்குலமுரன் றரும்பவிழ்பல
வொழுக்கியமதத் தெளிந்துறவதிற்
றமதுருத்தெரி தருவினப்பகை
யெனமதித்துமுன் னிரணியற்றெற
வருமொருநர வரியெனவெருண்
டிகல்தெறிக்கரி யிணமுரத்தொடும்
பொதிக்கையிற்றிரி மதமிளைத்தளை
யொதுங்கிடக்குளிர் மிகுத்திடப்பெயுந்

திறனுடைப்

புயலேவ் வீரையிற் புனித
னயலே யெனுமெனைக் கருளுநாள் வினவே. (உக)

கலிவிருத்தம்.

வினவிடப் புகழ்க்கிளி வேலன் பாலது
கனகமன் வீரையங் கண்ணர் கங்கையை

யன்முமுன் னறிந்தில வார்வ தெங்ஙனே
பனகனும் பணிபதப் பங்க யங்களை, (௨௨)

(மதங்கு) அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பங்குமை தங்கிய பரன்வீரைப் பால்விடை மீதினு லாமேவ
விங்கிதசங்கிதமொடுவான்மின்னேகவிடாதிவையெனவிறுங்
கொங்கைகுலுங்கிடநடமாடுங்கோலமதங்கிகண்ணிணையாலே
சங்கைய றுந்தபி ழிமையாளோற் சாகச ருந்துய ரகலாரே.

நேரிசை வெண்பா.

அகத்தி னகத்தி னழியாமல் வீரைச்
சகத்திற் சகநாத சம்போ—விகத்தும்
பரத்து முனையே பணிந்து துதிக்க
வரத்துக் கலையுமெற்கா வாய். (௨௪)

கலி விருத்தம்.

வாயா லுனையே வாழ்த்துகி லேன்கொடிய
பேயா யுழுபுன் பெண்மயல் கொண்டுகடை
நாயா யலைந்து நைந்தன னனவமே
வீயா தருள்வாய் வீரையின் வித்தகனே. (௨௫)

வெண் செந்துறை.

வித்தக னாந்திரு வீரையி னத்தனைச்
சித்தமு டன்றொழச் செல்வமுஞ் சேருமே. (௨௬)

கட்டளைக் கலித்துறை.

சேராரும் போற்றுந் திருவீரை யத்தன் சிலம்பணையீர்
நீராரும் பூவின் மறவே ளரியெதிர் நேர்ந்ததுகண்
டேராரும் நீல மணிமுடி மேருவி னேறுதற்கு
வாராருங் காஞ்சிக் கதிரேணி மென்படி வைத்தன்மயே. ()

நேரிசை வெண்பா.

வையகமும் வானகமு மற்றுமிலை கைம்மாறென்
றையகமஞ் சூல்வளைபெய் யாரமலி—செய்யதருசூழ்த்
தேர்மருவும் வீரைநக ரின்கரிக ரத்தமியின்
போர்மருவற் சொல்லினணம் பொன். (௨௪)

(கார்) பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பொன்புரைக டுக்கையணி வீரைநகர் வாழ்கின்ற
பூமீசர் தன்றன்வரை
பொறிமார்ப னடிமாறி முடிதேடல் போலப்பொ
ருந்திக்க றுத்தேறிவான்
றன்புதிய வெஞ்சிலையெ டுத்துமின் வாளுருத
டித்துருமி டித்தன்னியே
தண்ணம்பி றைக்குல்கர் மெய்ப்பனித் திருகைக
டீனமாறு தோள்கட்டிநீள்
குன்பினிரு கான்முட்டு கனுநாடி தனின்முட்ட
ராலெயிற டித்தொலிப்ப

வளைவி லுடல் புரளாதொ ருக்கலைத் துத்துகில்கள்
வாரிப்பு னைதத்துட் கடை
பின்புறமு றச்சோலை பொழிகின்ற காரைநம்
பேந்திழைத னக்குன்கரி
பிழைபிறொளி போர்வென்ற வளையிறொலி வாசநீ
றென்றூற்றி னேனதிபனே. (௨௯)

கலி விருத்தம்.

அதிய வாவினென் வீரைபி ன்பர்செய்
மதன லீலை மகிழுமுன் கோழிக
வுதம னில்வின்முன் னேங்கிடக் கூவினுய்
பதிபி னிவளர்ப் பார்க்கிளை யானவே. (௩௦)

(இரங்கல்) நிலைமண்டில வாசிரியப்பா.

ஆவைத் தேனவ யன்பொடு பரவித்
தரைப்பா லென்று மிரப்பார்க் கெவையு
மில்லை யென்னு வியற்பகை யென்பா
னல்லற மனையப நட்புறு மிளமை
நீல கண்ட னேரிழை வாழ்வு
காலந் துறந்தமை கண்டு மேற்றுன்
விருந்து ருமைக் கிரங்கிச் சேனய
பரிந்த தரீந்து மழுகுடல் சோரத்
தான்பசித் திடும்படி தானு வுண்டா
னியற்கை செயற்கை யென்றிரு வாச

மயக்கோ டியினோர் மன்னற் செற்றது
தாணு யிருந்துந் தனிமண வலைமுன்
மானக்கஞ் சாரன் மகள்ளைச வலநற்
பிற்றையேற் றுனிப் பெருமைக ளுன்னி
னற்றையை யாற்ற னண்ப ஞடிக்
காதலின் வேண்டக் கனியா தவள்பாற்
றாதென விரவெலாந் தொண்டுசெய் மதியோ
மானின வேட்டை வேட்டுவ மன்றரு
மூனினை யுண்ட வூக்கமெய் வெறியோ
முன்பெதிர்ந் தொருமண முடிந்தி டாமற்
றன்பெருஞ் சூதாற் றடுத்திடு குணமோ
வெனப்பல வியன்மொழி யிசைப்பவர்க் கருள்வான்
கசியு மனத்தொடு பசியின் மெலிந்தும்
பூசை விடாத புகழ்த்துணை யாருக்
காசை நாளு மளித்திடு மன்னே

லன்புறு மம்மைக் கருங்கனி மீண்டு
மின்புட னுதவிய விறைவா மனத்தி
னேசற வுன்னும் பூசலா ருள்ளத்
தேசுறு கோயிற் சிவனே மணிமுடி
கூற்றுவர் தலைமிசை யேற்றிய பாதா
போற்றுவார்க் கருள்பூ மீசா வருளென்
றிரந்திடு மென்றனை யேற்றருள் வாயே

தெரியே னுளமதை யறியேன் பூவிற்
றவவன வீரையந் தனிநகர்த் தலைவன். (௫௧)

நேரிசை வெண்பா.

தலையலைமா தக்கடியார் தங்களுக்குத் தாள்கண்
மலைங்கட்கு வாமம் வலமாற்—கலைவில்
விலையெனினும் வீரை விமலா வவர்தந்
நிலைபெறுமெய் யோடென்னுண் ணில். (௫௨)

குறள் வெண்பா.

நிலையாமை நீத்தபொரு ளேடிக் கசிவா
ரலையாவீ ரைப்பரனுக் காள். (௫௩)

பன்னிருசீர்க் கழிநெடில்டி யாசிரிய விருத்தம்.

ஆழி வளையோ னயன்பணியு மண்ணல் வீரை நகரிலெனை
யந்திச் செவ்வா னரிசினக்க வல்லாம் வேழ மோதவுடப்
பாழில் கொள்ளி விழிக்குதவப் பானே சிந்து விடமெழுதப்
பௌவக் கூவி செவிடுதரப் பனிக்கா லுயிரைப்பறிப்பதுவே
மூழி நதியால் வெட்டுண்டு முடியா வரித்தெவ்வினன்பாகு
முடங்கேதர்க்காலொன் றுளதிதனுன் முந்நீர்நீந்திமுடியலையோ
நாழி கைபல் லூழிகளா நனிநேவற் கண்டாய் வருசெயல்க
ளுடி யவர்க்கு நவில்பல்வி நவில்வாய் நண்ப னனும்வரவே.

பதினறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வறியனென்றெனை நிந்தைசெய்பவர் வாய்கிழிக்கும்வழக்கதா
வசைகள் வஞ்சக மடமைசஞ்சலம்வாதுவெஞ்சினமிழிவுரு

தறிவதொன் றுழிப்பலபுரட்டுகளாசைகோள்கொலைகளவுகோ
யழிவ முக்குகள் பழிபொ யெளியமாதியெண்ணில தந்தநீ
குறியிருந்துமோர்பொருளிலென் றுல குளருரைப்பதால்வையெலா
குறைவுசெய்தவர்வாயுரைக்கெதிர்குலவநற்பொருட்குவையே [ங்
யறிவொ டட்புலி யிரவி மண்புன லங்கிகால்வெளியான்மமா
யறிவினுக்கறிவாகியெங்கணுமமருவீரைவாழமலனே. ()

### வண்ணக் கலித்துறை.

அமல வீரைபி னயனொ டரிமறை யறியொணாக்
கமல பாதநி னுனைகொ ணபனிடர் கவலைமால்
சிமில மாமுலை பினர்த மயல்கொடு திரிதனீண்
முமல மாதிய வொழியி வருளுடன் முடிமுனே. (௯௬)

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

முடிவிளக்கு முன்பெரித்த கணம்புல் லற்கு
முகமலர்ந்து கைதேய்த்த மூர்த்தி யாற்கும்
பொடிபுனைந்தன் போசிமுருத் திரத்தை யோதும்
புகழுறுமெம் பசுபதியார் தமக்கு மண்ணை
முடியொழிந்து பூசித்துத் தாதைச் செற்ற
மணதுருசு சண்டிக்கு மகிழ நீயாய்க்
சொடிபவினைக் குடியனையுங் கொள்வாய் கொல்லோ
குறிப்பறியேன் வீரைநகர்க் கொன்றைக் கோவே. ()

(காலம்) பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வேதத்தில் வழுவல்செங் கோல்சாய்தல் பொய்விலைகள்
விள்ளல்பயிர் வித்தெ டாமை
வீரதர்குரு துறவர்கல் வியர்பெரிய ருறவிவரை
வேண்டியூட் டாமை முதலாச்
சாதித்தல் கலிகால மென்றதுபொ ருச்சுமை
தாங்கி யுழல்வோர் தேறவே
சான்றோர்க ளிந்தவுடல் ஃந்ததுணி மறுமையிற்
சார்நலமு மெண்ணி யுந்தற்
போதத்தி னுற்கொளுமி லாபத்தை யெவரும்
புசிக்கவருள் கின்ற காலம்
புலியரவு தொழநின்று நடனமிடு பதமடியர்
பூசித் திடுங் காலமாம்
வாதுற்ற பேயலகை யோட்டுறுங் காலமருள்
வாய்த்துநிலை நின்ற காலம்
வளவீரை நகரெவரு மனைகளொடு சிவவேட
மாகிமகிழ் கால மிதுவே. (௯௮)

நேரிசை வெண்பா.

இக்குவளைப் பெண்கையி னிரதி வரங்கொடுப்பேன்
கொக்குவளைப் பேன்வேலை கூசாம—னெக்கிவிடு
மத்தனையும் பொய்யாக வாக்குவனிவ் வீரையரன்
புத்தலர்மெய் போர்த்திப் பொழுது. (௯௯)

கட்டளைக் கலித்துறை.

பொழுதோ விடிந்தது பூமேனி நொந்ததுபோர்விடையோய்
பழுதேயில் வீரை மரகத நாயகி பள்ளியறை
தொழுதோ ரனந்தற் றெழுவருவா ரிக்குத் தோய்ந்தகுறி
யழுகா திருந்திடி லையங்கொள் வார்நம்மை யண்டருமே. ()

(சம்பிரதம்) பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அண்டங்க ளெண்டிக் கலைந்திட வதுக்குவோ
மன்றிகா லங்கையுற
வரியொப்ப வொருகாவி னைக்கொண்டு வான்படி
யளந்திடுவ மல்லாமலுங்
கண்டிட வுறங்குறிய கன்றுவிழ வெறிகுவோங்
கைக்குளே வரைகாட்டுவோங்
கரியவரை மெல்லுவோம் வாரியுண் போம்பெருங்
கடலையு மருந்திடுவமோர்
விண்டபூ விற்பலகன் னகரங்கள் காட்டுவோம்
வீட்டுளுவோ கங்காட்டுவோம்
விதியோடு பலகோடி நூல்கலைக ளாக்குவோம்
வேண்டினோ ரிக்கொடுப்போம்
புண்டரவ கக்கண்மதி புனைகுவோ மன்றியும்
புயலோடு போம்பொழிலெழிற்
புகழ்வீரை யின்றெரு விடையேறு வோமெலாம்
பூமீச ரருளென்பமே. (௪௧)

(இதுவுஞ் சம்பிரதம்) ஷை.

அரும்புக ணிறைந்தநகை யார்தமர கதவல்லி
யாமம்பி காபாகனு
ளருளினு லெழின்மேவு திருவிரை மாகரி
ஞன்றோர்க ளாய்ந்துன்னவே
யிரும்புதனை யோரிரவி னிற்பொன்னெ னப்புரிவ
மேர்வெள்ளி யேலாதிரா
வெண்ணிலவரு பகலினி லப்பொனென் றேவெவரு
மெண்ணவே காட்டுவோஞ்செங்
கரும்பினை யெடுத்துமறை யாமலே வேம்புகை
காட்டிநிற் போமன்றியுங்
கருதிலுயர் பெண்ணையின் ஞெனைன்று ளஞ்சாது
காட்டுவோங் கண்கட்டிலே
விரும்பியவி வித்தைபல பலவாக வேபுகழ்
விளங்கப் புரிந்திடுவரின்
விரிபுவன மிதிலொருவ ருண்டென்று ரைப்பரோ
மேதக்க வென்போலவே. (௪௨)

கலித்தாழிசை.

என்பு புனைந்துயர் விரையி லீச
னன்பு மிகுந்தெரி யாடுமே
யன்பு மிகுந்தெரி யாடு மாயிற்
பொன்புரை மேனியிற் பூதங்கள் பூமழைபொழியுமே.

இன்னிசை வெண்பா.

பொழிலாரும் விரைநகர்ப் பூமீசா வன்பி
னெழிலா ரனகுணைய யின்கற் பறியக்
குழவி வடிவது கொண்டிலேயே லந்தக்
கிழவிசயிப் பாலேளாவங் கே. (சச)

(இரங்கல்)

ஒருபொருண்மேன் மூன்றடுக்கு வெள்ளோத் தாழிசை.

அங்கம் புளகமெழ வன்பினிரு சேய்கொஞ்சத்
திங்க ளுதவியொடுந் தென்விரைப் பூமீச
னிங்கெனது முன்னெழுவ தென்று.
திங்க ளரவுந் தெளிபுனலுஞ் சீராடப்
பொங்கர்மலி விரைநகர்ப் பூமீச னன்பாக
வெங்கண் ணெதிர்தோன்ற லென்று.
வங்பு உரியுடுத்து மான்மழுகை யிற்பிடித்து
பொன்பொலியும் விரைநகர்ப் பூமீசன் பங்கமுறு
மென்பிறவி மாற்றவரு லென்று. (சரு)

வஞ்சி விருத்தம்.

என்று பற்க ளிடித்தவ
னின்று செய்த தயர்த்தியோ
தொன்று விரை தொழாரினி
மன்று மேவிலை மதியமே. (சசு)

## நேரிசை வெண்பா.

மதிமேய் பொழில்வீரை மானிடனே நானெப்
பதிமே யுலகலைப்ப னென்பாய்—மதியாம
லாட்டுவார்க் காடு மரவொன் றுணையாட்டல்
காட்டும் புலிகரியே காண். (௪௭)

## கலி வெண்பா.

காண்பா ரறியாமற் காப்பாய் கலவியினைப்
பூண்பார் புகழ்நிறையைப் போற்றியே-மாண்பாகத்
தன்பக்கர் காப்பாய் தனிக்கோ கிலப்பார்ப்பு
மன்பிற்றன் பார்ப்பாக வாதரிப்பா-யின்பிற்
குளித்துக் குடம்பையினிற் கூடுவா யிச்சி
றுளத்துறற்கா நிற்குலக மூட்டும்-வளத்துடனே
யெந்நிலமு மேத்து மிறைவன் றிருவீரைப்
புன்னைவன மாரும் புயலெழிலே-மன்னியே [ர்க்கு
தன்னிருக ணிற்குமணிச் சார்பொன்றுக் கொண்டேவ
மன்னிமித்தம் வாய்மலரும் வாயசமே-யுன்னிய
வென்னுளக்கண் ணிற்கு மியலழகன் மெய்ப்பாட்டி
னன்னயமாய்த் தேடு நலமுடைய-தன்னுரிமை
தன்னாற் றருமர் தலைப்படவே பொன்றேடி
யின்னே வருவரென் றனன்கற்-பென்னப்
படுவது சொற்றிறம் பாமை யெனுஞ்சொல்
வடுவுறமே யென்றுபோய் வாவென்-றிடவே

கடுவாகப் பூவைபொலி காதிரண்டும் வார்த்துச்
சுடுமுளத்திற் றுன்பஞ் சுமைபா-நடுவற்ற
காமன் கணையுங் கருங்கடலும் வெள்ளிந்தும்
பூமன் கழுது மெனைப்பொரவே-போமிவ்
வுயிரொன் றொழியாதிங் குற்றே னுனைநீ
தயைகூர்ந்தென் றுன்பமெலாந் தாழ-வாயில்வரவாய்
சென்றதிசை முற்கூவிச் சேருமிடமிக்கென்னை [ச்
நன்றியொடு பார்த்து நவிலுவையே-யுன்றன்
வரவு மொழியைநான் வையமெல்லா மேத்தி
விரவமறை பெண்பேன வில். (சஅ)

## இன்னிசை வெண்பா.

வில்லா லடிக்க வெருண்டிலையாங் கென்றவனும்
பொல்லாக் கழலாற் புடைத்தானே மற்றொருவன்
கல்லா லெறிந்திடுமுன் வீரைமணி கண்டாநீ
சொல்லாற் றடாததென்ன சூள். (சகூ)

## மடக்கு-கட்டளைக் கலிப்பா.

சூரன் மேவி வசங்கொடு சூழ்ந்திடுஞ்
சூரன் மேவிய தொல்வரை வில்லன்மக்
தாரன் வான்மலர் தந்தடி தாழுமார்த்
தாரன் வான்மழு வேற்றினன் றுன்றரும்
வீரன் மாண்பொடு வேண்டுநதிச்சிர
வீரன் மாண்பொடி யான்கழல் வீரையிற்

காரன் மானும்வெங் காளெருழ வாழலங்
காரன் றன்னைநீ கண்டையோ கொண்டலே. (ருக)

(வண்டு) மடக்கு-வெண்டளைக் கொச்சகக் கலிப்பா.

கொண்டலுரங் கொண்டலுறுங் கொம்படரும் புன்னைவன
வண்டுகளை வண்டுகளை வாங்கிவந்த வீரையினற்
கண்டனையே கண்டனையேற் காதலினென் கன்னியிவள்
தொண்டரடித் தொண்டாத் தொழுவதைக்கண் டோதாயோ.

நேரிசை வெண்பா.

ஓதா தவர்க்கிங் குணதருளு மொட்டுபோ
நாதா திருவீரை நன்னகர்கா—னைதாரி
விற்றற் பயிருண் ணெருக்குங் களையதுவாங்
கற்றவர்க்கா காது களை. (ருஉ)

(தழை) பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

தழையொன்று கொண்டுமன் மதனல்கு றலையேவு
கணைரண் டொழித்தெய்யவக்
கணைகளையு மேவினு னில்லையே யென்றுட்
கலங்கப் படர்ந்தெரிதரு
மழைமண்டி யெழுவாரி களைமொண்டு பெய்யினும்
வற்றாத காமாக்கினி
வளர்காத றந்தநீ மாமாவெ னீத்தந்த
மருமொய்த்த தண்டழைகளைக்

குழையொன்று வள்ளையொடு பொருகின்றவிழிகடலை
குவமீட் டிணைக்கொங்கைகள்
கொண்டொற்றி வெம்மையும விந்துடல முழுமையுங்
குளிரோங்கி டைலைவிகல்
இழையொன்றொருமைமையென்றவுழைகொஞ்சிவிளையாடு
மொருபாக ஞர்வீரையி
னுனதுபுக ழோங்குதவி னறியமண மானதுவு
முற்றதண் டார்மன்னனே. (ருங)

வெண்டளைக் கொச்சகக் கலிப்பா.

தாரணிந்த வேணித் தனிப்பரனே தேன்பொழியுங்
காரணிந்த காவார் கவின்வீரைக் கட்கனக
வாரணிந்த கொங்கையெழில் வாள்விழியா ளென்னுமதன்
றேரணிந்த தென்னநின்றன் சேவொளித்த தெவ்விடமே

நேரிசை வெண்பா.

எவ்வாறு மூப்ப னிடையன் கடையனெனச்
செவ்வார் கவுரிக்காச் சென்றணைந்தா—யவ்வாமேனர்
போற்றுந் திருவீரைப் பூமீசா வின்டுவெழி
மாற்றலர்முன் காணவஞ்சா மல். (ருரு)

(ஊசல்) எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

மலம்வனிகான் மவிகரணத் தொடர்க ளாக
வளருமவா மணிப்பலகை வினைதொட் டாட்ட

வலமருமென் னுளத்திலுமை யோடு மாடு
மத்தர்திரு வீழியிடத் தளிக ளார்ப்ப
விலகுமலர்க் குழன்முகின்மன் மதனோ டாட
விணைமுலையா மலையாட விடைக்கொம் பாடத்
திலகநுத லிமைசுழியார் திசைகள் பாடிச்
செங்கமலை நிகரெழிலி ராடி நூசல். (ருசு)

கலி நிலைத்துறை.

ஊச லாடுகை முகத்தொரு மருப்புடை யொருசே
யாசில் வீழியி னமலநின் னுழைக்கறு கருத்தக்
காசி லாறிரு கண்ணுடைச் சேயர வெடுத்து
மாசின் மஞ்ஞைமுன் வழங்கநீ மகிழ்தல்வான் வனப்பே. ()

பிச்சியார்-கட்டளைக் கலிப்பா.

வான வர்க்கர சானவன் வீழியின்
வந்திழ் தேத்தும் வனசக் கழலினோ
டூனி ளைத்துல ரோட்டினைக் கைக்கொடே
யூரி ரந்த வொருவனும் பிச்சனே
மான வத்தன் மயலினில் வேல்கொடு
வார்கு ழல்களை வாளுமோர் பிச்சியோ
தேனு குத்திடுங் கொன்றையந் தார்கொளீத்
தெய்வம் விட்டுத் திரிபவர் பிச்சரே. (ருஅ)

(வண்டுவிடுதூது) மடக்கு

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பிச்சி மாலை யடைந்தனள் பிச்சி மாலை பணிந்திவண்
மச்ச மாகம் விடுப்பவு மச்ச மாகம் விளைப்பவு
மிச்ச கத்தரு மேசவு மிச்சகத்தி லிருந்திடோ
நச்ச ருந்தின விரையெங் நாதருக்கறை வண்டரே. (ருக)

(இதுவும் வண்டுவிடுதூது) கட்டளைக் கலித்துறை.

வண்டறி யாத மனையிலை யென்னவிவ் வையகத்தின்
மண்டல ரின்மனைத் தேர்தன் மேலன்றென் றன்மைக்குழலிற்
றண்டளிர் மேனியிற் கண்டறிந் தேயந்தத் தண்மணத்தைப்
பண்டர நேர்ந்திசை வண்டேதென் விரைப் பரமனுக்கே. ()

(கத்தைவிடுதூது) கலிநிலைத்துறை.

பாமர் விரையம் பைம்பொழி லார்பசுங் கிளியே
யமுத ருந்திய மதியுட னகத்திய னுண்ட
பரவை யுங்கன னுதல்விழி யாற்படு பயனுந்
திரளின் மீண்டெனைச் செறுதலை யிறைவற்குச் செப்பே. ()

கட்டளைக் கலித்துறை.

செப்பா ரிளமுலை பங்கன்றென் விரையிற் சேர்ந்தணைந்த
வெப்பா ரிலாவெழி லுள்ளன்ப னிங்கு முளவறிந்தே

வெப்பா லெரித்தனை பத்திரை கேள்வன் விரைந்திலனா[யே.
சிப்பாலென்றன்னிலைபிந்தேபெண்போர்செய்திறமெனை

(கொற்றியார்)

மடக்கு-அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

திருவார் மானைச்செங்கைக்கொடுத்திகழுமானைச்செலுத்தானைக்
கருதாய் வீரைக் காசினிபுட் கவினார் வீரைக் கடிநகரிற்
தருவார் துளசி மணிதாமந் தகவேய்ந் துளசி தந்தினொடு
வருமால் கொற்றி மயலீதேல் வரலே கொற்றி விடநீயே.()

மடக்கு-பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

நீபாய் போன தென்சகியே னிசமாமணிப்பே தென்சகியே
நினைவும் வேறேயென்றேனேநிலைமையறியாயென்றேனே
வாபேசினி சர்க்கரையே வழியோவேறசற்கரையே[ன்றான்
வருவாயணையவணையென்றேன் வரசேதணையேயணையெ
வாயாதென்றேன்மலரென்றான் வாகீழென்றேன்மலரென்று
வரவேயிலையேற் பழியர்தோர் வலியப் புகிற்பொற் பழியாதோ[ன்
வேயார்தோழிபிடமானான்வீரைப்பதியேயிடமானான்[னே.
விருப்பேயெனுமாதரியேனேவெறுப்பேனெனினுந்தரியே

நேரிசை வெண்பா.

தருமன் றனையுதைத்துத் தன்மகனைக் கொன்ற
வொருதொண் டனையு முவந்தாய்—கருவண்டோச்

புன்னைவன விரைநகர்ப் பூமீசா நின்னடிக்கே
யென்னையுமாட் கொள்வாயிங் கின்று. (௬௫)

கைக்கிளை-மருட்பா.

இன்னந்தான் மான்கை யிறைவனுறை விரைந
ரன்னந்தா னம்புயமின் னன்றிம்பின் — னென்னுளர்வீந்
பூந்தெரியல் வாடும் பூமி
னேந்தின லாடிமுடி யிமைந்தகண் ணிணையே. (௬௬)

கட்டளைக் கலித்துறை.

கண்கண் டிடுந்தெய்வ மானவன் யார்க்குமென் கன்மமெல்லா
நண்கண் டினியுமஃ தெய்தாம லன்பி னெருக்கி யின்பத்
தண்கண் டிடும்படி தந்திடும் விரைத் தனிமுதல்வன்
விண்கண் டினுந்தெளி தேமொழி பாகனென் சிந்தையினே.

பதினைஞ்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சித்தவிற் பரிதி தன்கதிர் வெதுப்பத் தியங்கிநா ழிகை
கடந் தடையுங், திங்களெல் வேந்தன் சிதவுட் டினமாந் திற
த்தமு திறைத்தெரி கொளுத்து-, மந்திக ளிரவுஞ் சோதியை
வெயிலா மதித்திவர்ந் திழிந்திடுங் கானன், மன்னிரீ டே
ன்றா பயனுறு துறைகண் மயங்கிடு மதியுழை மருளுங்-,
கொந்தலர் நிம்ப மாமதற் கலுழக் கோகிலங் கூவிடு மாதர்,
குழலினைக் குயின்கொல் லெனமயின் மருளுங் குருடனை சார
ஞனம் நிகைகள்-, தந்தூறு குணத்தாற் றென்றலு மலேபுந்

தாங்கொணு வேனிலாங் காலந், தனியரன் வீரை நகரெனை
த் தனிவைத் தகன்றன ரன்பரென் சகியே. (சுஅ)

நேரிசை வெண்பா.

சகியே கொடுவாவென் றன்வேய்ங் குழலை
மகிநாதன் வீரையின்கண் வாசித்— தகமகிழ்வித்
தாணுயர் பெற்ற வருட்டனிமை தீர்த்திவணுன்
ருணுய பேறுபெறு தற்கு. (சுகூ)

பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய வண்ண விருத்தம்.

பெறுவ தற்கரிய தாகுமோ பிரம முற்றபர ஞானியாம்
பிழைமயி லப்பருட லாவியே பிரிதரத் தொழில்செய் பேயரோ
சிறும ணிச்சிவிகை பேறினர் திரும டத்திலிடு தீயரோ
சிவகுளத் தையழி பேதுவால் தெளிவுகெட்ட விழியாளரோ
செறிவிளக் கிடநெய் தேடநீர் தெரியவிட் டிடெனும் வாயரோ
தெளிவு கெட்டசம ணையரே திருமி குத்தசிவ நேயரா
யறிவு முற்றுமெதில் வீரையா ரடிய ரைத்தழுவி வாருமே
யருணி றைத்தவவ னைசணு ரடிம லர்ப்புதவி யாருமே. ()

கட்டளைக் கலித்துறை.

ஆற்றுந் தலையம் பணிந்தான்றென் வீரையி ணுயிழையே
சேற்றுத் தலையம் பணிபூண்டுற் றேனருள் செய்தனன்கள்
ளூற்றுத் தலையம் பணியாக வேளெய் துறுமிடரை
நாற்றுத் தலையம் பணிவேட்ட விற்சொல்லந் நண்பனுக்கே.

### நேரிசை வெண்பா.

நண்பொ டளகேச னற்பொன் றாவிருக்கத்
தண்பொழிலார் வீரைநகர்ச் சங்கரனே—பண்பிற்
பரிகொடுப்பே னென்று பணம்வாங்கிக் காட்டு
நரிகொடுத்த வாறென் னவில். (எ௨)

### (பாண்) தரவு கொச்சகக் கலிப்பா.

நவிலுவகே ணறுங்குழலோர் நகைவிறலி பகர்பவனம்
புவியிலுறப்பழமுறத்தாற்புடைத்தீதகனேட்டெடுத்தான்சீர்
பவமகற்றும் பரன்வீரைப் படப்பையிற்புன் பயிர்கவர்சம்
புவனுறுவா ரடர்ப்பவுயிர்ப்படக்கியொளித்தெழுலோவுமே.

### (இதுவும்பாண்) நேரிசை யாசிரியப்பா.

ஓவ்வ லொவ்வா துரைக்கு மிசைநூல்
செவ்விற் றேர்ந்து சீர்தூக் கிசைகள்
காதமு தென்னக் கீதங் கேட்டா
ருள்ளும் புறனுந் தெள்ளிதி னுருகப்
புள்ளும் விலங்கும் புல்லு மரனுங்
கல்லுங் கசியக் கரிந்தன வுயிர்ப்பத்
துல்லிய மாகச் சுரமொடு பாடும்
புண்பினை யுடைய பாண கேண்மோ
வெவ்வுல குக்கு மிறையா மொருவ
னுளனவன் றன்பா லுறுவார்க் காதக்

கண்டிப் பதியின் முண்டகத் தயன்ற
னொண்டலை யுகிரது கொண்டு பறித்தான்
கோவ றன்னின் மேவந் தகனைச்
சாவச் சூல மேவிச் சாய்த்தான்
றிருவ திகையிற் சினமொடு திரியெயில்
குறுநகை யாலே கருக வெரித்தான்
பறிய லூரின் மாமனை மாய்த்தான்
விற்குடி சலந்த ரனைக்கொலை செய்தான்
பழியார் கரியைப் பழுவூ ரெய்தான்
செருக்கிய மதனைக் கொறுக்கையி னெரித்தான்
றருக்கிய தருமனைத் தாண்மல ராலே
கடவூ ரதனிற் றிடமா யுதைத்தா
னித்திறக் கொற்றத் தியல்ப தான்று
தன்பா லென்று மன்புறு செழியற்
கின்பா லாலவாய்ப் பொற்கிழி யீந்தான்
மழைகுறை வாலே விளைவது வஃகி
நலிவே ளாளர் கலியது தீரக்
குறைவி லாநெற் கோட்டை யளித்தான்
றன்னைப் புகழுந் தனிப்பா ணற்குப்
பொன்னிற் பலகை பொன்பணி தந்தன்
கின்னக் கொள்கென் றெழுதிய திருமுகஞ்
சேரலன் பாலிற் செல்கெனக் கொடுத்தா

ஞூழியின்-மலைமிதப் பாதின் றூற்கு
மூழியு முலையாக் காழி முனிக்கும்
விழி பிழலையின் மாழை யீந்தா
னாரூர்க் குளத்தி லகப்பட வென்றா
காரூர் விருத்த கிரியிற் காசு
சுந்தர னுக்கு விந்தையி னுதவினன்
கந்தர மிஞ்சிக் கைக்கொடை யன்றிச்
சித்திர சேனச் செழியன் செய்யும்
பத்தியி னைப்பில் பாலனை யீந்தா
னப்பா லகனையு மாட்கொள வுன்னி
நட்புடன் வீர வன்ம னென்ன
நாமஞ் செப்பி நற்கதிக் கவனுற்
றன்பெய ராலே தனிநகர் செய்வித்
தேசக் குடைதந் திருமையு மீந்தா
னொழிந்த நமனை யுலகாள் பாரங்
கழியா தேத்தப் பிழைகள் பொறுத்திங்
கழியா துயிர்மெய் யளித்துக் காத்தான்
கும்ப முனியின் கொடுஞ்சா பத்தால்
வெம்பிய் வரவாய் மெலிந்தான் றன்னை
யிடரொழித் தெழிலா ரியன்முனி யாக்கினன்
றன்கிரி யெடுத்த தலைபத் தினனைப்
புண்பட நெரித்துப் பொறுதினந் திசைக்கு

யிசைகேட் டின்பி னிரங்கி யாண்டா
னின்னவை கேட்டியா னிவன்பாற் போயென்
றன்னது குறைக டவிர்த்தன னீயு
மின்னவன் றன்னை யிசைந்தடி யிறைஞ்சி
னின்னது கலியு மிளமை வலியு
முன்னைய வினையு மின்னே கழியு
நன்னயத் தவப்பல முன்னையுண் டாயிற்
பின்ன மில்லாது பேணக் கிடைக்கு
மன்னவ னிடமிய லறையிற் பல்வளப்
புன்னையங் காடு புயலினை மருவக்
கதிபெறு முனிவர்கள் கடுந்தவம் புரியப்
பொதியையின் குணபாற் பொருநை சூழ
விண்ணுற வோங்கும் விரிகதிர் மாடத்
தொண்கதி விருப்பின ரோடி வம்பினென்
றன்பினி லழைத்தல்போன் றன்கொடி யாடுந்
தனியெழில் விரை நகரெனுந் தலத்திற்
பாலுட் பவளம் படுமெய்ந் நீற்றுக்
கோலத் தொடுபைங் கொடிபடர்ந் தென்ன
மரகத மெனுமெழின் மாதொரு கூறும்
புனித மாதவர் போற்றுபூம் பதமுந்
தோன்றவாழ் கின்றனன் சோம சேகரன்
றவவ னேசன் றற்பரன் சங்கரன்

புன்னை வனேசன் பூமி நாதன்
கருதுவா ருள்ளங் கனிகொள
வருளே திருவுரு வானவன் றனே. (௭௪)

ஓரொலி வெண்டுறை.

தானவரும் வானவருந் தங்குறைக டீரவெனத் தாங்குங்கஞ்ச
மானவரும் பொன்னடியா னைஞ்சாடும் பூமீச னன்பி னருங்
கானவரும் பலர்விரைக் கார்குழல்கண் ணைல்வின்
போனவரும் புண்ணியரா மென்போதந் தரினே. (௭௫)

கட்டளைக் கலித்துறை.

போதந் தழையும் புலவருள் ளும்முன்பு புக்குமுன்னை
வேதந் தனக்குமெட் டாமென் றியம்பலெவ் விரைநகர்
நாதந் தழுவு மெனையுள்ளு மாமொன் றுநண்ணியபாங்
காதந் தருமணப் பூங்கொன்றைக் கண்ணிக் கனகவெற்பே.

(நவம்) பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

ககனவழி சஞ்சரித் தக்குகைகள் காடுமலை களினின்று
நோற்பார் தவமுங், கனல்புனலி னின்றுபுரி தவமுமக மாற்
றல்பொடி கண்டிபுனை கின்ற தவமும், மிகதருமு சிவதருமு
மறைபுகலா கமநெறிக ளின்படிந டப்பார் தவமு, மினியத
மிழ்வடமொழிக ளோதுவித் திடுதவமு மெத்தவமும் வீடு
தவவே, குணமரு கின்றபொரு னைக்குறுக் குத்துறைக்
குக்குடக் கொண்கபிலையாங், குளிர்சந்த வரையின்கு ளைக்

காகும் விரைநகர் குடிகொண்ட பூமீர்தங்-, திகழுமல ரடிக ண்மற வாவுழுவ லன்பினர்க டிரிகின்ற சீரடிகளாற், சிதறி யெழு தூசுளனமொ டணியுமவ ரடிகண்முடி சேர்த்தறவ மென்றறைவமே. (௭௭)

நேரிசை வெண்பா.

தவவணமார் விரைநகர்த் தற்பரா நீளின்
பவவனமாற் றங்கட் பரமா—சிவனையுன்
கையினின்ற வம்புபால் காணுமம்பி னம்பொனுந்
தையலொடுஞ் சார்ந்ததென்ன சால்பு. (௭௮)

(கலி) எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

என்னவில்லவன் குருத்துணையா வியலிலார்க்கே
யிரும்பாலை வெளியாக்கு கிழலையியும்
பன்னரிய வேடுறும்பூப் பதநீ ரூறும்
பழந்தருமா விரைபினம் பணைமே யன்பார்
சின்னநிலைச் சாணேறூர்கண் முட்டி வாங்கிச்
செகத்திறக்கப் பட்டைபிசை பருகு வோங்கே
ருன்னி லுனக் கெயர்திகெரன் னுடன்கொண் டக்கா
லுபர்ந்தசகத் திடமிகுமுட் களியுண் டாமே. (௭௯)

நேரிசை வெண்பா.

களிப்பாக்கும் வெற்றிலைப்பூங் கண்ணிச் சடிலக்
குளப்பாற்கண் விரைநகர்க் கோனைத்—தளிப்பாலார்

நந்தியுந் துருந்துதந்தி கந்தனங்கை சண்டியுங்க
சிந்துவந்து அங்கிதொழுப்பர்ச் சேசன். (௮௰)

## கட்டளைக் கலித்துறை.

சேவாட் டியகொடி யான்கங்கை யித்தனி செஞ்சடையா
னேவாட் டிருக்கண் ணுமைகோன்றென் வீரை யிறையவன்ற
பாவாட் டியதொடை மார்புகண் டிம்மான் படுமயற்கெத் [ன்
தார்வாட் டிலைப்பலி தந்தென் னவற்றொழுத் தாழ்ந்திடுமே.

## மடக்கு-கலிவிருத்தம்.

தால மீதி னிறைவனைத் தாழ்ந்தனே
தால மீதி னிறைவனைத் தாழ்ந்தனே
கோல வீரை யகத்தற்கு வந்தனே
கோல வீரை யகத்தற்கு வந்தனே. (௮௨)

## நேரிசைவெண்பா.

வந்தானு மிந்தானு மாளிலுகம் பொன்னண்பன்
வெந்தானை யாக்கியா விட்டுனுவோ—வெந்தாவு
மங்கம்பெண் ணுக்கினற்கு மப்பன்கான் வீரைபர
னிங்கபர்வே னெப்பிறைவி டேப. (௮௩)

## வச்சிலையார்-கட்டளைக் கலித்துறை.

இராமன்வன் பாயெயனை விண்ணின் றெரித்திவ்விராவணனீள்
கராமன் கடற்குட் கரந்தான்வான் மீதெனுடன் கைவலையா

லராமன் சடைப்பரன் விரையன்பாகொண் டளிக்கினுனைத்
தராமன் றரங்க மணிமீன்றந் தாமெனன்று சாற்றுவனே. ()

மடக்கு-கட்டளைக் கலிப்பா.

சார ணந்தங் கலந்தொலிக் கும்பொழில்
சார ணந்தங் கலமெனச் சால்செயுங்
கார ணந்தங் கலர்நிறை வாவியுங்
கார ணந்தங் கலமலி பண்டிறேர்
வார ணங்கந்து கந்திரி வீதியும்
வார ணங்கந்து கத்தனத் தாருஞ்சேர்ந்
தார ணங்கன விரைபி சற்றெழு
தார ணங்கனம் பஞ்சிடாச் சிரமே. (அரு)

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சீரார் விரை நகர்ச்சிவனே திறன்மு வெயிலைச் சிரித்தெரித்த, வேரார் நகையு மதற்காய்ந்த விணையில் விழியு மெனதுமயற், காரார் மடநீள் காட்டையதிற் களிகொண் மதவா ணவக்களிற்றைப், போரார் சினமா மெனும்புலியைப் பொடிக்கத் தொழில்செய் தெனைக்காவே. (அசு)

பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

எனையும் படைத்தனை யானும் பிறந்தன னிச்சகம மெச்சகமமோ, வெப்பிறப் பினுமானு டப்பிறப் பரிதென்ப ரேன்கொலோ வஃதுற்றுமா, னுனையுந் தொழாதடியர் தமை

யங்கொளா தழுது ழந்தினென் கதியுன்னலே, யுலகிற்சீ
காளத்தி யென்பத்த வஞ்செய்த வம்பலர வுமையாளையோ-,
நினையும்ப டிக்குலகர் கோட்செங்கட் சோழனென னேரப்
புரிந்திட்டநான், ணிமரிக்ஷி லம்பியோ நின்சரிதை கேட்டு
குருகீல்கு நவி லியாநாரையோ-, வினையக்தெரிந்திடா வணை
சட்கு நான்பெற்ற மிங்கமா னுடமொக்குமோ, வீரைமா
கதவன்வி பாகனூ பீசனீழ் மேலென்ப தென்விள்ளினேன. (அஎ)

## ஆசிரியத் தாழிசை.

விளங்கிழை முயங்குமெய் வீரையா ரீசனங்
களங்கமின் மானுனைக் காதலா லுகிறைல்
வளங்கெழு மடல்களில் வரைதலோ வாளே. (அஅ)

## (சித்து) பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வரைசிற கரிந்தவன் முடிசிதற வளையெறிந் தோன்மா
பன் முன்கற்கரி, வான்முறுங் கெத்துள்ளி யார்த்தருந் தக்க
ழை வாயூட்டு வித்திரும்பைத்-, தரையினுயர் பொன்னெ
னச் செய்துபொன் னனையள்பாற் றந்துலர நெற்காற்றி
டைத், தனிவேலி கட்டிமணி யரவைமுனி யாச்செய்த தா
ழ்ச்சடைச் சித்தருறையுங்-, கரையிலெழில் வீரைநக ரருளி
னுன் முன்றளியி னெஞ்சுண்டல் கண்டிருப்பீர், கஞ்சாக ரத்
தலம நிற்செப்பு கைகொண்டு காணக் குடித்திடுவமன்-,பரை
யருள னைத்தொழுது மதுபாருகு வோஞ்சித்தி யார்த்தமுத

ளித்திடுவிரேற், பகருமே யயர்ந்துகண் மூடிவிழிக் குமுனி
ரவு பகல்காட்டு நஞ்சித்திடேய. (௮௯)

நேரிசை வெண்பா.

நஞ்செழுந்த தென்றஞ்ச நாகருக்கா வந்நஞ்சை
மஞ்செழுந்த தென்னவைத்த மாமிட்டகள்—கஞ்சக்
கருணைவளை வார்க்குக் கடுவமு தாகும்
பொருணைவளை வீரைநகர் போந்து. (௯௦)

(இடைச்சியார்) எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

போதுற்ற கண்ணனென் பூங்கலை யெடுத்துமறு புன்
னையி லொளித்திட்டதுங், கோதற்ற வெமதுநில மாலுமா
லும்பொனிகர் கொன்றையுங் கொண்டனெனப், பேதுற்றி
லங்குபாற் கடமோடு வீரையிற் பிஞ்ஞகன் பாலேகுநீர், தீத
ற்ற பெயாது மிடைச்சியென் நீர்பொய்மை சிற்றிடையின்
மற்ற துறவே. (௯௧)

கட்டளைக் கலித்துறை.

உருத்துப் புலமைத் திறற்கீர னைத்தொலைத் தோர்ந்து
பின்பு, பொருத்துப் புடைப்பொன் னெனக்கல்வி போதம்
புதுக்கினையாற், கருத்துப்புண் டீர்ந்து களித்தே னென்பா
நலங் காண்பையென்றே, மருந்துப்பு மானக் கடுவுண்ட வீ
ரையின் மானிடனே. (௯௨)

(வலைச்சியார்)பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

மாலுண்ட கண்டர்திரு மலிவிரை நகரத்தின் மதுரக்கு ளத்தாடநீர், மச்சங்க ளொன்றினையும் வலைவீசி யடரென்ற் வலையுட்ப டாப்பொய்கையிர், சேலுண்டு கெளிறுண்டு சினைவரா லுண்டுவளை திண்கமட நண்டுண்டுநீர், செங்கமல மேலான் குமுத மோடொளிர்க ருங்குவளை தெண்குமிழி தண்ணசைவல், மாலுண் டணைந்தாட வாழுமுண் டமுதாடி யயர்வுற்றி டிற்பற்றிட, வங்கொடியு முண்டுகரை யேறிடப் படிகளுண் டமுதப்பெ ருக்கெடுத்தே, மேலொன்றி னைப்படியின் மீதே னியுண்டொருவர் விளையாட விருவர்க்குமே, மிகுமின்ப மிப்புதுமை பந்தாமு ருதநா மெய்ப்பலை கலைத்தேதப்பமே.

வண்டு-வேற்றுமை வெண்டுறை.

ஏவினு முனியினு மிடையுனை யேய்த்தா னிகல்வேளுந்
தூவினு மூக்கினு மாயவ்வி ரண்டையு நசிப்பாயே
சேவினு லாவரன் விரையின் றேனே
மாவினு மரையினு மெனைமலைந் தாயே. (௧௬)

பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

மலையவெழின் மண்ணாதி பூதச்சு ரோத்ராதி வாக்காதி சப்தாதியும், வசனாதி மனமாதி மற்றுமிடை யாதிதச நாடி காற் பிராணாதியும், மலைவிக்க வமாவாசை யம்மாதி யன்னமய கோசமா தியுமா யமைமக், கன்றிமலம் வாதாதி யேடணைகா

யாதிரா சததாம தந்தனைழந்து-, நிலைமைதெரி யாதுவினை
நினையா துவத்தைசாத் விகநெறி யறியாதநா, ளிகழுங்கி யா
திமன் டலம்விண்டா ருதார நிலைகண்டு நினைநேர்வதே-,
வலையம்பு கொண்டுபுள் வல்விலங் கடுகின்ற வனசரரை மே
ராமெனை, வலியவந் தருள்புரிவை யல்லாது புகலில்லை வளை
யீரை நகரிறைவனே. (சு௫)

## பதினறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இருவர்கடந் தொழில்புரிய விறந்தார் தங்க ளெலும்
பணிந்த வீரைநக ரிறைவ னேநின், னிணையிலடி யர்க்கிட
லை நினைக்கா மென்றங் கெணிமூர்க்க ரிடுமியல்புங் காரி யார்
தாங்-, கருதருமைந் தினைக்கோவை யுலகர்ப் பாடிக் கனிவி
ருதுப் பெற்றவித்த கருத்து மெல்லிற், கழனியிட்ட வித்
தெடுத்தாட் டிளையான் சிருங் கல்லடித்துத் தலையுடைத்த
குறிப்பர் நட்பும்-, பரிபவமொ டிடங்கழியர் கொள்ளைக் கா
செற் பட்டறையைத் திறந்திட்ட பண்பும் போரிற், பட்ட
தலை யிற்சடைகண் டெரியில் வீழ்ந்த படியில்புகழ்ச் சோழ
ற்பிரான் பரிவும் வீந்த-, திருமகனை மறைத்தப்பற் கமுதப்
பூதி செய்தவன்புங் கேட்டிருந்து மவர்கட் போற்றத், தெ
ரியாதின் குன்றனையே துணையா யுன்னிச் சிந்தித்தே னென
க்கருளச் சிந்திப்பாயே. (சு௬)

## நேரிசை வெண்பா.

சிந்தித்துச் சிந்தித்துச் சித்தமெலாம் புண்ணாகி
வந்தித்து வந்தித்து வாய்நொந்தேன்—பந்தித்த

சத்தியொரு பாகத் தனிமுதலை வீரையின்கண்
முத்திதர வாவென்றான் முன். (௯௭)

கட்டளைக் கலித்துறை.

முனிவரைக் காக்குந் தவனவீரை மூதநகரின்
பனிவரைக் கார்குழற் பைங்கிளி பாகப் பரனருளாற்
றனிவரைக் காட்டலர்த தாரனு மன்னைநக் தையலுமுன்
னினைவரைக் காணு நிகையுமருவின்ப நேர்ந்தனமே. (௯௮)

நேரிசைச் சிந்தியல் வெண்பா.

நேர்மின் னினையுமி னேயர்களே வீரைநகர்
சேர்மின் றெரிசியுமின் சிந்தையுமின் — றார்மன்னுந்
தார்மின் சடைப்பரமன் றாள். (௯௯)

நேரிசை வெண்பா.

தாழ்வழிக்கின் றென்னைத் தனதடிமை யாக்கியருள்
வாழ்வளித்துக் காத்து வலியவான் — சூழ்வசதி
யூட்டிபுநல் வீரை யுமைபாகா வென்றலையிற்
பூட்டினனின் றாட்கமலப் பூ. (௧00)

கட்டளைக் கலித்துறை.

பூவான் பரவுந் திருவீரை யத்தன்றன் புத்திரரின்
மாவான் பழநீ யெனநின்ற சேப்பெயர் வாய்ந்தவெழி
லோவான் பழநிக்கு மாரனென் றேபெயன் னட்டைமுற்றும்
போவான் புனைந்தன னென்றலை மீதுதன் பூங்கழலே. (௧0௧)

பூமிலிங்கேசுரர் பொன்னடி வாழ்க.

திருவீரைக் கலம்பகம்
முற்றிற்று.

———

உ

குமரன்றுணை.

# திருவீரைப் புராந்தகமாலை.

---

## காப்பு.

### வெண்பா.

பூம்பொழிலார் வீரைநகர்ப் பூமீச னென்றுமெனை
யோம்பொழியா தாண்டிடவென் அன்னிமனத்—தேம்பில்
கலித்துறையான் மாலையவன் கான்மலரிற் சூட்டக்
கலிக்கருணை யைந்துகரன் காப்பு.

## நூல்.

### கட்டளைக் கலித்துறை.

திருவார்ந் திலகு மணிமார்ப மாலயன் றேடரிய
வுருவார்ந் திலகு முனையென்று முள்குவர்க் கூட்டருளாத்
கருவார்ந் திடாதினுங் காவெனு மென்னையுங் காத்தருள்வாய்
பொருவார்ந் திடாப்புகழ் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (க)

பன்மாலை வேய்ந்தத னேடுனை யேம்பிப் பன்னுமென்றன்
சொன்மாலை வேய்ந்துன் மலர்க்கழ லைத்தலை சூட்டவந்த
வெண்மாலை யோட்டி யருள்வாய் திகிரியோன் நீந்துதவிப்
பொன்மாலை யாட்கொண்ட வீரைப்பூ மீசப் புராந்தகனே

மின்னு ருடைநடை மீதே மயங்கி மெலிந்துமுனை
புன்னு ருடனனு தேனித மேத்துவ னேம்புவையே

கன்ஞெ ருரித்த தெனத்தன் கழலைக் கருதவைத்து
பொன்னொரு மாபுகழ் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (௩)

இலவே புரக்குங் கிளிபோ லிலங்காத் திடருறனன்
தலவே யெனவுள் ளறிந்தில னிங்கினி யாகெதியென்
மலவே ரறுத்தான் மலரடி யேயென்றும் வாழ்த்துமுயர்
புலவோரை யாட்கொளும் வீரைப்பூ மீசப் புராந்தகனே. ()

உள்ளலம் பும்பொரு வாவுங் கருணருள் வாயொளிக்கை
வள்ளலம் பும்பொன் மலைவிலுங் கொண்டரன் வாட்டியசீர்
கள்ளலம் பும்பொற் கடுக்கையின் வண்டுகள் காத்தொலிப்பப்
புள்ளலம் பும்பொழில் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (௫)

போதங் களவு புலைகொலை காமம் பொருந்திருந்தன்
போதங் களைத் திடவலைந் துள்ளலைந் தோய்ந்தயர்ந்து
போதங் களந்திடும் வாழ்நாட் கழிப்பனே பூம்பொழிலிற்
போதங் களம்பொக்கும் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (௬)

துன்னும் புலியி னலப்பெருஞ் சூறை சுழற்றிடவே
மன்னும் பிறவிக் கடன்மாயப் பாய்மரம் வாழ்கொடிபோன்
றின்னுந் துயரமுறேனின் னடிதொழ வின்பருள்வாய்
பொன்னுந் தொழுந்திரு வீரைப்பூ மீசப் புராந்தகனே. (௭)

பேய்வாய்கொள் பிள்ளையிற் பெண்மாயைகொள்ளப்பிறழ்ந்
நாய்வாயெலும்பிற்போன்மனஞ் சூடிலைந்தகலியுமெற்குத் [திரண்டு

தாய்வா யிளங்கன்ற வாப்போற் றனதன்பு தந்தருள்வாய்
பொய்லாவென் றைய்திரு வீரைப்பூ மீசப் புராந்தகனே. ( )

தூற்றுதநெல் லுட்பதராகி னெண்டருட் டொண்டனென்
காற்றுடி யிற்குடும் பக்கால் சுழற்றக் கரங்கியநா [னென்
றேற்று தடைந்தே னறியாம லாருமன் பாய்ந்துகொள்வாய்
போற்றுரும் போற்றுகல் வீரைப்பூ மீசப் புராந்தகனே. ( )

முன்னையஞ் சோர்புன் முனிபாம்பு செற்ற முரண்கொலைனை
தன்னையங் கேகண் டழுங்கிடற் கேயுளத் தச்சமின்றி
பென்னையக் கேயிருந் தாய்புலி பாம்பொ டிபமுறையும்
புன்னையங் காட்டினில் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (௧௦)

உன்னுடல் வேழம் புலிதோ லளவே யுளதவிடை
மன்னுகைம் மாபுத் தேறவகங் காரக்கைம் மாசினப்புல்
லென்னள வேயுள தின்னடிக் கேதுணை யேற்றருள்வாய்
புன்னையங் காட்டினுள் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (௧௧)

குறித்திக் கிழிமிசை யாற்றுமை கூறிக் குவலயமே
இவனுத்திக் துணிவும் விதமுஞ்சொன் றுயிர்த்தவோ ருழையா
மறிக்கட் டடவிழி யாட்டீட்டி லன்புன்றன் மாட்டினதோ
பொறித்தற்குன் னேதிரு வீரைப்பூ மீசப் புராந்தகனே. ( )

ஊமனு மல்ல னுனைப்பா டவுமில னுன்னிடிற்புன்
காமனைக் கப்பிறு னெண்பதி யார்க்குங் கரியுடையே

ணேமனே யோட்டிட வெப்படி நீயு மிரங்குவையோ
பூம னயன்றொழும் விரைப்பூ மீசப் புராந்தகனே. (௧௪)

அன்றிலன் டங்குசம் பேடொடு கூடு மலைந்திடவே [ன்றெ
நின்றிலகும்பெண்ணை நீண்மடல் கொய்யினக் னீர்மையுடைய
மென்றில கெம்பெண்ணைக் கண்டொரு பெண்ணை யெழுது
பொன்றிக ழுந்திரு விரைப்பூ மீசப் புராந்தகனே [வையோ

பாமண மாநினைப் பாடற்கும் பாதம் பணிவதற்கு
நாமக ளன்புனை நம்பினர்க் கேபிறர் நட்பியலேன்
மாமண துன்னினை யென்காவென் றேனின் மனதறியேன்
பூமக ளேத்திடும் விரைப்பூ மீசப் புராந்தகனே. (௧௫)

ஆட்டை யெடுத்திடக் காட்டை யடைந்தது மார்கொடியா
மாட்டை மகிழ்ந்தது மானினர் வேட்டை மதியொடுபுன்
னேட்டை யுவந்தது மூர்முன் னறவனே றும்பறக்கப்பும்
போட்டையென் பேனருள் விரைப்பூ மீசப் புராந்தகனே.

தேங்கா தளிக்குமென் பொன்வாய்க் குமுதந் திகழ்கிளியின்
வாங்கா தெழுதவை யவ்வாய் மழச்சொல் வரைகுவையோ
மாங்காய் விளங்காய் மருவு நிரைகனி வான்றளையும்
பூங்கா வுறுந்திரு விரைப்பூ மீசப் புராந்தகனே. (௧௭)

மின்னேயம்பின்னின் மிளிர்வேயென் றன்பின்மின் றூர்ப்புகல்
மன்னே மரகத மாமணி மன்னுஞ்செம் மாணிக்கமே [வேன்

தன்னை ரனற்கட் டனிவரை யேயென்று சாற்றறியேன்
பொன்னேர் பொறுத்தருள் வீரைப்பூ மீசப் புராந்தகனே.

ஒழியாமனீமறைந் தானெச்சிறுவன்டனையுன்பணியே[னென்
தொழிலார்ந்திருஞ்சைவத்தொண்டர்க்குச்சூதறச்சொல்லுவ
பழியாவுமாய்ந்திடப்பார்த்தெனக் கின்னருள்பாலிப்பையே
பொழிலாரும் பல்வள வீரைப்பூ மீசப் புராந்தகனே. (ககூ)

பெண்ணினைமண்ணினைப் பொன்னினை நாடிப்பேதையெற்கி
மண்ணினி னின்னைத்தொழவாய்க்குமோவென் றுவாடுகின்றே[ம்
னெண்ணியவெண்ணமெல்லாமிசைத்தேனினியென்றுகொள்வாய்
டண்ணியர் போற்றிடும் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (உ௦)

சீரார் சிலம்பியற் றேடக் கவிக்குஞ்சித் தாமணித்தார்
வாரார் தனமணி மேகலை நட்பந்தன் வாயகமா
மோரார் பொருளுரையேயிம்மின்சொன்னீ யெழுதுவையோ
போரார் பரசணி வீரைப்பூ மீசப் புராந்தகனே. (உக)

அக்கிற் கணைவைத் தணுகுவர்க் காயு மவர்மயக்காஞ்
சிக்கிற்பட் டேனென்று சீறு தருளுவை சேயெனக்கே
கொக்கிற் சிறகு பறித்துத் தலைக்கணி கொண்டநின்றாள்
புக்கிற் றருந்திரு வீரைப்பூ மீசப் புராந்தகனே. (உஉ)

துங்க வுழைக்கரத் தோடுமை பாகமுந் தோன்றவந்தென்
பங்க மகற்றிடு நாளுள தோவென்று பார்த்தனனின்
னங்கழ லேயென் றலைக்கணி யாக்கி யடிமைகொள்வாய்
புங்கவ ரேத்திடும் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (உங)

பெண்ணைக்குமுதச்செவ் வாய்மடமான்றன் பிறங்குமெழிற்
கண்ணைங் கடலுங் கயலும் வரவை கருத்தினினீ
யெண்ணைங் கவைமொய்த் தலைதல்லின் பாய்தலெழுதவேத்
புண்ணைங் குறித்திடின் வீரைப்பூ மீசப் புராந்தகனே. [ன்

சாற்றேன் புகழுநிந் தேத்தேன் மலரடி சார்ந்தறியேன்
கோற்றேன் மொழியுமை பாகாவென் றேத்திக்கைகூப்புகிலே
னாற்றேன் புவித்தன் பிறழ்ந்தேனென் றுன்பறிந்தா தரிப்பா
ரேற்றே னெனவிடேல் வீரைப்பூ மீசப் புராந்தகனே. [ய்

விற்கொண் டடித்திடக் கால்கொண் டுதைத்திட வீறுடனே
கற்கொண் டெறிந்திடக் காத்தனை யஞ்சுங் கருத்தினன்றோ
சொற்கொண்டெனைத்தன் கழலடிக்காட்கொளிற்றாய்மையே
போற்கொன்றைசூடிய வீரைப்பூமீசப்புராந்தகனே. [ன்பேண்

காவை வரைந்த குழலெம்பொ னுடன் கனதனக்கைகம்
மாவை வரைவையம் பாவன்மைமென்மை வரைவதெங்ஙன்
கோவை வரைந்த கரத்தா உமையாங் கொடியிளிர்மென்
பூவை வரைந்திடும் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (உ௭)

நாற்றிசை யுந்தொழச் செய்யென் றிரப்பருன் னட்டினர்காண்
சேற்றினின் றேபுனை யின்றித் தியங்கலிற் றேயமைய
லேற்றினைந் துன்னடிப் பூப்புனை தாவென் றிரப்பகொன்றே
போற்றினின் றேத்தருள் வீரைப்பூ மீசப் புராந்தகனே. ()

சாலோக மாதிய தந்திடெ னின்குலைத் தாழ்கிலனின்
மேலோர்க ளோத்துநற் றுளென் றலைதர வேண்டலொன்றே
காலோ கருமலை யோவென்னக் காலன் கடுகுமுன்னீ
பூலோக மீதினில் விரைப்பூ மீசப் புராந்தகனே. (உகூ)

குன்றா லமைத்த தனத்தா ளிடைமென் கொடியனையை
மின்றா னெனும்படி யங்கொடி மெல்கி மிளிர்ந் தொளிர்ந்து
நின்றாடல் செய்வதை யெவ்வா றெழுதுவை நீனிலத்திற்
பொன்றாத சீர்த்திரு விரைப்பூ மீசப் புராந்தகனே. (௩0)

சாவேந்தி பெண்கெள் குதிக்கிலு மங்கள்குன் றுள்பணிந்து
நாவேந்தி யென்று முனைப்பாட வெற்குன் னலமருள்வாய்
காவேந்த னந்தனைன் மாலோடு மூன்று கணக்குறு ரேமார்
பூவேந்த ருந்தொழும் விரைப்பூ மீசப் புராந்தகனே. (௩க)

சுரர்க்கங் கமைந்த சுதையினுமின்சொலித் தோகையன்னாள்
சிரத்தின் வரைகழ லாதிய தீட்டினுந் தீட்டுவையோ
வரித்தெதன் பதத்தி னடையெழில் சொல்லெந்த வையகமும்
புரக்கும் புகழ்மல்கும் விரைப்பூ மீசப் புராந்தகனே. (௩உ)

வேதந் தனைத்தர வெண்ணியே யோம னெழுந்திடுமுன்
வேதந் தனைச்சொலி விண்ணோர்க ளோத்துமின் மென்கமலப்
பாதந் தனையென் றலையவன் காணப் பதித்துமெய்ப்
போதந் தனையருள் விரைப்பூ மீசப் புராந்தகனே. (௩௩)

மாசறும் வர்ணாபி இற்பலம் பாயு மலர்க்குமுதத்
தாசறு முல்லை மலருங் குவியுமின் னெழிலைத்
தேசுற மாமட்டற் றீட்டிடிற் றீட்டிடு தேவரொடு
பூசுரர் போற்றுந்தென் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (௧௪)

அல்லா டளகத் தவர்மோக மோடு மருந்தணமாங்
கல்லாட னச்சி யெழிற்கோவை யுன்னிக் கருத்தினுள்ளே
மல்லாட லன்றித் தெளிந்திலன் மாவினை மாற்றுவைவையம்
புல்லாடல் செய்சடை வீரைப்பூ மீசப் புராந்தகனே. (௧௫)

எய்யா தயங்கி பெழுதாதை நீபிங் கெழுதுமடற்
றெய்பாவிளமுலையாட்சென்றுன் னன்பினைச்சொல்லியவண்
மெய்பாக வன்புசெய் வானே னினக்கு விளம்புகின்றேன்
பொய்பாத மெய்த்தெய்வ வீரைப்பூ மீசப் புராந்தகனே. ()

உயங்கித் தொழவிட நீபுண் டமரரை யோம்பினையே
கயங்கிப் பிறவிக் கடலாழ மெற்றுன் கழற்புணையைத்
தயங்கத் தரினுனை யார்தடுப் பார்சுரர் தம்முருவாய்ப்
புயங்கத்தை மாற்றிய வீரைப்பூ மீசப் புராந்தகனே. (௧௭)

தீதார்ந் தருங்கிழி திட்டிடன் மாற்றெழிற் சேயிழையை
வாதார்ந்த நின்புகழ் நானே வழுங்கி வலிந்துறுத்திச்
சூதார்ந்த கொங்கைகட் டோயச்செய் கின்றனன் குளிதுவே
போதார்ந்த புன்னைநல் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (௧௮)

சீதமும் வெப்பமுஞ் சேருமுலைச்சிற் றிடையினர்தங்
கீதமும் பாதமும் வேண்டுமென் றீனமை கெடுவதென்றோ
வேதமும்போதமெய்ஞ்ஞானியுமேத்துந்தன்மென்கழல்வள்
பூதமும் போற்றுந்தென் வீரைப்பூ மீசப் புராந்தகனே. ()

என்மந்தி ரஞ்செய்தை யையாநின் னாமமிசைக்குமுன்னே
நன்மந் திரமுநின் னாமமே யாகத்தன் னாவிலுற்றெம்
மின்மந்தி ரத்த மளிக்குட் குழைந்தனள் விண்பொலிந்த
பொன்மந்தி ரத்தமர் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (சo)

விற்று னெனவின் வளைக்கினுங் கல்லை விளங்குமுயர்
முற்று முலைச்சியென் றுக்கினு மாயவம் மூர்க்கருடன்
பற்றுத தன்னருட் கேபற் றறவெனைப் பாலிப்பையோ
பொற்று மன்ரக்கழல் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (சக)

உண்ணா ளமுத முடுக்காள் துணிபணி யோம்புகிலாள்
கண்ணா ருறக்கமுங் காணாள் வளைகள் காத்தணியாள்
பண்ணா ரிசைபயி லாணின் வீணைவிற்கண் பார்த்திலையோ
புண்ணா வணைந்திரு வீரைப்பூ மீசப் புராந்தகனே. (சஉ)

பூவார்ந் திடுமென்னும் பொன்பூட் டிடுமென்னும்போகராம்
பூவார்ந் திடுங்கழி யல்குலி னார்க்குள் ளுருகுவனோ
பூவார்ந் திடுமுடி வானோர்கள் வாழ்த்தும் புயல்புனையும்
பூவார்ந் திடும்பொழில் வீரைப்பூ மீசப் புராந்தகனே. (சங)

அகல்வாய்த் தனக்குலி யாற்செய் கரிகரத் தானுமற்றுந்
இகல்வாய்க் கிடாவின்பமேன் மேலும்பொங்கிக் கிளைக்குமுன்
பகல்வாய்ந்த தப்புகழ் பற்புடைத் தாங்கவன் பாகடுவாய் [ேன்
புகல்வாய்ந்தா னென்னினும் விரைப்பூ மீசப் புராந்தகனே.

புன்மால்கொண் டிங்கு புலம்பிட வைத்தது போதுமையா
வென்மான் முருக்கித் தனதடி பாடி யிறைஞ்சுதற்கே
சொன்மால் பெறுத படிபொரு டந்து சுகமளிப்பாய்
பொன்மான் றொழுந்திரு விரைப்பூ மீசப் புராந்தகனே. ()

நான்மேவி நின்றென் னுயிர்போலுங் காத்திட நட்பொடுமே
தான்மேவி வேட்டைகொண் டாயந்த மானனுந் தையலை
றான்மே வியவுட லும்முயி ரும்மல ரும்மனமும் [மேம்
போன் மேவி வாழ்கநல் விரைப்பூ மீசப் புராந்தகனே. ()

உன்னகத் தேயுன்னி யெற்கிங்கு மோன முதவிலையேற்
பன்னகத் தாடுங் களவாண் டவனன்பிற் பற்றிநின்று
றென்னகத் தேயற் களவாண் டவனென் றியம்புவனே
பொன்னகச் சாபங்கொள் விரைப்பூ மீசப் புராந்தகனே ()

வையத் தொருதல வல்லாள மன்னன் மனைவியின்பான்
மையற் றடைந்தனை மாதா தனக்குறை வேன்மறையேன்
கையற் றவன்றனைக் காத்தருள் வாயிக் கடற்புவியிற்
பொய்யற்ற தெய்வத விரைப்பூ மீசப் புராந்தகனே.(சஅ)

இரவல ராக்கதி வேண்டி யிரப்பவர்க் கெப்பொருளுந்
தரவல னிங்கிவ னன்றியில் லென்றுனைத் தாழவெனக்
குரவல பந்தந்த வுன்னை மறந்துய்வ னோவுசிதப்
புரவல னேத்திடும் விரைப்பூ மீசப் புராந்தகனே. (சகூ)

அங்கம் பொடிபுனைந் தைந்தெழுத் தன்பி னறைந்தடியார்[ன்
புக்கம்பொடிக்குட்புரண்டயர்ந் தோய்ந்துன்றன்பொற்கழலி
பக்கம் பொடிப்புரோ மங்கொண்டுறவெற்குப்பாலிப்பையே
பொக்கம் பொடித்திடும் விரைப்பூ மீசப் புராந்தகனே. ( )

சேந்துறை நீக்கிப்பெண் வாய்மத னெய்வதைத்தீர்த்திவணற்
சாந்துறை வாசத்தென் னூலுரை பாட்டுரைசார்ந்திமெனுட்
போந்துறை நிற்குக்கைமாறென்றன்போதமதேபொருளைப்
பூந்துறை யார்திரு விரைப்பூ மீசப் புராந்தகனே. (ருக)

பூமீசர் பொற்கழல் வாழ்க.

திருவிரைப் புராந்தகமாலை

முற்றிற்று.

---



உ

குமரன்றுணை.

# முகவுரை.

---

"பிள்ளைத்தமிழ்" என்பது, பாட்டுடைத் தலைவரைப் பிள்ளைத்தன்மையாக் கொண்டு பாடுவது.

அஃது:-ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத் தமிழென விருவகைத்து.

ஆண்பாலாமிடத்து:—பாட்டுடைத் தலைவனை இரண்டு ஐந்து ஆறு எட்டு ஒன்பது பதினொன்று பன்னிரண்டு பதினெட்டு இருபத்தினான்கு முப்பத்தாறென்னு மாதங்களையுடைய பத்துப் பருவங்களாக வகுத்து உரிய தெய்வங்களாற் காப்புப்படுத்தலும், செவ்விய சீர் என்னுஞ் சொற்பழக்கத்தோ டொருகான் மடக்கி யொருகானீட்டி யிருகையூன்றித் தலை நிமிர்த்தாடலும், தால் என்னும் நாவை யொருவகையா யசைத்துப் பாடலும், பாணி யென்னு மிருகைகளையு மொருங்கு சேர்த்துக் கொட்டலும், முத்தம் நுகர்தலும், வருதல் விரும்பலும், அம்புலியழைத்தலும், சிற்றில் சிதைத்தலும், சிறுபறை முழக்கலும், சிறுதேருருட்டலுமாகிய பத்துச் செயல்களு முறையே கொள்ளுதலும், பெண்பாலாமிடத்து, பாட்டுடைத் தலைவியை மூன்று ஐந்து ஏழு ஒன்பது பதினொன்று பதின்மூன்று பதினைந்து பதினேழு பத்தொன்பது இருபத்தொன்றென்னு மாதங்களையுடைய பத்துப் பருவங்களாக வகுத்து, சிற்றின்

முதலாக் கடைப்பட்ட செயல்கண்மூன்று மொழித்துநின்ற வெழுவகைச் செயல்களோடும், கழங்காடல் அம்மனையாடல் ஊசலாடலென்னுஞ் செயல்கண்மூன்றுங் கூட்டிமுறையே கொள்ளுதலுமாகக் கொண்டு, யாப்புநிலங்கள் தம்முளொப்பக்கொள்ளின் ஒற்றித்தும் இரட்டிக்கின் இசைபிரித்தும், தலைவராது அருட் பிரதாபங்கள், தற்குறிப்பு, கற்பனையுள்ளாவிளங்கவும், பருவவடிவச் சிங்காரங்கள் வெளியாவிளங்கவும், அம்புலியின் சந்துட் சாமபேததான தண்டமென்னுஞ் சதுர்வித உபாயங்கள் விளங்கவும் பாடுவது.

ஆண்பாலில், இரண்டு மூன்று என்ற வருடப் பருவங்களை, ஐந்து ஏழு என்று ஒப்பவரக்கொள்ளுதலும், பெண்பாலில், மூன்று ஐந்து என்ற மாதப்பருவங்களை, வருடமென்று ஒப்பவரக்கொள்ளுதலும், கழங்கென்றதை மாற்றி நீராடன் முதலிய இயைந்த வேறு செய்கையொன்றைக் கொள்ளுதலும், கடைப்பட்ட மூன்று பருவங்களையுஞ் செயல்களையு மொழித்துநின்ற எழுவகைப் பருவங்களுஞ் செயல்களுமாகக் கொள்ளுதலும், பருவங்கள் செயல்கண் மயங்கின் ஒப்பச்செய்தலு முடன்பாடாம்.

இப்பெண்பாற் பிள்ளைக்கவி யாப்பு நிலங்கள் இசைபிரித் தொற்றித்து மிரட்டித்துந் தம்முள் ஒப்ப ஒற்றித்தும், பத்துப் பருவஞ் செயல்களைக் கொண்டும், கழங்கென்பதை மாற்றி நீராடலென்னுஞ் செய்கையைப் பெற்றும், பருவஞ்செயல்கள் ஒப்ப மயங்கியும், அம்புலியிற் சதுர்வித உபாயம் விளங்குற்றும் நிரம்பியவாறு கண்டுகொள்க.

சுபம்.

---

உ

குமரன்றுணை.

# திருவீரவனல்லூர் மரகதவல்லியம்மை பிள்ளைத்தமிழ்.

---

## பாயிரம்.

### விநாயகக்கடவுள்.

அமுதந் தருபிறை மதியும் பனிநிறை யறுகும் புனை
தரு முடிமேனீ, ளகிலம் புகழுமெ லொளிமிஞ் சிடுமணி
யவிழுங் கதிர்மகு டமுடிமேற, யணிபுண் டரமண மணமசிங்
தூரமுட னனலங் கனுழுந்து நுதருனு, மலேமண் டிடுகுடன்
மடைகொண் டொழுகவி னருள்பொங் கியவிழ் களுமே
ரெண்ண,சிமயங் களுமலே வுறநின் றுறுமரு டெளியுந் தனதடி-
யவர்பாவஞ், சிதறுண் டிடமிகு பவவன் பிணிமயல் சிதை
கொண் டிடவசை வளியோடு, திகழூங் குழையணி முறவண்
செவியு மோர் சிதகிம் புரியிழை யொருகோடுந், திரைகொண்
டிடுமெழின் மதனன் சிலேயதா திருகும் புழையொடு பணி
கார, நமனன் பணையெணி வரினங் கவனுயிர் நலியும் படி
தலே யிடுபாச, நகைநுங் கியவம ணரெனுங் கரிகளே நசியங்
குசகல சரிதான, நகமுன் பொருகதை வரைகொம் பிவை
யொளி நருமைங் கரமொடு புரிநூலு, நறைசிங் கிடுமலர்

மணியின் றொடைபல நறுதுங் கிரிகிக ரிருதோளுங், மிமயங்
கெழுகுட வயிறுந் திசைமுக னிருமன் கையரிடம் வலமார,
விசைகிண் கிணியணி கமலம் புரைசர ணிணையுந் தெரிதர
மகிழ்வோடு, மிலகுந் தூருமிசை பெழுகன் கணபதி யியறுன்
றியவழ கினைநாளுந், மெழிலம் பரைமர கதமென் கொடிதமி
ழிலகும் படியுளி னினைவேனே. (க)

வேறு.

சீர்கொண்ட மணிநகையு மிலகிதழு மின்கிளிக டேற
ரிய மென்குதலையுந், தெள்ளித் தெளித்தலை கொழிக்குந்
தடங்கடல் சிறந்தகரு ணைக்கண்களுடம்-, பார்கொண்ட கரு
வோடு மாறுஞ்ச சீர்பட் பைந்தளிர்த் தருமூக்கியும், பாத
பங் கயமுமினிர் வீமைரமர கதவல்லி பைந்தமிழ் சிறந்தோங்
குமே-, தார்கொண்ட தங்கைதழுவி வெண்பிறை யெடுத்தொ
னிரு தண்கொம் பிணைத்தமவர்தாங், தனிமார்பி லணிமேன
வொண்கோ டொடுந்தந்து சாலுவம மொவ்வாமலே-, கார்
கொண்ட விடவரவ முன்புரிட் டுவாதல் கண்டுநகை யாடி
யிடமார், கைத்துடி முழக்கிவிள யாடுமெவன் பிள்ளைக்க
ணேசப்பி ரான்கழறவே. (உ.)

பயன்.

மங்கலமார் திருவீரைப் பூமீசன் பான்
மருவுமர கதவல்லித் தமிழை யன்பு

தங்குமுளத் தொடுகேட்போர் படிப்போ ரேடு
தனிலெழுது வோர்விரிப்போர் தரணி மீதிற்
றுங்கமிக வவள்கருணை சுரந்து நாளுந்
துணைபுரியப் பிணியகன்று பகையை வென்று
பங்கமிலா நவநிதியம் படைத்துப் புத்ர
பாக்கியம்பெற் றிறுதியரன் பதிசேர் வாரே. (௫.)

## அவையடக்கம்.

பிள்ளைத் தமிழே பெரியோர் பெரிதென்ப பேதைமையேன்
வெள்ளைச் சிறுவர் சொலற்கெளிதென் றுன்னி விள்ளலெழு
பள்ளக் கடலைக் கடந்திட வக்கணப் பாற்புழுவொன்
றுள்ளிச் செலலொக்கு மென்றெனக் கேநகை யுற்றதுவே.

நிலையா தவற்றைப் பொருளாக் கொள்ளாது நெடும்புகழ்ச்சி
புலையாத வீரை யுறைந்தாயிர் யானையு முந்தியிற்கொண்
டலையாது காக்கு மரகத வல்லிசொல் லாதலினாற்
கலையாவு மோர்ந்த பெரியோ ரிதிற்குறை காண்பிலரே. (௬)

பாயிர முற்றிற்று.

---

நூல்.

# காப்புப் பருவம்.

---

## திருமால்.

திருவார் கஞ்சத் திற்குவலை திகழ மலர்ந்தாங் கிணைவி ழியுஞ், செங்கேழ்க் குமுதத் திடைத்தரளஞ் செறிந்த தெ ணைப்புன் னகையிதழுந், திரண்ட முகிலின் வான்றனுச் சேர் ந்த தென்னக் கவுத்துவமார், தெரியல் புரளு மணிமார்புஞ் சேயோன் றனக்கிங் கிருபொருளுந், கருமா மருவும் பாகமு ம்வெண் சங்குசக்க ரக்கரமுஞ், சவியிற் பிறங்கத் துளவமு ணந் தழைக்கக் கலுழன் றனில்வருவாய், தடத்தின் முதலை வாய்ப்பட்டுத் தவிக்குங் கரியைக் காத்தமதன், றனக்கும் பிரமன் றனக்குமுயர் தந்தை யாகுந் திருமாலே, யருவா யுருவா யருவுருவா யாண்பெண் ணலியா யவையிலவா, யணி த்தாய்த் தொலையா வெவ்விடமு மளவா நிறைவா யோரி டமு, மல்லா தவனா யறம்பொருளின் பருளார் வீடு மளிப்ப வனா, யமருந் தகைப்பூ மீசன்பா லமர்ந்தங் கவன்செய் செ யற்கெல்லாங், குருவாய் மூலக் கொழுந்தாகிக் குலத்தோ டனைத்தன் றொழும்புகொள்ளுங், குமாரற் கெனக்கம் புவிக் கிளையாய்க் கூடவருமுன் றங்கையுமாய்க், குழகா முளைத்த விறைவியைப்பொற் குவட்டுக் குழவி யெனும்பரையைக், கோதில்விரை மரகதப்பைங் கொடியா முமையைப் புரந்தி டுவே. (க)

சிவபிரான்.

வேறு.

அரிப்பிசை யரிதாபி லரியய னமரர்க ளசுரர்க ளஞ்ச
லவ, யலைகட லூறும்வட வையெரிக ராவுமிழ் விடமதயின்
றவ, னருமுனி வரர்விடு முழைமழு வரவிப மெழிலொடு
கொண்டவ, னவுணர்கள் விடுகரி பசுபணி யவிதர விறலொடு
வென்றவன், பரிவினொ டடியர்கல் லெறியுமிழ் பணிமல செ
னவுண் மகிழ்ந்தவன், பகைகொடு மலருரு விலிதரப் பட
ரெரி யுமிழ்விழி விண்டவன், பாவிய புவிமகள் பரவிடப் பலர்
தொழ வவள்பெயர் கொண்டவன், பனிமதி நதியணி பரணி
வன் பதமல ரிணையைபி றைஞ்சுவாம், வரிசிலை மதனனை
முனிகனை வகையற நிலைமையில் வென்றவள், வளைகட லசு
ரனை முடுகயின் மயிலவ னையுமுக வம்பலா, மகனையு முலகு
யிர் புபூவது மகிழ்வுசெய் யருளொடு தந்தவள், மலைதரு
மகளெனு மமலையை மறைமுடி வினிலுறை மங்கையைத்,
திரிபுரை பகவதி கவுரியைச் சிவைபரை யுமையையெ னெ
ஞ்சமே, திகழ்வளை குவளைமை விழியளைச் சிறுநகை யளை
யவலங்களைத், தெறுதவ வனமதி லுறையுமோர் கிளியெ
ழின் மரகத மென்கொடித், திருவமிழ் தெனுமொழி மழலை
யைத் திரமுட னின்று பரப்பவே. (உ)

கன்னி விநாயகர்.

வேறு.

ஆரு தாரங் களிமரு மறுவர் களிற்முன் றலைவனு
மற், றவரைக் காப்பா னொனவாதியாதா ரக்கி னமர்பவனு,

மண்ட மனைத்துஞ் சிற்றணுவா யாட்டும் பூத கணாதிபனு,
மகில புவன பூதமெலா மாகும் பெரிய புந்தியனு-, நீருரான
ன்மெய் யியலொழித்து நீர்சூ ழுலகர் வெண்மையென,
விளக்கக் கருமை புறங்காட்டு நீர்போற் பசிய மேனியனு,
நிகரோ தனையல் லாதெவரு நேரும் வதனம் போற்றனது,
நிகரில் வதனங் கொளினிலையா ரெனக்கொள் கயமா முகமு
ளானு-, மேறார் திருதன் ருதைபுர மெரிப்பச் செல்வி னிரத
ந்தச், சிறந்தன் னம்மான் சுதைகடையி னோர்மத் தூலய
விக்கினமு, மியற்றி யருள்செய் தலுங்காட்டு மியல்பார்
விக்கி னேசரனு, மென்ன விலகுந் திருவீரை யெழிலார்
கன்னிக் கணபதியே-, வேறு நிகரொன் றில்லாத விமலை
மரையை யம்பிகையை, வேதச் சுவடி தாதைகரம் விரைவிற்
பறித்துப் பெரும்புனலார், வீரை யதனி வீசவுள மிகவே
மகிழ்ந்த வொருதாயை விரியு மலர்த்தாண் மரகதமெய் விள
ங்கு முமையைப் புரப்பாயே. (௯)

முருகக்கடவுள்.

வேறு.

தான குலவரைக ளேசி றியகனிக ளாக வடிவிரல்க
ளாருயிர்க் கோட்டிடுற், றேழு முலகமென மேவு தலமளவு
மீர விரைவினுட னீருறத் தோட்டியே, தாடி யிணைக
ளொடு நீடு தலைமுடியு ளாய குருதிநிகர் பூவசைத் தாட்டியே,
சாணை பொருதுநதி வேலி னலகுகொடு தாழு மொலியலசி

மாறிடத் தாக்கியே-, வானு மதிரவுடு மீனு முதிரமணு முடி
யிருணிறைந்த வூழியிற் காற்றென, வாயு வெழுவளையு நேமி
வரைமுகடு பேர விருசிறைக ளீடுறக் கோட்டியே, வான
மிசைவெருவை யாளி கொடுபகைகண் மாள விகலிமுடி
வார்குரற் காட்டுமோர், வார ணமுமொளிரு வேலு மயிலு
மென வோது மவர்கள்கலி கூறவற் பூட்டுவான்-, கான
மகளிர்குழு வோடு பகலியுற வாடு மவர்களொடு கூடுமெய்க்
கூத்தினன், காத லுடையவர்மு னடி மனைவியர்க ளோடு
வரமருள மேவுமெய்க் காட்சியான், காவ லிவனெனவு ணடு
மவர்முனுற வாவ லிரைடயனைம தாருயிர்க் கேற்றவன்,
காவ வடிவமக லாத முருகனென வாழு மொருவனையெ
நாளுமுட் போற்றுதற்-, சான விகதியுற வான மகிழ்வுறநி
சாசருளமிடிய வாரியைத் தூர்த்திடச், சாடு திறலயிலு
மாகி யுடனுமுயர் சானு நிலையுயிரு மானமெய்க் கூற்றின,
டான வருமொடுறு மான தனையுகவி மோன வறிவருளு
ஞானநற் கோப்பினள், சாரு மகிழ்மொழி விரை மரகதாபி
ஞன பரையெனுமோர் தாயினைக் காக்கவே. (௪)

பிரமதேவன்.

வேறு.

வண்டே மண்டி விண்டே யாதி மகிழ்திசை யொடுகமழுந்
வண்டே கிண்டி புண்டே பூது மலரவ ளையலுயர்மான், மை
ந்தா யண்டர் தொண்டால் வாழ மறைதரு திசைமுகம,

மைந்தா னெண்டா ரெண்டோள் வேதன் மலர்தலை யுலக மெலாஞ்-, செண்டே வண்டே தண்டே யான திருமுலை விழிதொடைபேச், செண்டே ரென்பார் துண்டா மாறேர் சிறுகுறி யுலகுயிரார், சிந்தே யென்றோர் கொண்டே மேவு திகழ்கலை யொடுபுரிக, சிந்தே நின்றே யுண்டா மாறு திரு வுள னடிபணிவாம்-, பண்டே னென்ற நின்றே பாடு பவ ருளி னுவறைதருமோர், பண்டோன் பங்கே கொண்டார் வீ ரைப் பதிமரகதவடிவைப், பஞ்சே தஞ்ச மென்றே நாளும் பதுமல ருமையினைவேட், பஞ்சே வஞ்சிநஞ்சா யேகும் படி வள ரமலையைநற்-, கண்டார் தொண்டை மஞ்சா ரோதிக் கனியித ழொளிர்பரையைக், கண்டார் தொண்டு முன்பே யாகக் கதழ்வொடு பெறுகதியைக், கண்பா ரென்றே யன்பா லோதென் கருவகல் வுறவருளிக், கண்பா ரின்பா னின்றோர் காவல் கனிவொடு புரிதரவே. (௫)

தேவேந்திரன்.

வேறு.

முப்பத்தி ரண்டறமு மிருநாழி நெற்கொண்டு முற்று வித் தவளன்பினன், முடிவிடென வருகம்பை நதிவிலக மதி முடியன் மொய்ம்புகுழையச்செய்தவள், முடியிலகு நான் மரபின் முப்பத்து மூவர்தொழ முண்டகன் சிறைதவிர்த்து, முந்நீரி னினதுசசி மங்கலமி லங்கவே மூட்டயில னைத்தந் தவ-, னொப்பற்ற நின்புதல்வி தெய்வயானைக்குரிய வோர்

மாமி யாய்நின் றவ, ளுலகஞ் சுமக்கின்ற வுரகமதை யாழி
யா யொளிரவிர லிற்கொண்டவ, ளோதரிய செந்நெல்வளை
வீரைநகர் மன்னின்மொழி யுற்றமர கதவல்லியா, யுள்ளும
வர் பாவமொடு கள்ளமற வருள்கின்ற வுமையம்மை யைக்
காக்கவே-, வெப்புற்ற வெங்கனல் சொலிக்கின்ற விழிநாலு
வெண்டந்த முகநாலுளைக, வெள்ளைவா ரணமுதிதி கொள்ள
வே தரகின்ற வெண்சங்கு மொண்பதுமமும், வீயாத மணி
யுமுயர் கற்பகா தித்தருவு மிளிருமமு தக்கபிலையும், வித்த
கை ருங்கொண்டு வேந்தனென வேநின்ற விண்ணமரர் தொ
ழவாழுமோர்-, தப்பற்ற வயிராணி முலைமுகடு தோய்ந்தவா
தாணிசிறை தண்டித்தவா, தானவரை வென்றவா ததீசி
முது கந்தண்டு தன்படை யெனக்கொண்டவா, சதவேள்வி
யாபுனித மேகவா கனவிடி தயங்குகொடி யாயுங்கவா, தனி
வச்சி ரப்படைய தாவுமச் சைச்சிரவ தனியாயி ரக்கண்
ணனை. (௯)

இலக்குமி.

வேறு.

காரே மானுங் காரா மேயக் கயலே மடிமோதக், கனை
த்தே கன்றை நினைத்தே யூறிக் கடிதே சொரிபாலைக், கண்
டா யுண்டு மண்டு கங்கள் கரைத்தே தாலாட்டச், கண்ணுறைய்
திரு மன்னைப் பார்ப்பார் கமலா லயமதிலே, காலே யோடித்
தலையே கவிழுங் கதிராற் சென்றாரி, கமமாச் சூல்கொண்
டளிக்கு மணியைக் கண்டே யனைப்பேடு, களித்தே சிறகா

லணைக்குஞ் செந்நெற் காடே வளைகின்ற, கவிஞர் வீரை நக
ரே தெற்காங் கயிலைப் பதியென்றே-,யோரா ரேறே யேறுந்
தேனூ·றிதழித் தொடையரவா, ரிந்தா றறுகூ மத்தமி லங்
கோ ரேமச் சடையமல, னிடமா யெழிலோ டுறையும் பரை
யா யிமயச் சிலைமகளா, மைந்தா யாமந் தரியம் பிகையா
யிருக்குறை சுந்தரியா, யிளையே பொருவு நின்று யகனுக்
கிசைவுள தங்கையுமா, யிழைகடன் மேனி மண்ணிட விரு
கை யேந்தத் தருமவளா, யிசையே பாடி யடியவ ரேத்து
மெழிலா ருளுடைய, விழையே ரிடைநம் மரகத வடிவை
யென்றும் புரந்திடவே-,தாரா விண்ணோ டோரடி நீடுந் தா
மரை விழியானைத், தன்பா லாகக் கொண்டவ ளாம்பாற்
றன்கடல் வந்தவளாந், தனைநிகர் வாத வூரனை மோக்கந் தந்
திட வுடன்வந்தான், றன்குல வரிம ருத்தனன் மாறன் றன்
றன மானவளாஞ், சம்புறை யரூர் நாவல னன்பு தான்கொ
ள வேதருமோர், தாவறு குண்டை யூர்க்கிழ வோன்செஞ்
சாலியு மானவளாந், தனபதி நண்பு சங்கர னைகத் தான்
பொரு ளானவளாந், தருபொரு ளெல்லாந் தந்திட வல்ல
தரணியு மானவளாஞ்-, சீரா ருலகங் காத்திடு மன்னர் செங்
கோ லானவளாஞ், சிறியேன் கவிக ளேகிட வென்பாற் செ
றிவுறு செல்வியுமாந், திருவாம் பொறியாங் கமலையு மாஞ்சீ
தேவியு ளினியுமாஞ், செங்கேழ் முண்ட காசனை யென்றே
தெளிவோர் நவிறருமோர், செழிப்புறு பொன்னுங் கோகன
கையுமிந் திரையும் பதுமையுமாந், திகழுறு பின்னை யாம்

பாற் கவியார் திருவா ரிலையளுமாஞ், சிந்தனை யோடே வந்தனை புரியுந் திறத்தார் களிப்புறவே, சிலம்பொலி காட்டு மிலக்குமி யுனையே தினமும் பணிவேனே. (எ)

சரசுவதி.

வேறு.

ஊசியெழு தாமரைமயி னெண்சவடி யோர்கர முருச்செய் செப மணியோர்கர, முற்றொளிரும் வயிரமணி தரளமணி வடமுருளு மோர்மார்பும் வெண்கலையும்வண், டுறைகமல மெனவிழிகண் முகமுமதி நுதலுமழ குறவரிண மலராசன, முறைந்துறன் மணிமாழை மாடகசி றைத்திலகு முயரியாழ்க் கோல்கொண்டுமே-, வாசம்வன மல்லிகையின் னுருசிபான் மயிலினிசை வந்தகுர லும்முல்லைதேன், மழவிடப துத்தமும் வார்கடம் பொடுகிழான் மதமேட கைக்கிளையுமால், வஞ்சியவி கொக்குழையு மரையாஞ்சி குயிலிளியும் வண்பொரு விரைகன்னிபாய், வாசிதரு விளரியும் புன்னைமா துளபியானை மன்னுதா ரமுமாகவே-, தேசபெறு மிடறுகா வண்ணமுடி நதமெனஞ்சு சிர்மூக் கிசைத்துமுறையே, செறி துருவ மட்டியமு ரூபகஞ் சம்பைதிரி புடைதாள மடவேகமுந், திகழுபயி ரவியாதி யெண்ணான் கிராகமுஞ் சிதருது காலமுடனே, நேர்ந்துமந் தாமத்தி மந்தார மொடுசெரிக் திலகுகுரு துரிதமளவாற்-, றாசறவி சைக்குமுயர் வெண்சலசி காமகட் டேயவள் வெண்மேனியள், சொல்லிமெனுடு பொ

ருளுநன் னுவினின் றருள்செயுந் தொல்வாணி யைப்பணிகு
வாஞ், சூழுமுகில் சோலைவளை வீரையர னிடனென்று சுக
மொழி கயற்கண்ணி யைத், தொல்லைமறை விள்ளுமர கதவ
ல்லி மெல்லியைத் துணைநின்று காக்கவென்றே. (அ)

## வீரவணங்கை.

மிடியனெனு மொருவன்மேன் முனைகொண்டு தண்ட-
மலை மேன்மர முறித்து முளையாம், வில்லாழி சுழல்சங் கலை
க்கர மெடுத்துகரி வெம்பரிப டைத்ததிர்த்தே, விறல்கொ
ண்டு திசையளிக ளுண்டுசை வலவளக மிசைமல ரணிந்து
கரளம், விளங்குபுற் புதமுலையி லாரம் புனைந்துமுகம் விழி
மறைக ளருளொழுகவே-, கிஷ்-துலக மக்கள்களி கொள்ளவிளை
தாவயற் காலொடு நடந்துலாவுங், கங்கைநிகர் பொருனைம
கள் வளைகின்ற வீரைநகர் காக்கற் கமர்ந்திலகுமேமார், கல்வி
ளையு முயர்தானை யாகவே கொண்டினருள் கசியுமர கதவ
ல்லியைக், கருணைமிகு மமலையம் பிகையுமையை யனுதி
னங் கனிவினுட னேகாக்கவே-, படியதிர விண்ணுடுப டமொ
ன்ன வடவைபுள் பதைப்பநடை யுறுகூளிகள், படைசூழ
வில்லம்பு லக்கைதடி யலசெஃகு பலகேடி சூலமொடுகைப்,
பங்கயங் கொண்டரியின் மிசைமேவி வடுகர்தள பதியாக
முரசு கொம்பு, பம்பைபல வதிரவே சென்றுமகி டன்சிரசு
பதம்வைத்து மின்காத்தசீர்த்-, தொடியரவ வெண்டோளி
சமரிசண் டிகையமரி சூலிகா ரணிதேவிமா, சூரியபயி ரவிக

வரி சாமுண்டி கங்காளி துட்டதா ருக்கிநாசி, சுடுகண்ணி நீலியா மலைபதுமை மாதங்கி துரிசற்ற பத்திரிகையை, சுந்தரிகுமரிமங்கை யந்தரிவீ ரவநங்கை துணையடிக ளைப் பேணுவாம். (௯)

சத்தமாதர்.

வேறு.

அக்க ணேர்விடை யூரு மத்திபி னகள்பு லைந்தம கேசரி, யந்த மாமயி லேறி வெற்றிகொ ளெழில்கொ ளுங்கவு மாரீமீ, எங்கை யாழியொ டேயதிர்த் தொர்பு லாசி லுந்துகராயணி, யஞ்ச வாளிபி லைகலப்பை யொ டமருகின்றவ ராகிநீத், தங்கு வாயுறு பேபி னைக்கொடு தனிந டந்திடு சாளிகைச், சந்த மாமறை யோட னத்துயர் தகவி னுந்தபி ராமிவெண், டந்தி வாகன வேதி வச்சிர சதுரி சுந்தரி சீர்புகழ், தங்கு மேழ்மா தர் பொற்கழ றனைப்பு னன்பொடு பேணுவாம், மங்கு லார்தரு வானை முட்டியெல் வழிம ருண்டிட வேயெழின், மண்டு சேதன வேறு நித்தமும் வரர்களஞ்சிய வாவினில், வந்து வார்கழ லாத ரத்தொடு மகிழ்வந்தனை யேசெய, வம்பு மாலைக ளோட ழைத்தென வசையுமந்திர மேவருள், வங்க மேயென மேதி னிக்கடன் மடியுளைமந்தர்கள் வாழவே, வந்து வீரையி னுரைத்த மலைமடந்தையெ மாரியை, மஞ்சை நேர்தரு மோதி மைக்கணிமரக தந்திகழ் மேனியாள், மங்கை யாகிய ஞான சத்தியைமனமு வந்தினி துளவே. (௧௦)

## முப்பத்துமுக்கோடி தேவர்கள்.

### வேறு.

வடமணிக டொத்திட்டு மச்சாடு தோரணம் வருநர் தலை பட்டற்ற வத்தான சோதிசெய், மணிகளைவி ளக்கிட்டு விற்போது வாணிகர் மகளிர்மறு கிற்சிற்றில் வைத்தாடு வீரையின், வடிவமுறு மக்கட்கு வற்றாத பாவநோய் மடியவரு ளக்கத்தி மற்றொரு நேரிலா, மரகதமெ னப்பெற்ற மட்டேயு மாரருள் வடிவையுமை யைச்சத்தி யைக்காவ லாவரே, யொடிவறுசு வர்க்கத்தி லுற்றொரு மேலவ ருயர்சுரா நத்திற்கு ரித்தான மானிய, ருவரமனை ரக்கர்க்கு ளொட்டாரு மானவ ருரையறிஞர் நட்பாக்கு முட்பாச மானவர், முடியணிநு லச்சிக்க ணிட்டேறு பூவினர் முழு துமமு தத்தைப்பு சித்தேவி றைள்பவர், மொழிதபுமெ லற்பட்ட முப்பாமு லாவுவர் முறைசதுமின் முப்பத்து முக்கோடி தேவரே. (கக)

## சமயாசாரியர்கள்.

### வேறு.

புத்தமு தத்தி னினிப்பற மாறவி லக்கி நடத்தி பிசைக்குமி யாழிசை, கைதந்திட மைப்பு நலைப்பொரு வேய்தரு குழனீட்டிடும், பொத்தி விடுத்து வனிச்சுர நீடவி சைக்குயி லைச்சுவை யெட்டிய தாகவி, னித்திடு சொற்பயில் வுற்றிடு தேமொழி யமுதூட்டி, முத்தியெ வர்க்கு மணித்துறை வீளை

யி னுற்றெழுவிர் பச்சை மணிக்கொடி யாகியு, மிர்ப்பவ ருட்
கட லிற்றிரி மீனின யனநோக்கு, முத்தநி ரைத்தகை யொ
த்திடு வாணகை வித்துரு மத்தினை வைத்தென வாயித, ழுத்
தம மெய்ப்பகை யைக்கனி வாருள மொடுகொக்க-, பொய்த்
தமனத்தினர் சித்தம தோரவெ ரித்திடு மெற்பொரு பொ
ற்கொடி யாகவெ, ழுப்பிய ருட்டிற மெய்ப்புக ழீதெனு
நிலைநாட்டிப், பொற்பு வளர்த்தவர் கற்கல ஞாழியு கைத்திடு
மெய்த்தவ ருக்குக ராவது,கக்கிட வப்பினு ளுக்கிய பாலனை
புறமீட்டிச்-,சித்தி விளைத்தவ ரத்தனி யாவரு மொப்ப நரிக்
குல மெய்ப்பரி யாகந, டத்திடு தற்குழு வற்பரி வாகியு
ளிருமீளாட்டித், திக்கு விளக்கமு தச்சொலர் கீடளி மொய்
த்தநி நக்கந வொழுக்குச ரோருக, நற்பத முச்சிமு டித்தன
ஞலரு ளளம்மேவட்டீட. (௧௨)

காப்புப் பருவம் முற்றிற்று.

---

# செங்கீரைப் பருவம்.

---

ஏர்பூத்த பங்கயத் திருமுக மிலங்கவெ யிழுதுபுழு மோ
டிழைத்த,வேலமுழு மஞ்சட் டிமிர்த்திளவெ ரோட்டி யிணை
நாசி கண்காதுவன்-,பார்பத்த வுந்திதலை யூதிவெண் ணீற்றி
னொடு பார்ப்பொட்டு மிட்டிருதகிற், பலமணிக ளாற்சுட்டி
பொற்பட்ட மொளிர்கரண பளவட மார்போங்கவே-, கார்

பூத்த விழிகட்கு மைபிட்டு வளைகளொடு கலகலென வேளை
களிற், கங்கண மணிக்குகாற் றண்டைகள் புனைந்தழகு கா
ணுமிவ் வடிவமென்னெனச்-, சீர்பூத்த விரைநக ராமழகி மகி
ழ்வுறச் செங்கீரை யாடியருளே, திகழுமர கதவல்லி புகழு
மமு துறுசொல்லி செங்கீரை யாடியருளே. (௧)

தாமொருவர் கருவுறா துலகமுழு துங்கருவு தான்கொ
ண்டளிக்கின்றநர், தாயெனவெவ் வுலகமு மிறைஞ்சவிம
யத்தரணி தன்குழவி யாங்கருணை யு-, மானுருவ மச்சினிப
தாகவங் காட்டுமுன் மாதாவு மகளாகவு, மன்னுமுயர் கரு
ணையு மாறாது வளரவே மகிழ்வோடிவ் விரைநகரின்-, வான
வர்க டொழமேவு பூமீசர் வாமத்து மருவுற்று மித்தமிழி
னின், மகளாக வேகொண்ட மகிமைக் கிணங்கவே வாசமுட
னேயுறிடுங்-, தேனொழுகு குமுதமுறும் வாய்மலரு மெல்லி
யே செங்கீரை யாடியருளே, திகழுமர கதவல்லி புகழுமமு
துறுசொல்லி செங்கீரை யாடியருளே. (௨)

ஒருபுவன ரன்றிமற் றெப்புவனர் தம்மையு மொருத்
தியாய் நின்றருளுநீ, யொளிராழி யன்குழ லவன்றனைய
னஞ்சிலைவின் னுயர்வித்தி யாதாரியாய்-, தருமிவைக ளினி
மைகைத் திடவினிய மழலைமொழி - தருதரணி யின்குழவி
யாய்த், தனதுமலர் வாய்கொண்டு பொதியைதரு பொரு
னையந் தனிகாட்டி னேர்விரையின்-, மருவிலகு கொன்றை
யந் தார்புனைந் தேறெழுது மாலையணி துவசத்தொடு, மறை

யான பரிமேலி யும்பர்முர சங்கரைய மதயானை யிசைமுழ வே-, திருவருளி ஞானையிள நகைபுரியு மெல்லியே செங்கீரை யாடியருளே, திகழுமர கதவல்லி புகழுமமு தூறுசொல்லி செங்கீரை யாடியருளே. (௫)

நாலுவகை யுறுதோற்ற மெழுபிறவி யெண்பத்தி னான்கிலக்கப் பேதமு, நவியா தகட்டினிற் சுமவா தளித்துமந் நல்லுயிர்க ளுக்கன்னையா-, யேலுதல்பொய் யன்றென்ன வேயன்னை யுதரத் திருங்கரு வுதிக்காமலே, யெழுதரிய படிவமொடு புழுதியளை குழவியென வேவந்த பைங்கிள்ளையே-, பாலுமளி யுங்கண்டும் விலைகொண்ட வாயமுது படிமுழுதும் விலைகொண்டவோர்; பவளவா யின்சொலுத லிந்திரதனு விலைகொண்ட பங்கய முகச்செல்வியே-, சேலுலவு கழனிவளை வீரைநக ரிளமயிலி செங்கீரை யாடியருளே, திகழுமரகதவல்லி புகழுமமு தூறுசொல்லி செங்கீரை யாடியருளே. (௬)

வட்டவமு தத்தடம தாகவே நீற்றறையின் மகிழ்வுற்ற தொண்ட னுக்குள், மகிழ்வெனரி கோயிட்ட வசைதீர்ந்திடவுமந்த மன்னனுக் கேத முயலுங்-, தட்டருரை கன்டுமுட் டெனுமமண ராவிகள் சுருங்கவொரு கடுவாகவுஞ், சத்தசை வக்கழைய வமுதாகி டவுஞான சுதைநினது சேய்க்கூட்டியே-, திட்டமொடு நெற்றியிசை யுறுசோதி யைத்துணைகொள் சிறுவ பிருங்கி யுடலிற், செறிதசைகள் வாதி

னொடு வெள்ளியுந் தனதடிகள் சிந்திக்க வுஞ்செய்துதன்-, சிட்டர்தொழ விட்டமொடு திருவீரை வாழுமலை செங்கீரை யாடியருளே, திகழுமர கதவல்லி புகழுமமு துறுசொல்லி செங்கீரை யாடியருளே. (௫)

அருந்துணைவ னின்னொடு மும்முறைதரு தாடிட்டுமத் தனையும் வென்றிட்டனே, ரருண்மிக்க வலியுடைய னாகியு மப்புகழ்க ளகிலமெல் லாமோங்கநீ-, தருந்தல மதிற்பல தலங்கடனி லவனொடு சார்ந்துவல மாகுவதினுந், தவமது புரிந்துபெறு பேற்றினை விளக்கவே தகுதிபெறு பெரியோர்கடம்-, பெருந்தகைமை யாமெனுங் கருணைகாட் டுவள்போற் பிறங்குபதி பல்வாய்த்ததிற், பெருமைதரும் வீரைநக ராலயமுறைந்திலகு பெம்மான்ற னிடமேவியே-, திருந்துமுலகந்தழைஇ வாழுமிள மயிலியே செங்கீரை யாடியருளே, திகழுமர கதவல்லி புகழுமமு துறுசொல்லி செங்கீரை யாடியருளே. (௬)

மண்டலமும் விண்டலமு மற்றுமுள வெத்தலமு மருவிப் பொலிந்திணைந்து, வந்திரவி மண்டலமொ டுந்துன்று பொழின்மேவு வளவீரை யிற்கண்டுனே-, யண்டர்க டுதிப்பதுத் தொண்டர்கள் படிப்பது மன்பர்க ணினைந்தயர்வது, மாறியே நின்றுகா காவென்றி ரக்குமடி யார்க்கினருள் செயுமயிலியே-, வண்டலர் கிளைந்தவிரு டெண்டிறவ கிர்ந்துமதி வந்ததந வின்கட்டி காண, மண்டுபுகை யென்றபனி கொந்த

ளக மஞ்சடைய வானிரவி யின்கதிர்செயச்-, செண்டின்மிசை நின்றகிளி கொஞ்சமொழி யுங்குயிலி செங்கீரை யாடி-யருளே, திகழுமர கதவல்லி புகழுமழ துறுசொல்லி செங்கீரை யாடியருளே. (௭)

வேறு.

உலகுயிர் முழுமையு முறபய னெழுதிய வோலை யெனக்காதி, னுயர்மறை முடிவினி ரகசிய மோதிட வுற்றதெனச்செறிய, வுதித்தடைந் தடியவர்க் களவையை முடியே னுதுதிபி தென்றிரவி, யுறைந்தன னென்னநல் வீணையெழிலோவா தொளிர்மணி யுறுதோட்டு-, னலமொடு ஞான்றக் கதிரொளி செய்பவ னவின்றமை பொய்யன்று, நல்லருள் புரிவாள் வம்பினென் னுளநனி நசையொ டழைத்திடுமோர், நட்புறு மாலோ விதழுக மென்றிட நற்குழை களுமாட, நாசியின் பிறையாம் பணிமணி யடியினின் றாலுமுத்துகளாட-, மலைதரு சந்தம் வளர்கழு கென்னும் வளைவளை யாதுவளை, மணிபல் வுறையுட் கட்டொளி பலகதிர் வருணைக் காலாட, வலனுதி ரந்தரு மாமணி சூழ்வுற வயிர மணிநாப் பண், வைத்து வரைந்திடு பதக்கவொள் ளொளியிரு மாந்து பரந்தாட-, வலைபுன லாட்டிய சிறுதுளி கருமண லலர்தரு குழலான, வரியசை வலமுறு மாறிளி முத்தென வாகி யுருண்டாட, வலர்மழை சொரிபொழில் விரையி னிளமயி லாடுக செங்கீரை, யருளொழு கியமுக மரகத வடிவே யாடுக செங்கீரை. (௮)

இந்திர னயனரி வந்துதி னம்பணி யோரார் புகழ்மேனி, யேறுடை யரனுதை கொண்டழி யேமனே ழூந்து பணிந் தோதி, யின்புற வருள்செயு மிந்துளை பொழிலொ டிலங் கிடு மணிவீரை, யெனுநகர் வளருயர் மலைமக ளானபின் னிடையாங் கொம்பாடக், கந்தர நேர்குழல் வண்டல றோடிக விந்து பரந்தாடக், கருவிழி யஞ்சன நீல மணித்திரள் கான் றுக ரைந்தாடக், கந்த நறும்பொடி மேனி திளைந்துயர் ககனமொ டுந்தாவிக், கற்பக மாதி தருக்களை யூட்டிடு கான நிரைந்தாடச், சுந்தர நகையெனை யிகழ்வதெ னென்றொளி தூற்றுத லாங்கருணூற், சொற்பொரு ளறிஞரு ளிற்றெளி முத்து புலாக்குமுற் சூழ்ந்தாடத், தொந்தி யலைத்திரை யொத்து வடிந்து துவண்டு துவண்டாடத், துப்பு வடத் தொடு வித்தில மாலை தொடர்ந்து பிணைந்தாட, வந்தர மங் கையர் தொண்டு மகிழ்ந்திவ ளன்பொடு நின்றாட, வம்பர விஞ்சையர் வீணை விழற்றி யகமகளி கொண்டாட, வானமு தனமொழி வாரகட லருள்விழி யாடுக செங்கீரை, யருளொ மூ கியமுக மரகத வடிவே யாடுக செங்கீரை. (௧)

மணமிகு சூதமி ருந்தழல் கிஞ்சுகம் வண்டார் கொண் டாடி, வழிபடு மாரொலி கொண்டு திரிந்துமகிழ்ந்தே பண் பாட, மயிலது கார்முகில் கண்டிது நிக்கதையின் மஞ்சோ லென்றேறி, வளருமு னேர்குழல் கண்டொளி சைந்துரு ளிந் தே நின்றாட, விணையறு வாள்விழி வென்றன வென்றுவி

ரிந்தே வண்டோட, விறைவர்கை மானும ருண்டுமெ யங்ஙி
டைக்கே கண்கோண், வியலன மேரடி கண்டுள மஞ்ஞெயெ
ழுந்தே விண்டாவ, விடையின் நீளரி கண்டணை தங்கவி
சைந்தே நண்பாக-, வணிபல பூணிலெ னென்றகி லங்கள
றைந்தே நின்றோத, வழகியல் பேயென நின்றுபு கழ்ந்துறு
மன்போர் கொண்டாட, வருஞறு வீரவ னின்பணி யென்
றிட வன்பா லுண்டான, வணிநகர் வீரையி லின்பொட மர்
ந்தவ ணங்கே நண்பாவாங்-, திணைதிகழ் கோவைவ ரைந்
திடு மங்கலார் தென்பா னின்றருந், திருவணை மாலுயர் தங்
கையெ னுங்கொடி செங்கே ழொண்பூவார், திருவடி மே
வுச வந்தரி சுந்தரி செங்கோ செங்கீரை, சிறுதள வார்நகை
யந்தரி யம்பிகை செங்கோ செங்கீரை. (௧௦)

தருவொடு மழைகுழ றோள்பணை யிந்தெவி சைந்தேர்
கண்கூடத், தனமென வளருய ராரந கந்தரு தண்சே யெ
ன்றருந், தனியரு ணிறைபொரு நாநதி யிந்தவி டம்போ
லொன்றேனுந், தாணியி விலையரு னாயகி தங்கவு வந்தா
ளென்றேகு-, முருமறை யகமிஃ தாமென வந்தண ரன்பா
னின்றேதி, யறைதர நிறைவுறு வீரையி னந்தளி யின்பா
லன்போருட், டமுதக டுறசின் றாயுள ருந்திட வங்கே
யுண்டாரு, மடைவினி லுலகுயிர் வாழவு வந்தக சிந்தே
கொண்டாளா-, யிரவியை யிளமதி யேபகை வென்றது வெ
ன்றே கொண்டாட, விதபுல ரொடுகர மானன மென்றிடு

மென்போ துங்காழ்செய், தெழிலொடு மலர்தர வாணகை யென்றர விந்தாம் வெண்சோதி, யிலகிட வருளொடு வாழ மிளங்கொடி யென்பா னண்பூறுந்-, திருமர கதவடி வானசு வுந்தரி திண்பார் கொண்டாடுஞ், சிவையுமை பரைகலி யா ணிநி ரந்தரி சிந்தா ரொண்பாலாய்த், தெளிதமி ழமுதூறு தேமொழி யங்கிளி செங்கோ செங்கீரை, சிறுதள வார் நகை யந்தரி யம்பிகை செங்கோ செங்கீரை. (கக)

செங்கீரைப் பருவம் முற்றிற்று.

---

# 3. தாலப் பருவம்.

---

பாலும் பழமும் பசுந்தேனும் பாகின் மொழியார் பரிந் தூட்டப், பருகிக் கிள்ளை மதிபோலும் பளிங்கார் மாடச் சா ளரத்திற்-, காலுங் கதிர்வெண் ணிலவுண்டு களித்தங் குறுச கோரமதைக், கண்டா மினிய விசைபயிற்றக் காண்பான் கேட்போர் தலைமுகத்தர்-, போலு மண்ணுந் தகலாமற் பொருந்தும் பந்தி நிரைமருகார், பொருவில் விரை நகர்க்கா சாய்ப்புரக்கு மரக தாம்பிகையே-, சேலும் பிணையும் வென் றவிழித் திருவே தாலோ தாலேலோ, தேனார் கொன்றைச் சிவன்மருவுஞ் சிவையே தாலோ தாலேலோ. (க)

எங்கள் பொருளா மிவைகவரே லென்றே பொரல் போற் கடைசியர்கா, லெழின்மீ னல்வ னுகள்வல ரெங்கண்

முகம்வாய்ப் பகையென்றே-, பொங்குற் பலம்பங் கயங்கு
முதம் பொருந்தக் கதிரோ டறுத்தெறியப், பொருந்து
மள்ளர் வையாளிப் போத்தி னடியாற் றுவைத்துதறி-,
மங்கு றவழப் பொற்சிலைபோல் வளர்கூ டேற்றி நெற்றூ
ற்றி, வழங்கிப் போரிட் டளக்கேற்றும் வைய மகலாத் திரு
வீரைத்-, திங்க ணுதலார் மரகதப்பைந் திருவே தாலோ
தாலேலோ, தேனார் கொன்றைச் சிவன்மருவுஞ் சிவையே
தாலோ தாலேலோ. (௨)

கொம்பிற் கலுழன் குடம்பைகொடு குடிகொண் டுறை
யக் காரரவங், குடியா யடியிற் குழுவிநெடுங் குலவக் குளி
ரக் குயின்மருவித்-, தம்பிக் குழுவுக் கனியொழுகத் தடியே
ரிடையார் துவண்டாடத், துளிர்த்தே மலரும் புன்னைவ
னஞ் சூழுந் தொல்லைப் பொலிவுடைய-, வம்பிற் றுயிலு மரி
வாமத் தணங்கா ளாரும் வீரைநகர்க், கரசா யமர்ந்து புரந்
தருளு மழகார் மரக தாம்பிகையே-, செம்பொற் குழைக
விலகுசெவித் திருவே தாலோ தாலேலோ, தேனார் கொன்
றைச் சிவன்மருவுஞ் சிவையே தாலோ தாலேலோ. (௩)

அரியுங் கரியும் பகைதெரியா தான்கன் றடியின் மடிசு
வைக்க, வவச மொடுநற் பணிபுரிய 'வணிமா வாதிச் செய
லொழிந்து-, புரியஞ் சடையிற் புறவடையப் புற்றே வளர்
தம் முடல்பொதியப், பொறிகள் புலனிற் பொருந்தாமற்
போத நடுநா டியிற்செலுத்தித்-, தருவும் புரிந்த தெனமுனி

வர் தவஞ்செய் திலகுந் தவவனமாந், தலத்தி லிலகுந் திரு விரை தழைத்த மரக தாம்பிகையே-, திரியுங் கயிலை யிணை த்தவிழித் திருவே தாலோ தாலேலோ, தேனார் கொன்றைச் சிவன்மருவுஞ் சிவையே தாலோ தாலேலோ. (ச)

கந்தங் கமழுங் குழற்கெதிரால் காரார் கறையைக் கந் தரத்தாங், கண்கட் கெதிரா முறையைப்பிடக் கரத்து நுத லுக் கெதிர் மதியைச்-, சந்தந் திகழுச் சடையகத்துந் தரித் தான் கேள்வ னெனவதனைச், சகியாள் போலுங் கள்வறி யாத் தனைநே ரெழிலார் குழவியதாய்-, வந்திங் கமுதம் வா யொழுக மழலை மொழிந்து வளர்தலென, வளமை பெருக விரைநகர் வசிக்கு மரக தாம்பிகையே-, சிந்தங் கருணை யொழுகுவிழித் திருவே தாலோ தாலேலோ, தேனார் கொ ன்றைச் சிவன்மருவுஞ் சிவையே தாலோ தாலேலோ. (ரு)

புலித்தோ லுடுத்துப் போதகத்தின் புறணி போர்த்து முடைவிசும், பொருத்துங் கலையா முழுவங்கம் புயத்திற் றுங்கித் தலையோட்டைப்-, பலிக்கே கொண்டு திரிகேள்வன் பழிதீர்ப் பாள்போன் றொளிர்கனகப், பட்டா ரிடையு மணி கள்பல பதித்த கச்சும் மேகலையுஞ்-, சொலித்தே யொளி ரச்சுகமகிழ்சொற் றுலங்க வளருங் குழவியெனத், தோ ன்றி விரை நகர்வளருந் தவர்வாய் மரக தாம்பிகையே-, சிலைக்கோன் மகளே சிலைநுதலார் திருவே தாலோ தாலே

லோ, தேனூர் கொன்றைச் சிவன்மருவுஞ் சிவையே தாலோ தாலேலோ. (௬)

அண்டத் துயிர்க ளத்தனையு மண்டக் கொண்ட வகட்டாளா, யாயா தவர்க்கு மாய்ந்தவர்க்கு மாயா யமர்ந்த வருட்கடலே-, தண்டத் தென்கோ னேந்தரிவே தண்டக் குழவி யாங்கிளியே, தரைத்தென் விரை யினில்வாண்மா தரைத்தன் றிருண்டு கொளுமயிலே-, வண்டுற் றிரையுங் குழற்குயிலே வண்டெற் றொலிக்குங் கரப்புறவே,மைக்கண் ணுழைய்யே மரகதமா மைக்கோன் மரக தாம்பிகையே-, தெண்டுற்றிடுகைக் காந்தண்மலர்த் திருவே தாலோ தாலேலோ, தேனூர் கொன்றைச் சிவன்மருவுஞ் சிவையே தாலோ தாலேலோ. (௭)

வேறு.

அனமென வயனரன் முடியறி யாமையி னவனியில் வரநாணி, யவிர்சடை மதிதவழ் தவிநெறிநிர் தவினிவ னறிகுவ னினுமென்றுண்-, னினைவொடு பலவடி வொடுதிரிகுதலென நிறமித மணமோடு, நிலவொடு தழுவிய சினையொடு மொளியொடு ஞிமிறுறு சோதிகளார்-, நனைமழை சொரிபொழில் விரைநன் னகருறை நதிபதி போலருளார், நகமக ளெனுமெழி லிளநகை மரகத நாயகி யாய்ப்பொதுவிற்-, றனிநட முதல்வ னிடமுறை தற்பரை தாலோ தாலேலோ, தவமுனி வரர்தொழ வாழ்ந்திடு சாம்பவி தாலோ தாலேலோ. (௮)

உடுவென வொளிர்வது சிதறிய நிலவென வுரைசெய வொளிர்மதியு, முடைபட மோதியுட் பாய்ந்தெழில் வாளைகளுலவ வெணிக்குடைவா-, ரடர்பவ முழுவதுங் கழிதர வெளவியு மதைத்தன் றிடையாடா, தவ்வழி கடப்பவர்க் காற்றியு மின்புறு மருட்பொரு நாநதிப்பாற்-, கடிமதில் பகைவரை யடுபொறி யொடுபல கருவிக ளொடுசூழக், கவினுறு வீழிநகன் னகரினி லரசுசெய் கனிசிலை நுதல்வடிவாளு-, சடையர வெனமிளிர் மரகத மென்கொடி தாலோ தாலேலோ, தவமுனி வரர்தொழ வாழ்ந்திடு சாம்பவி தாலோ தாலேலோ. (௯)

வேறு.

பலபழி யுடையவ ளுமிவ னென்றுயர் பாரா ரேசாமே
பங்கய நின்கழ ளுடலொ ழிந்திடு பாழ்நா ளாகாமே
யுலகினி லருளற லோபிக டங்களை யோயா தேதேடி
யொன்றி யலைந்துழ லாதவ ரம்பெற வோரே ளுளுலு
மலைகட லுலகுயி ராயென வந்ததி ளுலை யாள்வாயென்
றஞ்சலொ ழிந்திட வேவள ரம்பிகை யாளே மாவீழைந்
தலனுறை மரகத மேனியி ளங்கிளி தாலோ தாலேலோ
சந்தவி ளம்பிறை வானுத லந்தரி தாலோ தாலேலோ. (௧௦)

வானவர் புகழ்திரு-வீழையு றைந்தநல் வாழ்வே மாதாவே
வஞ்சக நெஞ்சற வாவென வந்தலை வாதே தோதாயே

கானவர் வலையுறு மானென நைந்தது காணு தோவாவே
கன்றை மறந்திடு மோவனை யன்றியர் காவார் காவாயோர்
வானநு ளமொடு கூவிடு மன்பரை யாள்வோ யேயேயே
னன்பினு டன்றலை சூடிடு செஞ்சர ணாளே மாருதர்
தானுவ மரகத மேனியி ளங்கிளி தாலோ தாலேலோ
சந்தவி ளம்பிறை வாணுத லந்தரி தாலோ தாலேலோ. ()

வேறு.

அந்தரி தாலோசி ரந்தரி தாலேலோ வம்பிகை தாலே லோ வாயார, வன்பரு ளோமோது மொண்பரை தாலோவ ருஞ்சிவை தாலோசர் வான்மாவுந், தந்தவ டாலோபு ரந் தவ டாலோத லந்தனி லேமேலே னுமேலோர், தங்கள்சொ லார்வினை யம்பதி மாதாவெ னுங்குயி ருலேலோ தானை, அந்தரி தாலோசு வுந்தரி தாலோது ரந்தரி தாலேலோ தாயா னுஞ், சுந்தர னேமேடயி டம்போவி மானேசு தந்தரி தா லேலோ தாலேலோ, வந்தனை யோமேடநி னைந்திடு வார்பால் வளர்ந்தவ டாலேலோ தாலேலோ, மண்டோளிர் பூணரி ளங்கிளி யாமாதி வஞ்சியே தாலேலோ தாலேலோ. (கஉ)

தாலப் பருவம் முற்றிற்று.

---

# 4. சப்பாணிப் பருவம்.

எண்டிசையு மெத்தலமு மெவ்வுயிரு மொருமிக்க வீன்றருளு மலைமங்கையுன், னெழிலுதலை யொவ்வாது தினமுருகி யலைமூழ்ந்து மிக்கினொடு நாள்களுறுவின்-, னண்டருலகொளிர்கமல னரியண்ட மண்டல மனந்தனுல கோடிங்களு, மமருயிர்க ளாங்காங்கு காண்கின்ற வாதார வாதேயமாம்பொருள்களைக்-, கண்டுமரு ளுண்டுபின் காணவிர லாற்கருணை காட்டுவிப் பவள்போலவே, கந்தரம தொத்தகறைக்கந்தர மமைந்தவவர் கண்களி லமைத்தெடுத்து-, தண்டளிரின் வண்டுகள் களிக்கின்ற கைகொண்டு சப்பாணி கொட்டியருளே, தானவர்கள் பகைவெல்லி வீரைமா கதவல்லி சப்பாணி கொட்டி யருளே. (க)

தன்பதி தனைப்பழித் திடுநகலி நமதெழில்க டமையும் பழிப்பளென்றே, தாரகைகண் சூழவெழா டோராறு மகிழ்வினொடு சார்ந்தெனு வரிச்சிலம்பா-, ரொன்பதுறு வீரர்க ளுதித்திட்ட செம்பஞ் சுறுத்தடிகள் சேப்பேறவே, புள்ளமுட னுடல்வாயு மொருமித் திபற்றுபணி யொப்பற்ற விச்சாவதிக்-, கன்பினொடு மகளாகு மூன்மூன்று பருவமுட னகிலமுழு தும்புரந்து, வருளழகி னொடுநின்று வரமருளு மிதழொத்த வந்துப் பணிந்திட்டவோர்-, தன்புகழ் விளங்கவர தங்காட்டு மங்கைகொடு சப்பாணி கொட்டி யருளே, தானவர்கள் பகைவெல்லி வீரைமா கதவல்லி சப்பாணி கொட்டி யருளே. (உ)

தங்கச்சிகரமேவு செங்கற் சிலையதாகத் தன்னைச் சிற
ப்பார் பரன், சந்த்ரப் பிறையிதென்ற விக்ரத் தனுசை
வென்ற சந்தத்தி லகவானுதற்-, பங்கத்தி னுறுகெண்டை
புங்கத்தி னெடுசண்டை பணலொத் திடப்பாய்விழி, பண்
சித்ர-மொடுசொற்ற வொண்புத்ரன் மொழிபெற்ற பைம்
பொற் குழைகளார்செவி-, சிங்கத்தி னிடைபொன்ற வஞ்
சத்தி னடையென்ற செங்கேழ்க் கமல பாதமுங், திகழச்
செவ் வரியுற்ற விமைகொட்டி யமுதிட்ட தெளிசொற் பழ
கு சிரொடு-, சங்கத்தை வளர்சத்தி சங்கத்தர் தங்கச்சி சப்
பாணி கொட்டி யருளே, தானவர்கள் பகைவெல்லி வீரை
மரகதவல்லி சப்பாணி கொட்டியருளே. (௩)

வாளத்திர வேறண்டு மீளுக்கிர மொடுதண்டு வருப்பா
ளினு மென்றுவின், வச்சிரதர னச்சமொடு கப்பங்க ளிவ
ரென்று வரவிட்ட தெனவிஞ்சையர்-, தோளிற்கொ ளியாழ்
கொண்டு நாளிற்றிரி நாகங்கள் சுவைகொண் டெழுந்தாடி
டச், சுத்தப்ப துமைபோன்றி ளிக்கத்திர மொடுநின்று சுர
முற்ற விசைபாடலும்-, வேளிக்குறு நீள்புருவ வானக்கு
ரரமாதர்கண் மெட்டொத்த சைக்தாடலு, மிக்கப்பிர சிக்க
விதழ் வைத்துச் சுவைத்தொழுகி விரையுற்ற கைகொண்டு
நீ-, தாளப்பிர மாணமுட னீளுக்கிர யேளமொடு சப்பாணி
கொட்டி யருளே, தானவர்கள் பகைவெல்லி வீரைமரகத
வல்லி சப்பாணி கொட்டியருளே. (௪)

பொன்னிரும் பிரசிதப் புரவவுணர் தங்களைப் புங்கவர் பொருட்டாகவெண், பொடிபடக் கொழுநராம் பூமீசர் செய் தருக்கை புதுமையே பென்றன்பர்க-, ளன்னையங் களிதோ டுணைவியின்றி மகிழ்வோடு நண்பிற் களித்தோங்கியே, நளினமுக மலரவரு ணகைசெய்து புகழ்கொண்டு நவிலரிய மனத்தொடு-, பன்னருந் தொண்டர்களை யம்மின்வம் மின் னென்ற பண்புபெற வாய்மலர்ந்தே, பகர்தவினை பொக் குஞ் சிரக்கம்ப மோடே பரிந்திங் கழைக்கின்றவோர்-, நன் னிரும் பங்கயக் கைம்மல ரிணைக்கொண்டு சப்பாணி கொட்டி யருளே, தானவர்கள் பகைவெல்லி வீரைமர கதவல்லி சப் பாணி கொட்டி யருளே. (௬)

வானத்தின் மீன்களொடு போருற்ற மூந்ததேன வள ர்வுற்ற கயல்சேர்கொடி, வழுதிவழி யிற்சித்ர சேனனது மக ளுமம் வாய்ப்பச்செய் திடுவானக-, ராணுற்ற கொடியோடு மேவுற்று ளன்பினு லாறுமுக னுதியரைமுன், னுருட்டி டிங்குறை யகற்றிடுவ னென்பபோன் றன்போடு புன்பாவை யைத்-, தேனுற்ற கானந் திமிர்ந்திணைக் கால்களிற் சேர்த் திநன் னீராட்டியே, செந்துகில் புனைந்துசில பொன்கல னணிந்துபல சீராட்டி விளையாடுகற்-, றுனத் தனிக்குழவி யெனவருளு மெல்லியே சப்பாணி கொட்டியருளே, தான வர்கள் பகைவெல்லி வீரைமர கதவல்லி சப்பாணி கொட்டி யருளே. (௭)

வேறு.

கஞ்சம லர்க்கிழ வன்சிசு தங்கிய கட்டழ குற்றவ
னக்கொடியுங், கந்தர மெய்த்துள வன்புடை யின்புறு கற்
பொடு பொற்புறு வித்தகியு-, மஞ்சிரு டித்துய ரஞ்சலி தங்
துள வற்பினி ணைக்கைகு வித்துருகி, யங்கண லர்க்கொடி
யந்தரி சுந்தரி யற்கள தற்பர மெய்ச்சிவனைஞ்-, செஞ்சிலை
மொய்த்தட பைங்கொடி யென்றணி சித்திர மெய்ப்புனை
விற்பிழையொண், செம்பொ னிழைத்திடு மக்குகி லின்பி
ழை சிந்தம துற்றறி விப்பவள்போற்-, கொஞ்சி யடித்திடு
மங்கை நயக்கொடு கொட்டுக சப்பாணி கொட்டுகவே, கொ
ன்பொரு நைத்துறை யம்பதி யம்பிகை கொட்டுக சப்பாணி
கொட்டுகவே. (௭)

வஞ்சம தொன்றிடா நெஞ்சினர் நாடியுள் வாய்மையா
இற்றுநி லைந்துறினும், வந்தினை யுண்டுமே யம்பினுங் தீயி
லு மாகமோ டுற்றவ னத்துறினும்-, பஞ்சித மென்பனீ ளன்
பரொண் பாடல்கள் பாடியே முட்டினெ ருக்குறினும், பஞ்
சடி யின்றரா சங்கடன் பாலுள பாசமா மட்டைநி றுத்த
ருளி-, இஞ்சையர் தொண்டரு தம்பரின் பேரிகை வீரவோ
விட்டுநி ரைத்திடுநீள், விண்டய னும்பரோ டும்பணிந் தே
தொழும் வீரைமா நத்தம துற்றிடுமோர்-, கொஞ்சு மிளம்
புரு மென்கிளி நேருமை கொட்டுக சப்பாணி கொட்டுகவே,
கொன்பொரு நைத்துறை யம்பதி யம்பிகை கொட்டுக சப்
பாணி கொட்டுகவே. (௮)

சந்தமேவ தங்களோ தஞ்சதா னந்தமா தங்கியே சத்
தியு ருத்திரையே, சம்புநீ ளங்கிவே தண்டமா நின்றநா
டண்செலா மெய்க்கரு ணைத்திறலா-, லந்தமேவ மங்கியே
தண்டரா நின்றவோ ரஞ்சமே பச்சைவ னக்கிளியே, யண்
டமூர் மங்குலா ருங்கலா பங்களோ டஞ்சமார் நற்பொழி
லுற்றிலகு-, கந்தமே னின்றகா தங்கள்போ யொன்றுமோர்
கண்டவீ ரைத்தல மூற்றிடுவண், கங்கைரு டங்கணீ சன்ற
னோர் பங்கியே கண்கொளா வித்தைவி ளாப்பமேளவை-, ருந்
தமா ரங்கண்பா றங்கையே மங்கையே கொட்டுக சப்பாணி
கொட்டுகவே, கொன்பொரு நைத்துறை யம்பதி யம்பிகை
கொட்டுக சப்பாணி கொட்டுகவே. (௬)

வேறு.

இடியுறு கொடியுன தணியா வாலுளி ளைத்துவி னுற்
றுட, வெழுதரு மறைதுதி யெனுமுறை யோலமி திட்டுவி
னிர்த்தாட, விலகுறு ககபதி திகழுறு நீள்கொடி யிட்டள
மற்றுட, விகலுறு கலுழனும் வெருவிட மூடிக மெக்களி
யிட்டாட-, வடவையி தெனவிழி யொடுகிரி கோழிம தத்
தொட டைசத்தாட, வகைவகை யொடுபலர் மருவுத லேமக
ரக்குடி யொப்பாக, மகியவை நிரலுறு வகைமழ வேறும
தித்தலை வுற்றுட, மலருறு நினதடி யருளுயர் தேனைம
டுத்திட வுற்றார்கள்-, கடிகம ழளகமொ யலரளி விழமேவார்

கட்கணை யொட்டாது, கருவிழி யொழுகரு ளமுதுகொள்
சேடியர் கட்கடை கொட்டாத, கவினுட னுளர்பல மணி
வளை யேயிரு கைக்கரு ணைக்கான, கடிமிக வெழிலுறு
திசையிலு மாடிடு கட்டவிழ் கைப்போதாற்-, குடிகுல மறு
பர னொடுதிரு வீரவ குப்பம தற்றோரார், குவலய மொடு
பல புவனமு நாடுறு குட்டரி நற்சேயாய்க், குழகொடு வள
ரின மரகத நாயகி கொட்டுக சப்பாணி, குவடுறு சிலையா
னிடமொய்ப ராபரை கொட்டுக சப்பாணி. (௧௦)

முத்திய வர்க்கும ளித்திடு மெய்ப்பொருண் மொய்த்
தரு ளக்கூறு, முத்தமி ழுட்சுவை யைக்கழை சர்க்கரை
முக்கனி யைப்பாகை, மொக்குள டைத்தும தத்தசு ருப்
புவ டித்திடு நற்றேனை, முற்செய்த வத்தினு நித்தன ரொத்
தெதி ருற்றவர் சொற்கூ ளிழப்-, புத்தமு தத்தைநி கர்த்துவ
டித்திடு தட்டுவா மெய்த்தேறல், புத்தக முற்றவ டிக்கம
லத்தொடு புங்குமொ முக்கேய, பொய்ச்செய லைத்தெறு
முத்தர்த மெய்த்தவ முற்றுவ னத்தேநீள், பொற்புறு
பச்சைம ணிக்கொடி பற்றியு தித்திடு மெய்ச்சிரே-, யொத்
ததெ னத்திகழ் வுற்றெவர் கட்குமு ரித்துடை நற்றுயா,
வுற்றுறை கைக்கிளி சொற்குயில் பொற்சிகி யொத்தவ
னப்பாரு-, முத்தம நற்குணி தற்குணி சற்குணி யுத்தம
ருட்காணா, வுற்றிடு பொற்கம லப்பத மைக்கணி யுத்தமி
பொய்ப்போடு-, குத்திர மற்றவர் சித்தநி லத்தமு ளைத்

தெழு நட்போடு, குட்டரி னைத்தன தத்தனெ னக்கொடு
தித்தவெ ழிற்பூவின், கொத்தனி மெய்ப்பரை தற்பரை
சிற்பரை கொட்டுக சப்பாணி, கொக்கிற கைப்புனை யத்தனி
டத்துமை கொட்டுக சப்பாணி. (௧௧)

சப்பாணிப் பருவம் முற்றிற்று.

---

# 5. முத்தப் பருவம்.

---

புத்தக மிசைத்திடை யிளம்பிறை யிணைத்துமுற் பொ
ற்றுண்ட வித்துருமமேற், புதுமதிக ளொப்பிணைத் தருகிலகு
கோபங்கள் போர்த்தன வனத்துவியுங், கொத்தல ரனிச்ச
முஞ் செம்பஞ்சு மஞ்சுமென் குளிர்கமல வொள்ளடிகளாற்,
கொடுமைகள் சிதைந்துளது சிந்தனை யியற்றவென் குவ
டொக்கு முள்ளுடையவே, பத்திபடு முராமீது தைத்துமிரு
விழிமாசு பாறிட வமைத்துமுற்றும், பரிவிலா விதிவரி யழி
ந்துனை வணங்கிடும் படிதலை நடந்து வந்தே, சுத்தமுறு
விரைநக ருற்றமர கதவல்லி துவர்வாயின் முத்தமருளே,
சுகமெச்சு மழலைமொழி மதிமெச்சு நகையிதழி துகிர்முத்த
முத்தமருளே. (௧)

தடையற்று வருகவென் றடியர்க் கிசைப்பபோற் றனி
விரை யப்பதியினிற், றலையெட்டு கொடியசைய விணைய

ற்ற வரசபுரி சடையிற்ற ணதிதாங்குமோர்-, படையுற்ற மழுவலர்கை யிடமுற்ற வுமையுடையர் பகைகாம னுக்கான வர், படியுற்ற மகள்பரவ னுமனுக்கி னருள்புரியொர் பரமு த்த வத்தரிடமார்-, மடையுற்ற வழியுமரு ணிறைவுற்ற விழியெழிலி வலிதிர மொய்த்தகுழலி, மகிழ்வுற்ற மரகதவி லொளியுற்ற வுமைபமலை மலைபெற் றவக்குமகளாங்-, தொ டையுற்ற பணையனைய புயமுற்ற வருளமுகி துவர்வாயின் முத்தமருளே, சுகமெச்சு மழலைமொழி மதிமெச்சு நகையி தழி துகிர்முத்த முத்தமருளே. (உ)

வேறு.

அடியிற் கமல மதுமலர்ந்த வலர்க்கொம் பிடைமேற் றலைத்தால, மடர்ந்தாங் களகத் தெழிற்கஞ்சி யகன்று காயந் திரிதலெனும்-, படிவின் மேனெடுங் கொண்டலையும் பற்று மரத்திற் றாக்கணங்கள், பரிவிற் றாக்குங் குடம்பைசுளிற் பண்ணைச் சாலித் தரளமதைக்-, கடிதிற் கொடுபோய் விளக் கிடநற் கவினீர்வாவி புறத்தமரக், கனகப் புவிபோல் வளரு மலங் காரப் பொழிலார் வீரைநகர்-, குடிகொண் டுறையு மர கதப்பைங் கொடியே முத்தந் தருகவே, குன்றச் சிலையா னிடமருவுங் குயிலே முத்தந் தருகவே. (௩)

கந்தச் சிலைபி னின்றுடிக் கலைக ளெடுத்து விளவெறி ந்து, காட்டான் றிரட்டிக் கழையெடுத்துக் கவினார் முல்லைப் பதிமேயாடிச்-, சிந்தத் தபிர்பா னவனீதஞ் சேரப் பருகி மலர்

புணர்ந்து, திருமா லாடுஞ் செயல்போன்று திகழ்ந்து வளைந்து சிறப்புறுநற்-, சந்தப் பொருணை யலைகொழிக்குஞ் சங்கோடிப்பி முத்தமதாற், சமையுங் கரைசேர் திருவீரைத் தலத்தின் வாழ்வே தழைத்தருளுங்-, கொந்துக் குழலார் மரகதப்பைங் கொடியே முத்தந் தருகவே, குன்றச் சிலையா னிடமருவுங் குயிலே முத்தந் தருகவே. (௪)

பிரமன் மருகி கத்துருவின் பிரிய சுதராய்த் திசைகாக்கப், பெறும்வா சுகியா தியவரவிற் பிறக்கு முத்தம் விடம் வீசுங்-, கரமன் முகச்சுப் பிரதீபக் களிறா தியவெண் மருப்பில்வருங், கனத்த முத்தங் கடுமையொடுங் கரிமுத் தென்னும் பெயருமுறு-, மரியும் விதியுந் தினம்பணிய மருளார் திருவீ ரவனல்லூர்க், கரசா மரக தாம்பிகைதன் னருளார் புதல்வர்க் களித்திடுமோர்-, குரலின் குமுத மலர்வாயின் குறைதீர் முத்தந் தருகவே, குன்றச் சிலையா னிடமருவுங் குயிலே முத்தந் தருகவே. (௫)

காலன் றெழுந்த சுதிபெறுநின் கவினார் வீரை நகரிற்பெய், காரின் முத்தம் விழும்விசையாற் கன்றிப் புகரார் கடன்மீதிற்-, பாலின் றெளிர்ந்த விடைச்சுறவின் பளிங்கேய் முத்த மலைப்படுமப், பகலின் முத்த முழுமுத்தன் பணைக்கண் முத்த மொத்திதெனச்-, சிலந் திகழு முத்தம்டத் திறக்குங் குமுத விதழவிழுஞ், சீரார் முத்த நகைவாயையச் சிவசேய் கொள்ள வுதவுவபோற்-, கொலந் திகழு

மரகதமென் கொடியே முத்தந் தருகவே, குன்றச் சிலை
யா ளிடமருவுங் குயிலே முத்தந் தருகவே. (௬)

தென்றற் குடியா மலைக்குணமார் திருவீ ரவனல் லூர்க்கரசாய்ச், செங்கோ லோச்சு மரகதச்செந் தேனே மைக்கண் டிகழுமயிலே-, மன்றற் கமுகி னித்திலமும் வளருங் கன்னற் றரளமதும், வனச மணியு நித்தார மதுவுங் கதலி மௌத்திகமு-, மொன்றற் கொன்றங் கொப்பறலோ டுரிய விலைக ளளவுளதா, முளைடயா னடிதே டரிக்கெழு லொளிர் பன் முத்தும் விலைக்கிலதின்-, குன்றிக் களங்க மறுகுமுதக் குளிர்வாய் முத்தந் தருகவே, குன்றச் சிலையா னிடமருவுங் குயிலே முத்தந் தருகவே. (௭)

வேறு.

கரியினைத்தன் னடமதற்கண் கவரனற்கண் முசலியின்
  கழிவுமுத்தங் கரமுற்றுங் கருணைமுத்தங் கவிஞற
வரசியற்றுந் தவவனத்தென் பணியிடத்தன் பரிணமா[விழி
  ரரனொடொத்தின் பொடுவசித்திங் கருள்கொழிக்குங்கயல்
மரகதப்ணைபஞ் சுடர்விரிக்கும் வளருமைக்கண் டிகழுமா
  மலைமுறச்செந் தளமவிழ்க்கும் வனசமொக்கும் டதவுமா
சரவணத்தன் கயமுகத்தன் சநிமுத்தந் தருகவே
  தளவமொய்க்குங் குமுதமுத்தந் தமிழமுத்தந் தருகவே.
குலபதத்தின் புரமனைக்குங் குடிதழைக்குந் தகைமையாய்க்
  குலவசிட்டன் குடிபுரக்குங் குயிலிமுத்தங் களமுறற்

கவசமுற்றம் புயவடிக்கஞ் சவியியற்றும் பெருமைதேர்ந்
தருளளித்தன் புறநிழற்சிந் தளவின்முத்தந் திகழவே
புவனமுற்றுங் கதிவிளைக்கும் பொருநைசுற்றுந் தலமதாய்ப்
புலவர்மெச்சுந் தமிழ்வளர்த்தம் புகழ்மிகைத்தின் புயர்வுறுந்
தவவனத்தொன் மரகதப்பெண் டளிரிமுத்தந் தருகவே
தளவமொய்க்குங் குமுதமுத்தந் தமிழமுத்தந் தருகவே.

விமலைமுத்தந் தருகமுக்கண் விறலிமுத்தந் தருகநல்
விரதமுற்றன் பொடுதுதிக்கும் விபுதருக்கின் பருளுமோ
ரிமயவெற்பன் குழவியெற்கி னகிரதமுத்தந் தருகவென்
னிதயநிற்குங் கவுரிமுத்தென் றலகுமுத்தந் தருகவொண்
ஞிமிறுமொய்க்குந் தவவனத்தின் னெகிழமுற்றங் கமலரி
ஞிமிருமைக்கண்மரகதப்பெண் ணெகிழ்வின்முத்தந் தருகநீள்
சமயமுற்றும் பாவிநிற்குஞ் சரசிமுத்தந் தருகவே
தளவமொய்க்குங் குமுதமுத்தந் தமிழமுத்தந் தருகவே.

வேறு

வித்தக மிஞ்சுமி ளங்கிளி யந்தரி மித்ரியு ருத்திரைநல்
வீரைவ ளம்பதி மேவிய சுந்தரி மிக்கவ ருக்கருண்மா
சத்திச வுந்தரி சங்கரி யம்பிகை தற்பரை யொப்பறுநீ
டாரணி புஞ்சிவ காமியி ளங்குயில் சற்குணி நிற்குணியே
சித்தச னங்குடை யென்றெழு மிந்துசெனி தகிடுமுத்தமுமே
சீரில் களங்கம தோடுவி ளைந்தது செப்புறுகொக்கொடுபண்
முத்தினை வென்ற விளந்தச னஞ்செறி முத்தம ளித்தருளே
மூவெயில்வென் றவர்பாகமமர்ந் தவண்முத்தமளித் தருளே.

முத்தப் பருவம் முற்றிற்று.

## ௬-வருகைப் பருவம்.

விண்டடவு தண்டலைக ளண்டரர்ச் சனையென்ன வே மலரு திர்க்கின்றவோர், விரைநகர் மேவுமுயர் பூமீசர் பாகங்கொள் விமலமரகதவல்லியே-, கொண்டலது நின்குழலினுக்கொல்கி னும்பொழிதல் குறையாது பார்நினதடி-, கொளற்கொவா தெனினும் பெறற்கருமை யென்றுனிக் கொண்டாடி யேகொண்டிடும்-, வண்டுமு மணிச்சப் பரப்புகள் கசங்கிட மற்றஞ்ச முடிநையுற, வானவரு நாடுமுயர் மாதவ நிறைந்தநறு மலரடி பெயர்த்தோடியே-, செண்டிலரு செங்கைகளின் வண்டுகள் கவிக்கின்ற சீரினுட னேவருகவே, செஞ்சிலம் பொடுதண்டை மிஞ்சிகிண் கிணிகொஞ்சு தென்பாத மயில்வருகவே. (க)

கும்பமுனி யுறைகின்ற தென்கயிலை யெனநின்ற குவட்டின்க ணுறுமானினங், குறியதினை கவர்பொழுது கிள்ளை முடி மடிபடக் கூறுதங் கன்றுன்னியே-, யம்பரிழி பானுலர்வு கற்பூர வண்டலென வள்ளிவயல் கட்கேகுமோ, ரலையென்ற கரமோ டறஞ்செய்பொரு னைக்கிழவி யணைவுற்ற விரைநகரி-, னும்பரொடு மிம்பர்தொழ வுறைகின்ற மலைமங்கை யுரிபவர்க் கருளம்பிகை, யுரிமையொடு செழியரிற் சித்ரசே னற்கருள வொரரிகொண்டு வெளிவந்திடுஞ்-, செம்பொனுறு வரைவல்லி பங்கின்மரகதவல்லி செல்வியங் குயில்வருகவே, செஞ்சிலம் பொடுதண்டை மிஞ்சிகிண் கிணி கொஞ்சு தென்பாத மயில்வருகவே. (உ)

மங்கையர் சுவைக்கநட் புறநோக்க நிழல்செய்ய மதி
யாது தைக்கநிந்தை, வசனிக்க நகைசெய்ய மார்போ டணை
க்கவிசை வாய்கொண்டு பாடமலருந்-, துங்கமகிழ் சீவனிம
ராசன் பகம்பிண்டி சூழ்பாட லம்மாலதி, துளிர்குரா வாச
ந்தி யெவையுமாங் காங்குனது துணையாக வேமலர்தரப்-,
புங்கவர் வணங்கறிஞ ரொண்டவசு புரிகின்ற புயலேர்க்கு
வணமென்னுநற், புகழ்மேவு விரைநகர் தனில்வாழ மலைமங்
கை பொற்புறவு சொற்பூவையாஞ்-, செங்கைவளை யணிபெ
ல்லி யின்சொன்மர கதவல்லி திகழ்கின்ற குயில்வருகவே,
செஞ்சிலம் பொடுதண்டை மிஞ்சிகிண் கிணிகொஞ்சு தென்
பாத மயில்வருகவே. (௫)

நீண்டநே மிக்குவடு சுவரெண்மர் சூழ்கால்பொ னே
ரால நடுநட்டுவின், னிழன்மாட மூற்றிரவி மதிதீப மிட்ட
மனை நின்றுயிர்கள் செய்வினைகளைக்-, காண்டக வளந்தள
வை பின்னெழு பிறப்புங் கதிக்கரையு மாற்றிடுதலாங், கா
ரிய கடத்தலறி விப்பள்போன் முத்துக் கழங்காடு மொய்கு
ழலியே-, தாண்டுகோ றளர்கின்ற சுடரினுக் கெனவுற்ற
துணைசுருதி யென்றுருதியே, சூழுமல மாயைக டொலைத்த
றிவு மயமான தொண்டர்தொழ விரைநகர்வாழ்-, சேண்டமி
இயகிருபை யோங்குமரகதவல்லி சிவையெனுங் குயில்வரு
கவே, செஞ்சிலம் பொடுதண்டை மிஞ்சிகிண் கிணிகொஞ்சு
தென்பாத மயில்வருகவே. (௬)

## வேறு.

மலைமேக ளாமென வந்தபி னறுமுக மதலையை யளித்தது மோமுன்போ, மதமழை யெனவருண் மழைபொழி கபமுக மதலையை யளித்தது மெப்போதோ-, வலைஞர்க ளிறைமக ளெனவுறி லிருபுதல் வருமர னிடைமறை கலைவாரீ,வாரிபி லிட்டது மென்னென மாமதன் மச்சினி முறைகொடு வினவிடினுங்-, கலைமதி யொடுகடல் வந்தபி னேழைமக் காலைப யளித்தது மல்லாதக், காலமோ கடலுவரி லங்கைபி லுறைந்த கழகெறனு மருப்புள களிப்போடேன்-, றலைதரு மலரடி மரகத மென்கொடித் தாயே யருள்செய வந்தருளே, தவவன வீரைநன் னகர்வளி ரிளமயில் சாம்பவி யம்பிகை வந்தருளே. (௫)

நஞ்சணி கந்தர நாயக னியற்பகை ஞானியின் மனையைய வாய்போலுன், றடி யிரந்தது நகமக ளென்னநீ நன்னிய வமயமோ பின்போதேன்-, கொஞ்சிய சொல்லியென் மரகத வல்லிமெய் கூறுக வெனினுமக் குழகுடைய, தேகனை கைபெனு மாமகட் கதினிறை குறைவிலை யருளுது நீயைபார்-, வஞ்சி யெனத்திகழ் வுறவரி பிருந்தையை வாழவி நடிப்பின னிறைதீயே, வாய்நவி லென்று வழக்கிட, வுண்டெனு மகிழ்ச்சியின் வருகவெங் தாயெனக்குத்-, தஞ்சநி னஞ்சர ணங்கள லாதிலை தற்பரை யருள்செய வந்தருளே, தவவன வீரைநன் னகர்வள ரிளமயில் சாம்பவி யம்பிகை வந்தருளே. (௬)

வேறு.

வளைகு ழைந்து புரண்டுவயல் வளைந்தே நின்ற வயற் புறத்து, வாளை நிகர்கட் கடைசியர்கள் வாளைமோத வகழ்ந் தெறிந்த-, களையோ டுயிர்த்த வெண்முத்தங் களையோ டொளிர முத்தமுடன், கடையார் வாரிக் கட்களாந்த கடையிற்குவித்துக் களிகொளநெல்-, விளையா நின்ற வளத்தொடுவின் விளைபூம் பொழில்சூழ் வளமுறுமோர், விரை சூழுந் தரணியினல் விரைநகரந் தனில்வளருங்-, கிளையார் முத்த னிடமருவெங் கிளையே வருக வருகவே, கிழியே போலு மரகதப்பைங் கிளியே வருக வருகவே. (எ)

அரிகம் பணியு மத்தியநு மறாகும் பணியு மத்தியுமே, யன்போ டணியும் பரனிடமர் துகிலோ டணியும் பொலிபரையாய்-, விரைதார் வீர வன்மனுளம் விரும்பும் வீர வன்மனலூர், விளைவே மரக தன்புகழ மிளிரு மரக தாம்பிகையே-, வரியா ரகல கலனக்கை வண்டு கலக லெனமிளிரு, மழைக்கண் வாரி யருளொழுக மார்பில் வாரின் மணியொளிரக்-, கிரிசைக் குயிலே ரளகமுறுங் கிரணைக் குயிலே வருகவே, கிழியே போலு மரகதப்பைங் கிளியே வருக வருகவே. (அ)

போதங் திகழ்கா ழியில்வளர்ந்த புனிதக் குழவி பால்கருதிப், புலம்பிக் கலுழ விலைபசிக்குப் புசிக்கக் கொடுவா சோறென்று-, வாதில் குருந மசிவயனும் வருந்த விலைபட்

டணைத்தடியும், மகிழ்ந்தூட் டமுதென் றிரங்கவிலை வருந்தா துயர்வி ரவ்வணகரின்-, வேதம் பரவற் கரிவரிதாய் வேதக் கழல்கள் கலகலெலன, வேதச் சிகையி னடமிடுமோர் விமலப் பதங்கள் பெயர்த்தோடிக்-, கீதம் பயிலும் வண்டோதிக் கிரிசைக் குயிலே வருகவே, கிளியே போலு மரகதப்பைங் கிளியே வருக வருகவே. (௯)

பாசத் தளைக டமையறுத்துப் பரவு மடியார்க் கருள் புரியும், பரையே வருக வடருமலப் பகையே வருக பனி க்கடல்சூழ்-, தேசத் திணையில் விரைநகர் செழிக்க வளருஞ் சிவையாமென், றேனே வருக வெனதுபவஞ் சிதைக்க வருக வருளொழுகு-, மாசற் றொளிரா டிக்கதுப்பின் பணைக்கு முத்த மிதழ்முத்தம், மலர்ச்செங் கரங்கண் முத்தமொடு மகிழத் தருமொண் கழற்சீர்க்கென்-, கேசத் தயன்கை யெ ழுத்துமழுங் கிடத்தா ளடித்து வருகவே, கிளியே போ லு மரகதப்பைங் கிளியே வருக வருகவே. (௧௦)

வேறு.

வேத விதிவழு வாத மறையவர் மேவி நிரைநிரை மரு வியே, மேக மழையொழி யாது சொரிதர வேள்வி புரியோ வி யரசர்கள், வீறு டிரதம தூரு மொலிபொனேர் கூல மணிதுகில் விலைபகர், வீதி யொலிவய ஞறு தொடுமொலி மீளா வணைவகடு மொலிகளை, வீசு மொலிகநி ராடு மொலிய னவ விழ வடுமொலி களமதின், மேவி யடிகொணெல் வீசு

மொலிபொலி வீசி யளவொலி சகடமேல், வீதி வருமொலி
வீடு சொரியொலி வீறு கொடைமண முரசொலி, வேலை
யொலிகெட நீடி வளருறு விரை நகரினி லுறையுமோர்-,
பாதி மதியர வாறொ டறுகளி பாயு மலர்பல புனைசடை,
பாலி னொளிர்திரு நீறு தருமொரு பால விழியரு ளிணை
விழி, பாச மறுபொய்நி சாச ரினெயில் பாற நகைபுரி பவ
ளனாய், பாயு முழைமழு நீடு மெழிலொடு பாச நமனுதை
படமலர், பாத மணைகதி சேரு நெறிவரு பாப முயலகன்
முதுகிலே, பாரி னெடுவிணு மேத மகலவு பாய நடமிடு பத
மிவை, பாளி யுறுகுறி நாடி யுளமொடு பார ரிவைதொழ
வருள்செயோர், பாச மழவிடை யேறு பரனொரு பாக மது
தனி லிலகியே-, சீத னனிமிகு பாலு மமுதொடு தேனு முய
ர்கழை பிரதமுஞ், சீனி குளமடு பாகு திரிகனி சேரு மிரத
மும் வடிகொடு, சேர விரவியு ளாவி லுருசிகொள் சீரி னவ
னுடனினிமையாய்ச், சீவ னுடையரி யாரு நமதுயர் சேய
ரெனுமுறை யுளமுளித், தீய சிலசிலர் பாவ வினைபல தீது
செயினும விடார்கடாந், தீரு நெறிகளி லாத தெனினுமெய்
திரு மௌனமை நினைவதாற், தீர வருள்வது ஞேய மென
வுயிர் சேம முறுசெய றிகழ்வுற, சேதி பலவொடு னொடு
மருளொடு தீய முடனவ னருகவே-, வாதி னுரிமையொ
டோது மகிமைகொள் வாய்மை மிகுமெழி லமலையே, வாரி
யெனவிலை சாண தளவுறு மாய்வி லகடுசெய் வலியினென்,

மாழ்கி யுழலுறு பாவர் சிலரினு மான மழிபழி பலபலவம், வாது கெடுவினை தீது கொடுமைகள் வாழ வளருவ னெனினு மே, வார முடனுனை நாடி நினைவது மாறு நெறியில னெனை யடர், மாயை யொடுபல பாவ வினைகளு மாள வருள்புரி மனமொடு,மானி னிணைவிழி யோடெ னருகினி லோடி வரு கமுன் வருகவே, மாலை மணமொடு மேவு மரகத மாமெ னிளமயில் வருகவே. (கக)

வருகைப் பருவம் முற்றிற்று.

---

# 7-அம்புலிப் பருவம்.

---

அமுதகதி ரோன்சந்த்ர னரிசுதா கரனலவ னல்லிலானி ராக்கதிரின, னுலோன விந்திம கரன்கோன் கலாநிதி யரிச்சி கன் சசிசோமனீர்க்-, குமுதநண் பன்றுன வன்றிங்கள் விது மதி குபேரன்வி பத்து முயலின், கூடுசீ தன்றரா பதிநிசா பதியங் குரங்கிதண் சுடரென்னுமே-, கமுருகழை யாநிவெ ண் முத்துகட் கும்மினிய கவின்முத்து குக்கு நிற்குக், கடவு ற்ற வமுதென்ன வோதுபற் பெயருட் களங்கமென வும் பெற்றதா-, லமுதமிலே யநதிர வீரைங்க ரமலையுட னம்புலி யாடவாவே, யமுதொழுகு சொல்லிமர கதவல்லி யம்மை யுட னம்புலி யாடவாவே. (க)

ஆனையுயர், கொடியெனக் கொண்டனள் ளிவணீயு மம்மானை யேகொண்டனை, யாறுற்ற தலையனைப் பெற்றனீயும்பரம னாறுற்ற தலைபெற்றனை-, மானவமு துறுநிலவு பொழிதுவாய் நீயிவளும் வாணகை நிலாப்பொழிகுவாண், மதியனிவ னென்னனல்நீ பெற்றையிவ ளுங்கருணை மதியன்ன வேபெற்றனள்-, வானமுட னெவ்வுலகு மிவ்வீரைநகர்நின்று வாழமல விருணீக்கியே, வாழ்த்தநின் றுணீயுமிருணீக்கி யாவர்களும் வாழ்த்தநின் றுயாதலா-, லானினைம்பொருளாடு மரனிடத் திவளொக்கு மம்புலீ யாடவாவே, யமுதொழுகு சொல்லிமர கதவல்லி யம்மையுட னம்புலீ யாடவாவே. (௨)

கருணைக டாட்சியிவ ளென்பதறி கிலையுனைக் கயரோகியென்று பிருகோட், கடுவுற்ற வரவங்க ளுணுமெச்சி லென்றுங் களங்கம் பொதிந்த தென்றும்-, வரரோடு செயநின்ற சிறுவிதி மகத்தினொரு மைந்தனாற் றேய்ந்த தென்றும், மலமற்ற வொருமுனிவ னுண்டமிழ மெச்சிறனில் வந்தவிழி சேயதென்றுங்-, திருவாரு கருணையாற் றேராம லோநினைச் சீரோடு வாவாவெனல், செவ்விய மனத்தோர்கள் பிறர் குறையை நாடாத திறமைதெரி விப்பாளென-, வரனோடு வீரைநக ரமர்வுற் றழைப்பவளொ டம்புலீ யாடவாவே, யமுதொழுகு சொல்லிமர கதவல்லி யம்மையுட னம்புலீ யாடவாவே. (௩)

எண்ணிரண் டுண்டுகலை நிறகிவட் கெண்ணான் கிரட்டி கலை களுமுண்டலா, லியற்கையொளி குறைவில்கலை யுண்ட டியி னுகிருகளி லெண்ணில்கலை களுமுண்டுநீ-, கண்ணிரண் டொடுமனிதர் காணவரி தாகவொரு கலையொழிய மற்றொ ழிகுவாய், கண்கண்மறை யினுமுழுவ லன்பர்கண்மு னுயி ரக்கலையொடிவள் காண நிற்பாள்-, புண்ணியந் தாங்கொ ளா தேனையர்கள் கொள்ளப் புரிந்தாங்குன் மதுசக்கரப், புள்ளுண்ண விடமுண்ணு நினையிவ ளழைக்கின்ற புதுமை யை நினைத்திசனு-, மணாறன் பங்கிலுறை வீரைநக ரம்பி கையொ டம்புலீ யாடவாவே, யமுதொழுகு சொல்லிமர கத வல்லி யம்மையுட னம்புலீ யாடவாவே. (௪)

உலகவிருள் போக்கினே முறைமையேந்தி னேம்விண்ணி னுடுபதி யெனத்தோன்றினோ, முப்புற்ற வமுதுகொண் டோமென்று நீமகிழ்ந்த லொப்பிலிவண் முன்னொக்குமோ- விலகுமிவ ளணைநில்வு முத்துடைவை வென்றுமல விருளோ டு முலகற்றெறு, மிறைவரிட மான்கோண வெழில்செய்வி ழி கண்முனின் னிரலைகெடு மெனலையமோ-, நலமுறுநன் மொழியமுத மன்பர்பவ நோய்கட்கு நன்மருந் தாமாதலா, னண்புமிக விவளொடுநீ வந்துபணி செய்யிலுன் னலிவொடு களங்கமறுமா-, லலகிறிரு வீரைநக ராரமலர் பங்கினளொ டம்புலீ யாடவாவே, யமுதொழுகு சொல்லிமர கதவல்லி யம்மையுட னம்புலீ யாடவாவே. (௫)

செங்கைகொடு வாவென வுளைக்கூவு கின்றவிவ டிரி
லோக முஞ்சென்றுநீ, டிக்குவிசை யஞ்செய்தொரு நகர்தி
ன்று கொழுநர்பாற் செங்கோ லளித்திட்டவள்-, கங்கைதரு
துறையிலொரு தலமுறைந் தன்னமுயிர் கட்கெலா மிட்டவ
ர்களைக், கடைநாளி லரன்விஞ்சை யோதமடி தனில்வலது
காதுமே லுறவைப்பவள்-, சங்கையற வொருபதியி லெண்
ணென்கறங்கணமர் தம்பொருட் டேசெய்தவள், சாதமது
குருநமசி வாயற் களித்தவ டனையொடுனை யுங்காப்பளா-,
றங்கம்வள ரிவ்விரை நகரரசி யாதலா லம்புலீ யாடவாவே,
யமுதொழுகு சொல்மர கதவல்லி யம்மையுட னம்புலீ யா
டவாவே. (௬)

தண்டலையை வென்றுவளர் தன்குழ லெனும்புய றருஞ்
சிலை நுதற்கஞ்சிநீ, தரியாமல் விண்வழி யொளிந்தோடல் கண்
டோ தளிர்க்காந்த ளங்கைம்மலர்-, கொண்டுவிசை யோடு
விட்டெறிகின்ற வெருவினாற் கூசிநலி வதுகொண்டுமோ,
கோளரவி னுக்கஞ்சி வெருவுதலி னேவலது கொழுநர்முடி
யார்புன்னியோ-, செண்டுமணி மாடமேற் கூடவிளை யாடு,
தன் சேடியோ டுதித்தை பென்றோ, இருநா தனைக்கரசு
செய்தற் கமைத்திட்ட செழியர்வழி முதலென் றுமோ-,
வண்டர்தொழும் விரைநகர் நின்றினி தழைப்பவளோ டம்
புலீ யாடவாவே, யமுதொழுகு சொல்மர கதவல்லி யம்
மையுட னம்புலீ யாடவாவே. (௭)

காசமொடு நின்னது களங்கமு மறுக்கவோ கடவினமுதங் கணைட்புமோர், கல்லினடி கொண்டவொரு நோவுக டவிர்க்கவோ கடுகுமுன் னுயர்மாமனுற்-, றேசுகுறை வாதலை நிரப்பவோ நினதுரிய தெரிவையர்க ளிற்சிலர்க்குத், தீமை செய் திட்டபழி தீர்க்கவோ குருவுக் கிழைத்தபழி சேதிக்கவோ-, கேசவ னுளத்தனன் முகத்தத்தி ரியின்விழி கீரவா ரியுமுற்றுநீ, கிட்டிப் பிறக்கின்ற பிறவிக டொலைக்கவோ கிருபையொ டுனைக்கூவுத-, லாசையொடு வந்தெனென் றெழில்வீரை நகருமையொ டம்புலீ யாடவாவே, யமுதொழுகு சொல்லிமா கதவல்லி யம்மையுட னம்புலீ யாடவாவே.

கன்னல்பெறு வில்லிவிரி கவிகையென நீகின்ற காரிய நினைக்கி லெவமோ, கருணைநிறை யிவளன்ப ருன்றனை மதித் திடுவர் கழறினிவ டன்கொழுநனுஞ்-, சொன்னமலை வில்லி நாமலவன துடலந் தொலைத்தபினு நீள்குக்குமர், துணை யின்றி வென்றவிவ ளின்வலி தொலைப்பென்னல் சொல்ல வெற் றென்னச்சமோ-, நின்னையுறு மவ[illegible]தருளின் வாவென்ப னோர்ந்திலையே லென்னுவையோ, நேர்விழியு முண்டுநுதல் வில்லுண்டு விழியம்பு நெடுவாள்வை வேலுண் டிவட்-, கன்னமலி வீரைநக ராசிவா வென்றிடுமு னம்புலீ யாடவாவே, யமுதொழுகு சொல்லிமா கதவல்லி யம்மையுட னம்புலீ யாடவாவே. (௬)

வன்பினொடு தாருவனுனை யீயாளு டுக்களொடு வல்லிகொ ண் டிழுத்தலைப்ப, வலமாய்ச் சுழற்படுவை மாற்றவற்றி யாதநீ மகிழ்வொடிவள் வாவென்றிட-, வின்பினுடன் வாரா திருக் கினிவண் முனிவினுக் கெதிர்நிற்க வலையோவிவட், கோப்ப னென்னுமொரு சுதனுண்டு தாருகனை யெற்றுமுயர் கோடு ண்டலாற்-, றன்பெருமை மிஞ்சாறு முகனென்னு மொரு மகன் றனுண்டு கைவேலேந்தா, தானைதனி லோமலையி லோ வின்னணி லோவெங்குச் சார்ந்தாலு மேவிட்டிடா-, தன்பினி வ ரறியுமுன் விரைநக ரம்பிகையோ டம்புலீ யாடவாவே, யமுதொழுகு சொல்லிமர கதவல்லி யம்மையுட னம்புலீ யாடவாவே. (௧௦)

பொன்னிலகு மலையைவல முற்றிடும் புண்யமோ புகழ் பெற்ற விவள்கொழுநராம், பூமீசர் முடியிலுற லாலுலக ருன்கிழமை புரிகின்ற தவமகிமையோ-, [illegible]னியிவள் சுத னன கணபதியி னுற்றற கழியாதி னீசத்துவம், கழியவவ னைச்சினக் முன்பக்க நான்கினிற் காசினிசெய் நோன்பன்பு கொ-, றன்னிகரி லாதவிவ னின்னைவா வென்றிடுத றனை யெண்ணி னின்னன்னயத், தவமென்ன வேபுகல்வ னுதலா லைப்புகழ்க டங்கித் தழைத்தோங்கநம்-, மன்னையென வே வளரு மந்தரிச வுந்தரியொ டம்புலீ யாடவாவே, யமு தொழுகு சொல்லிமர கதவல்லி யம்மையுட னம்புலீ யாட வாவே. (௧௧)

வேறு.

தான முந்தவ மதுவு மன்பொடு சாரு மின்பமு முதவு
மித், தாயை யன்பொடு சரண மென்றடி சார வொண்கதி
தருவளா-, லென மஞ்சமொ ரிருவர் கொண்டடி யேழு மம்
பர மெழுமையு மேலி யுந்தெரி வரிய தென்றிட வேயெ
ழுந்திடு பரனொடு-, வான முந்தொழு தவன னந்தனி வாழு
கின்றந முழைமையையுன், மாசொ ழிந்திட மயலொ ழிந்திட
வாதொ ழிந்திட வசைமுத-, லான துங்கெட வுளதி னேக்
குட னொட வம்புலி வருகவே, யாயு மின்கனி மழலை நங்கை
யொ டாட வம்புலி வருகவே. (கஉ)

அம்புலிப் பருவம் முற்றிற்று.

---

# ௮-அம்மானைப் பருவம்.

---

தண்டரள முதலான நவமணிக ளைப்பசிய சாம்பூநத
ப்பொன்னிடைச், சார்தர விழைத்தழகு மிகையாச் சொலிக்
கச் சமைந்துபற் பலவன்னமாக்-, கொண்டிலக நிலைவேண்டு
தொண்டருக் கிடர்தரக் குறுகாத வகையாய்மதன், குடை
யான மதியாதி நவகோள்க டம்மைக் கொடுஞ்சிறைசெய்
திட்டதொப்ப-, வண்டொளிகள் பலவாகி யெண்டிசை கட
ந்தொளிருடு வானத்து மூடுருவியே, மருவித் தழைக்கமிளிர்

கைம்மலரி னிற்கொண்டு மந்தார மலர்மாரிபெய்-, தண்டர்
தொழ வாழுமுயர் வீரைநக ரிளமயிலி யம்மானை யாடியரு
ளே, யம்பூமி லிங்கரது பங்கின்மர கதவல்லி யம்மானை யா
டியருளே. (௪)

ஒடிசிலென நீலமர கதமுற்ற வம்மனைக ளுயர்நீல முகில்
கம்மனே, யொளிசெய்த கைம்மலர்க ளுறுமணைத் தோடுலவு
மும்புரிடை யேமற்றுமோர்-, வடிவிலகு மாணிக்க வம்ம
னைக ளிரவியொளி மங்கிட மலைக்கெல்செயும், வான்முத்த
வம்மனைக ளிந்தொளிம ழுங்கவொளி மதியோடு முடுவோடு
மாம்-, படிபலவு மொய்த்துவின் னோர்தனின் பார்வையா
ம் பாணவிசை யாங்கால்கொளும், பக்தரென விலகிடக்
கொந்தளக முலைவுறப் பங்கய மலர்க்கைகளா-, லடிமையெ
ன வெனையாண்ட வீரவன ஆரசி யம்மானை யாடியருளே,
யம்பூமி லிங்கரது பங்கின்மர கதவல்லி யம்மானை யாடியரு
ளே. (௫)

கைக்கருணை கொப்புளித் திடுமமுத வருவிகள் கடுப்ப
வின் போவதுமவை, கலைமதி பிடித்தமு துடைத்தொழுக
லென்பது கடுப்பவரு வதுமம்புபோன்-, மிக்கவிரை வொடு
மிழைக ளிடையுறக் கரிதாய் மிடைந்துமொன் றோடொன்
றுகண், மேவியடி கொள்ளாது தவறுதலு மில்லாது விளை
யாடு மம்மனைகடாம்-, பொக்கமுறு முறையானர் தங்கள்கண்
ணிற்குப் புலப்படா தேமயங்கப், புகைபோலு மொய்த்த

வொளி பொங்கிப் பரக்கவே பூங்கைக ளாற்செய்சனுர்ங்-, திக்குக ளுயிர்க்குமணி நிறைவிரை நகரமலை யம்மானை யாடி யருளே, யம்பூமி லிங்கரது பங்கின்மர கதவல்லி யம்மானை யாடி யருளே. (௩)

சந்தமுட னியாடு மம்மனை பிடிக்கநின் றன்சேடி மார் தேடியே, தாவிப் பரந்தே சுழன்றுபு நாடித் தவித்துச் சலி த்தேங்கவுங்-, கந்தமலர் வண்டுகலை யாதளக முலையாது கலை பணி யசங்காதிவள், கண்களிமை யாதுநுதல் சுழியாது கை வளைகள் கலியாது கைக்கொள்ளுமோர்-, விந்தையெவ ரோ வென்று தொண்டர்க டுதிக்கவும் விபுதர்கள் படித்தோத வும்,விடையவனு முள்ளங் களிக்கவும் முனைநம்பென் விளைக ளொடு பிடியோடவு-, மந்தண ரிறைஞ்சுதிரு விரைநக ரின் கவுரி யம்மானை யாடியருளே, யம்பூமி லிங்கரது பங்கின்மர கதவல்லி யம்மானை யாடியருளே. (௪)

கஞ்சமுறு மிருதாள் மடக்கியுமு ளொருகான் முடக் கியொரு கானீட்டியுங், கவிரேறு டைறந்திறைக் கின்றபவ வருணங்கள் காழ்செய்யு மம்மனையெலாங்-, கொஞ்சியவி கின்றகைக் குங்குமச் சேறுண்டு கோதில்செவ் வானமென வுங்,குறிகண்டு மேசெயுமோர் புன்னகையி னொளியினக் குணை மாறி யிந்தெனவுமிவ்-, விஞ்சைபுரி நின்றனது நடைபஞ்ச மஞ்சங்கள் விண்ணிற் பறப்பதெனவு, மிளிர்வுற்று மென் ணாற்றும் விண்ணுற்று விளையாட வேயிருகை மலர்கொண்

டூ-, யஞ்சலெனை வெனையாளும் வீரைநகர் வாழுமலை யம்மானை யாடியருளே, யம்பூமி லிங்காத பங்கின்மர கதவல்லி யம்மானை யாடியருளே. (ரு)

பல்லாயி ரங்கோடி யண்டங்க ளொக்கப் படைத்தப் படைப்பெங்கனும், பாவுற்ற தோடெனது பாழான மன மென்ற பங்கயத் திலுறிற்குடீ-, நல்லாறிலை தென்றறமு யலுநரைவி னுலகாள நட்புற் றியற்றியந்த, நாட்டினனு பவ மளவை கண்டிவண் டவமுயல நாட்டுதலு முட்குறிகள் போற்-, கொல்லாத விரதமொடு மணிமாதி சித்திபல கொண்டுவா னுறுதிரிவோர், கொள்ளவுயர் வீரைநக ருள்ளவர்வி னொறிகின்ற குளமுறு மனத்திரளுமன்-, பல்லார்க ளெறிதிரளு மொப்பமகிழ் வுற்றமுத் தம்மானை யாடியருளே, யம் பூமி லிங்காது பங்கின்மா கதவல்லி யம்மானை யாடியருளே.

வேறு.

குழலினி தோகழை யாழினி தோவெனக் குயில்கிளி மயில்புறவாங், குருகுகள் கனிவுற மடிதரு வினங்கிளை குளகல ரொடுதழைய-, மழலையி னுரையுட னிசைபல பாடியுண் மகிழ்வொடிறைப்பனமேன், மகபதி யுழுவலுக் கருள்செய முன்னுமின் மணவிசை போலெழுது-, மெழிறர வின்திர னுயரயி ராவதத் தியறரு முத்தினையு, மெழிலிதன் முத்தினை யுப்பரி செனவிட லேய்ந்திட வாலுமுற-, வழ

கொடும் விரைவொடுங் கைகளி லெடுத்தெடுத் தாடுக வம்மனையே, யருணிறை யுந்தனி மரகத மென்கொடி யாடுக வம்மனையே. (எ)

பண்டரு மின்பொடு பாடவொர் சேய்க்குயர் பாலைய வித்திடவோர்,பதியு மமர்ந்தவ ளாடுக வம்மனை பழையபொ ன்னம்பலமுங்-,கொண்டவ ளாடுக வம்மனை காசிகு டந்தை நெல் வேலியுமுக், கூடமு நின்றவ ளாடுக வம்மனை குவலய முந்திசையும்-, விண்டல மும்பில மண்டல மும்பல வெளி களு மப்புறமும், விரவி நிறைந்துயி ருக்குயி ராகியிவ் விரை நகர்க்கரசா-, யண்டர் துதிக்க மகிழ்ந்துறை தற்பரை யாடுக வம்மனையே, யருணிறை யுந்தனி மரகத மென்கொடி யா டுக வம்மனையே. (அ)

பைங்கதி ரைத்தரு செங்கதி ரந்தினை பாரிட நவ்விகள் கைப், பகடிறொ டுந்திரி பொதியையி னின்றிழி பானிகர் வெள்ளருவி-, பொங்கிய டித்தெழு மொண்டுளி யின்றிரள் போமென மன்னிவிணிற், புகையெரி தந்திடு பொரிகளெ திர்ந்திடல் போலநி னம்மனைகள்-, வெங்கதி ரைப்பொரு திங்களை யும்பொர மேலொடு மெண்ணிலவாய், விரைவொடு சென்றுகை வருவது கண்டிட வீரவ னன்னகரெம்-,மைங்கர னைத்தரு மந்தரி யம்பிகை யாடுக வம்மனையே, யருணிறை யுந்தனி மரகத மென்கொடி யாடுக வம்மனையே. (௯)

குழைக ளசைத்திட வொளிகள் பரந்திடு கோல்விழி யஞ்சனமென், குளிர்மலர் சிந்திட வளகமு லைந்துயர் கோகில மும்புகழு-, மழலைமொ ழிந்திடு மிதழ்மது சிந்திட வாணகை யின்கதிரா, மணிகளி லங்கிட வியர்வமு தந்தரு வாசம்வி னுங்கமழ-,விழைதரு குஞ்சர முகமக னுங்கதிர் வேலவ னுங்கனிய, விதவித நின்செய லெனதிரு கண்கொள விரையி லின்பொடுவா-, மழலிய சங்கர னிடமுறு சங்கரி யாடுக வம்மனையே,யருணிறை யுந்தனி மரகத மென்கொடி யாடுக வம்மனையே. (௧௦)

வேறு.

பத்தரு மும்பரு மிந்திர னுக்கமழ் பங்கய னும்மரி யோடுதொழும், பச்சமி கும்பத பங்கய மின்புறு பண்பின ருள்ளுற வாகிடுமோர்-, சித்தச னுண்பொடி யென்பம லர்ந்திடு செங்கணன் மன்னுக ணேயரிடச், சிற்பரை யுன்றனை யென்றனு ளங்கொடு சிந்தனை செய்யவி சாலமுறு-, புத்திவ ழங்கிய பைங்கிளி யம்பிகை பொங்கர்வி ணண்ணுறு விரையினற்,புத்தமு தங்கனி யும்படி விஞ்சையர் புந்தியொ டின்னிசை பாடிடவே-, தத்தையி னின்சொலை வென்றவி ளங்கொடி சங்கரி யம்மனை யாடுகவே, சத்திச வுந்தரி யந்தரி சுந்தரி சங்கரி யம்மனை யாடுகவே. (௧௧)

அம்மானைப் பருவம் முற்றிற்று.

---

# ௯-நீராடற் பருவம்.

முன்போரன மறியாத கங்கையை யறிந்தநனை மொ
ய்க்கின்ற வெகினங்கள்போன், முகிழ்முலைகொ ளபிராணி
யபிராமி யாயபலர் முன்புமொய்த் தம்மம்மவென்-, றன்
பொடு கலன்றுகில்க ளின்பேழை கான்மர மடப்பைபல கா
ளாஞ்சிக, ளருகெடுத் துச்சூழ்ந்து கைகட்டி வாய்பொத்தி
யாடைக ளொதுக்கி நின்றுன்-, றன்பணிகள் செய்யநறு
னனகல பச்சேசறு தலைமைபெறு சேடியரெனுந், தனதுநா
ராயணிகள் கைக்கொருவர் மெய்க்கொருவர் தாட்கொருவ
ராய்நின்றுமே-, பொன்பொலிபு மெய்தொட் டிழைப்பவிவ்
வீரைநகர் பொங்குபுன லாடியருளே, பூமீசர் தமதுதிரு
வாமமர கதவல்லி பொங்குபுன லாடியருளே. (க)

கையுற்ற வளைகள்கற் கடகங்கள் பவளங்கள் கங்கணங்
கள்[illegible]ன்னியாழ், கடலொத தொலிக்கக் கழங்காடு கையினு
கிர் கனிவுற்ற வொளியாடுமோ-, மையுற் றிலங்குங் கழங்
கொ மொய்த்தமதி பழுதக் கழங்கென்பவே, யடிமைபெ
ற சேடியரோ டொத்துவிளை யாடுநல் லன்புடையப் நீயம்
மைகை-, மெய்யுற்ற விளையாட்டி லுலுற்ற வியர்வொழிய வே
யத்தர் தலையுற்றதால், விளைவுற்ற பகையினை யொழித்
தினங் காமருவு வீரைநகர் சூழ்கின்றவிப்-, பொய்யற்ற மெ
ய்யுற்ற பொருநையாங் கங்கைநற் பொங்குபுன லாடியரு
ளே, பூமீசர் தமதுதிரு வாமமர கதவல்லி பொங்குபுன லாடி
யருளே. (உ)

எண்ணுமக் கருமங்கள் சித்திபெற வுந்தொலைவி லினை
யில்பவ முந்திரவு, மீழைபெறு வயிறுவலி குட்டங்கள் கு
றைநோவொ டெண்ணில்பல நோய்தீரவும்-, மண்ணவரும்
விண்ணவரும் வந்தாடு தற்கென்று மணியுற்ற தளிமுன்புற,
வருவித்த வரனருளை யொப்பவிவ ணமரா லுவந்தாடி னு
ளென்பவை-,வெண்ணிறக் குருகோடு செந்நிறக் கமலங்கண்
மென்றுவளை தண்சைவல, மிளிர்குமிழி நமைநிந்தை செயு
மென்று னவயவ மேன்மோதி டாவாதலின்-, புண்ணியத்
திருவீரை நகரின் றிருத்தடப் பொங்குபுன லாடியருளே,
பூமீசர் தமதுதிரு வாமமர கதவல்லி பொங்குபுன லாடியரு
ளே. (௩)

அன்பொடுனை வாவென் றழைக்கின்ற கைக்கருணை
யம்புயத் தாற்காட்டியுன், னழகுகண் டௌவியமு றேமென
ன்ப துற்பல வருட்கண்க ளாற்காட்டி நின்-, றன்பெருமை
நங்கொழுந ருன்றனை மணம்புரித லைக்காண்ப வேகுதுமுனி,
தவத்தா லுணர்ந்திட்டே னென்பதைக் குமுதவாய் தனைவி
ரித் துக்காட்டியே-, நின்பெயர்கொண் மணிமேனி போலப்
பசந்துதனை நேர்ந்தவர்த மெய்பாவமு, நீக்குமளி யோடுற்ற
விவ்வீரை நகருற்று கேயரொடு விழுவாடுமோர்-, பொன்
பெருகு தெப்பத் திருக்குளச் சிவகங்கை பொங்குபுன லாடி
யருளே, பூமீசர் தமதுதிரு வாமமர கதவல்லி பொங்குபுன
லாடியருளே. (௪)

சேப்புறு திணைவிழிக ணீர்க்கொளா துயர்சிரசு சிக்குறு
தெழிலளகமெய், திரையாது வறளாது குடையுமெவர் கட்
குமொரு செழுநகரி லோரப்பினின்-, மூப்பினுட னுயர்ம
னைவி யோடாடி யிளமைகொடு முன்வந்த வன்புடையர்
போனன், முதிர்வுபவ மயனீக்கி யிளமையொடு ஞானமு மூட்
டுமிக் குளம்வாழுமாக்-, காப்பினோ டாணைந்து திலநெய்யா
றபிரிழுது கனிகன்ன லின்சாறுதேன், கானுற்ற வைந்தமுத
மிளநீர்நன் மஞ்சனங் கணவனொடு மிவ்விரைபிற்-, பூப்பரா
வுறவாடு மாடலென வேகொண்டு பொங்குபுன லாடியரு
ளே, பூமீசர் தமதுதிரு வாமமர கதவல்லி பொங்குபுன லா
டியருளே. (௫)

சலதரத் தினைவென்ற குழலினுக் கஞ்சியலை சைவல
முறுவங்கயல்கள்கட், சரமூண்டு துள்ளிடுங் கெளிறுகள்கை
விரல்களாற் சூழ்ந்துதரை யோடுறும்வரா-, விலகுநற் கால்
கட் கிடைந்துபாய்ந் திடுமடிகட் கேங்குக மடம்புமிடு,
பிணைக்காலின் முட்டுக் குடைந்தலவன் மட்குழி யிடுக்குற்
றொளித்தேகுமா-, வலைதரக் குழல்விரித் தாணை மலர்த்தி
மெய் யலைவுற்ற குங்குமமதா, லந்தடஞ் செம்படா மாகம
ணம் விண்கமழ வருமேனாடு நீவாழுமோர்-, பொலனிறைநற்
றொளிர்தருமிவ் விரைநக ரின்பொய்கை பொங்குபுன லாடி
யருளே, பூமீசர் தமதுதிரு வாமமர கதவல்லி பொங்குபுன
லாடியருளே. (௬)

வேறு.

கங்கைய முனைசரச் சுவதிந ரிருமதை காவிரி குமரி யுநீள், கனிவுறு விருத்தகோ தாவரி நதியொடு கவின்மிகு கிட்டிணியுங்-, துங்கபத் திரையுமொர் சிந்துவு நாமெனத் தொல்குறு முனிமலையிற், றோன்றிநின் றனைவல மாங்கரு ணையினுனைத் துணைகொள வருமாபோற்-, சங்கலை கரமொடு பண்மலர் தூவிநின் டருபொலித் துதியொடுநீ, நயையினொ டுறையுமிவ் வீரவ னன்னகர் தனைவளர் தெழிலொடு நீர்ச்-, சங்கம மாய்வரு தாமிர பருணியின் றண்புன லாடுகவே, தனைநிகர் கோமள மரகத நாயகி தண்புன லாடுகவே.

பற்குனி கோமதை கெண்டகை பொன்முகி பழையநா ராயணிகள், படிதிகழ் கருணையெ லாமென தென்றுயர் பயனிறை கருணையெனுஞ்-, சொற்கொளு மஃதென வொருநதி யின்றுவின் டொழுகிருப் புடைமருதூர்க், றுறையின்முற் பிரிமகட் காதலொ டீணைதலிற் றுணையுறு சங்கமமாய்-, வற்கலை முனிவர்க ளருந்தவ முயலுநீ வாழ்தல மெனுநினைவால், வானவர் புகழுமிவ் வீரவ னன்னகர் வளைபொரு கைத்துறையிற்-, றற்கர மான்மழு வேனிட மாருமை தண்புன லாடுகவே, தனைநிகர் கோமள மரகத நாயகி தண்புன லாடுகவே. (௮)

பண்டொரு பாவி மடிந்துயிர் போயுடல் பாரி லழிந்துபனுட், பழகிய தானறு ணென்னையொர் ஞாளி பரிந்து

கடித்திழிவாய்க்-, கொண்டருநீள்கரை யேகிட வக்கறு
கூறெயிற் றிற்றவறிக், குளிர்தருநீரிடை வீழமுன் னுருவு
கொடுத்தருள் விடுதவித்-, தண்டுறை தோறு மகிழ்ந்தித
போற்பல தனியருள் புரிந்தேகின், றனைவல மாகிடு மன்பு
நிறைந்துயர் தண்பொருநைப்பெயராய்த்-, தண்டலை சூழு
மிவ் விரைநன் னகர்வரு தண்புன லாடுகவே, தனைநிகர்
கோமள மரகத நாயகி தண்புன லாடுகவே. (கூ)

வேறு.

கவிரு முலகிற் கயிலையெனுங் கமழ்கா லாரு மலையு
நதிக், கயலா லழக தோங்கிடவே கவிவார் பாவ லர்செயு
மோர்-, தலமே வருணாற் றிசைதரவந் தனிவே யாரு நகர்
குணமாக், தரவா யிடையில் வாழ்ந்திடுமா தவமார் விரை ந
கர் முனிவர்-, மலமா றியபொற் குடந்திமக் கிரம்வா யோதி
மனுவழியார், மணநீர் மையிறை யோர்ந்துதவ மகிழ்வா
யாடு மனதொடுநீ-, பொலனார் பொருநைத் துறைதெரியும்
புதுநீ ராடி யருளுகவே, புகழ்சேர் மரக தாம்பிகையே
புதுநீ ராடி யருளுகவே. (௧0)

கயலோ சிறிய தாஞ்சிலையோ கடுகே யருளோ மலை
யெனச்செய், கருணை நிறைய மோங்கியநீ கருத்துக் கிசைந்த
வுனையலையோ-, வயலே திரிய நான்மறையோ வடியே னுனு
முகவலமோ, வருளா தொழியி னுன்றமியே னருள்வா யாக

வெணுமடியார்-, மயலை கெடுத்துப் புரந்தருள வந்தே
வீரை நகரமலன், மனமோ டிடமு மருவுமுயர் மணியே
நான மணமொழுகும்-, புயனே ரளக மாங்குயிலே புதுநீ
ராடி யருளுகவே, புகழ்சேர் மரக தாம்பிகையே புதுநீ
ராடி யருளுகவே. (௧௧)

நீராடற் பருவம் முற்றிற்று.

---

# 10. ஊசற் பருவம்.

---

அர்ணுட லைக்காலு மரவுனது தனியூச லாடறனை யுங்
காண்குவா, னடிநெறியின் வருமுன்பு வந்தமணி யின்கதிர்க
ளாமென வொளிர்ந்துனதடி-, விரலொக்க வென்றுணண்
போடுற்ற தென்னவே மேவுபவ ளக்கால்கண்மேல், வெண்
கதிர்க டருகயிலை மலைமாட மெனவயிர மேவுற்ற நீள்விட்
டமா-, வரமுற்ற நிலவொன்று கதிரொப்ப விலகின்ற மணி
நித்தி லத்தொடர்களில், வலனுக்கு முற்றவர யம்போலு
மிடமாக வாய்த்ததென வேபீடிகைப்-, புரமுற்று மாணிக்க
மொளிர்தர வமைந்திலகு பொன்னூச லாடியருளே, புலவர்
புகழ் திருவீரை நகரின்மர கதவல்லி பொன்னூச லாடி
யருளே. (௧)

தானைபெழு தன்கதி ரெனப்பவள வொளிர்கால்க டமூ
வுற்ற தற்கெதிரியாச், சசிதரள வந்துகக் கதிரெனலு மன்றி

புயர் தனிவயிர விட்டத்தினும், வாறொளி நிகர்த்ததெனு
மௌலியமொ டாதவன் வனசமல ருஞ்சீறடி, மருவுபொற்
பீடமுறு மணிகளா ஞொனென்ப வளரொளிசெய் மாணிக்க
மா, ரூணமறு பொற்பலகை மீதுற வமர்ந்துலக வுயிர்முழு
து மாட்டுவதுன, தொருவிரலி ஞெலென்ப துணர்விலை
னுணரவுனி யொள்ளளக முகில்பரவுதல், போனவை பொ
ழிந்திலக நின்கருணை யாடலிற் பொன்னூச லாடியருளே,
புலவர்புகழ் திருவிரை நகரின்மர கதவல்லி பொன்னூச
லாடியருளே. (உ)

அவனிமுழு துந்தழைய முன்பொரு தலத்தாற் றறங்
கண்முழு துங்கால்களா, வாறங்க மேன்மாட நான்மறைக
ளாந்துகம தன்புகழ்க ளேயொளிகளா, நவிலரிய தாம்பிரண
வம்பீட மாகவதி னண்ணுபொரு ளாத்தங்கியே, நாற்பத்தி
ரண்டுலக் கத்திரட் டியதான நல்லுயிரெ லாமாட்டலே,
புவமையறு கருணையி னசைத்தாட் லாயாடு மொப்பினின்
றன்னெழிலினை, வரகபதி விள்ளநாப் பல்லா யிரம்பெறினு
முரனுறுவ தென்வென்னாநு, புவனமது புகழவே பூமீசர்
மகிழவே பொன்னூச லாடியருளே, புலவர்புகழ் திருவிரை
நகரின்மர கதவல்லி பொன்னூச லாடியருளே. (௩)

உரிமைபெறு நீபுனையு மணியிணைழில் கண்மச ரோர
ரவ முந்தேய்க்கிடு, மொருமதியை யுங்கொள வியன்ற
செய லோவென்றெ வுலகர்களு மேபாடநீ, டிருண்முகில்

வகிர்ந்திரவி மதிபுடை பொதுங்கவிட் டின்குஞ்சி னுக்கா டரு, னெதிரினின் றன்பொடு பயிற்றரவ மென்னல் விசை வுகொள மைக்குழலினி-, லரவமணி யைந்துற்ற தலைகொ ண்ட பொற்பணியு மழகிய மணிச்சுட்டியு, மாதித்த வணி யும் பிறைப்பணியு மாடவுய ரன்பர்க டுதித்தாடவே-, பொ ருளுடைய மகளிர்குழு வின்பினொ டசைத்தாட்டு பொன் னூச லாடியருளே, புலவர்புகழ் திருவீரை நகரின்மர கத வல்லி பொன்னூச லாடியருளே. (௪)

மழுவுமரி ணமுமாட மதிநதியு மாடநின் மகிழ்நாநட் புடனுடனீண், மாலாட வயனுட மகபதிவி னவராட மலை யாட மகியாடயா-, மெழுமிசை தெரிந்துகலை மகளிர்கள் பழம்பாட லின்பொடு படித்தாடவா, விந்திரைக ணின்மே னிநவியா தசைத்தருகி னேர்மகிழ்வு கொண்டாடவ... குழலலர் சொரிந்தவழி குணசுட மளந்தளிகள் கொங்... பரந்தாடமின், குழைகளொளி ரவிபோலு மாடவாரத்... யல் கொங்கைகள் புரண்டாடவே-, புழுகொடரு ளொ... முக நிலவுநகை யாடவே பொன்னூச லாடியருளே, புல... புகழ் திருவீரை நகரின்மர கதவல்லி பொன்னூச லா... யருளே. (...

தித்திமத் தளதாள மொத்துக் கலிக்கவுந் திகழ்மத... கிளாடவுஞ், சிரடியர் முன்னின்று மூவர்தமி ழும்பெரி... திருவாச கச்சுருதியுஞ்-, சித்தமொத் தருகவுயர் திரு...

சைப் பாவுந் திருப்பலாண் டுந்தொண்டர்தந், திருப்புரா
ணமுமாதி முத்திப் பழம்பாடல் சிர்ப்பண்ணி னொடுபாடவு
ஞ்-, சத்தமெய்த் திருவேட வித்தகர் துதிக்கவுஞ் சூழ்ககன
மிசைவிஞ்சையர், துந்துபி முழக்கவுங் கட்கருணை சிந்தமனை
தொடவைத்த வொருகாலின்மேற்-, புத்தமுத மொத்தயா
ழாமெமொர்கை நிமிர்த்திலகு பொன்னூச லாடியருளே, புலவர்
புகழ் திருவீரை நகரின்மர கதவல்லி பொன்னூச லாடி
யருளே. (௬)

தாமவங் கோதைபனி நீர்களப நானங்க டன்புகழெ
ணக்கமழவிற், றனிநுதலி னற்றிலக மிலகவருள் கட்கடை
ததும்பவிணை யாடியிடைமே-, னீமசெங் கேழ்க்குமுத மொ
டுநில மலர்ந்தவென நேர்கபோ லமும்வாயுநன், னீனாசி யுந்
திகழ வாரவட மார்புருள நிறைகாஞ்சி யின்கதிரெனச்-,
சேமமென வேயுலகர் தங்குடி யெனப்பரவு திருவயிற் றிள
ரோமநேர், திகழவுறை யொடும்பெ னக்கால்க ளிருபிறை
கள் சேர்ந்தாங்கு பூந்தாண்மினப்-, பூமிவிங் கேசரது வாம
பங் கின்சொல்லி பொன்னூச லாடியருளே, புலவர்புகழ் திரு
வீரை நகரின்மர கதவல்லி பொன்னூச லாடியருளே. (௭)

ஓதியறி யேன்கல்வி யுண்மையறி யேனின்ற னொப்பி
ல்புக ழறியேனல, மொன்றேனு மறியாத வென்பனுவ லுங்
கொண் டுவந்தெனையு மாட்கொள்ளுமோர்-, பாதிமதி சூடு
முயர் பூமீச ருவமுமொரு பங்குக்கொள் பரைசத்தியே,

பத்தராக மோடுபுறம் வேதவக யோடுதலை பற்றிநிற் பாளெ
னுமவ்-, வாதிமறை கேட்டரிய நாதமுடி வெசருவ வகிலா
ண்ட மாய்நின்றுமே, ராதார மற்றிடுநி ராதாரி யாயாக்கு
மாதார மாய்நின் றிடுய-, போதநிறை வாணபரி பூரணி புரா
தனீ பொன்னூச லாடியருளே, புலவர்புகழ் திருவிரை நக
ரின்பர சதவல்லி பொன்னூச லாடியருளே. (௮)

எனதுபொரு ளெனநிறைவி லென்றெறந்த வுலகர்களு
மேசொந்த மாக்கொள்ளவு, மிகககெக ளுதாடி யெங்குமெவ்
வுயிருமா யெய்ந்தவரு ளோடொடைகளையுன்-, றனதுபொரு
ளென்றென்ற வுள்ளினந் மதிகொன்றை சடைகொண்டு
விடையூருமோர் கன்பதி யெனப்பெற்ற பூமிலின் கேசமொ
டு தங்கும் நிருத்தசைசைமயா-, ஓனதுபொரு ளாகின்ற வெ
ன்னையுடலாவிபொரு ளொடுகொள்ளு வாயென்றுநா, ஞற
வாட வுரியவளு மாகியெனை யாட்கொண்டவ் வுடலாவி
பொருளோடுநற்-, புனலிற் றனைமேல கலந்தவளு மானநீ
பொன்னூச லாடியருளே, புலவர்புகழ் திருவிரை நகரின்
மரகதவல்லி பொன்னூச லாடியருளே. (௯)

அன்பினொடு நீகாக்கு மவர்களைநற் காக்குநின் றாழ்கொ
ழுகு செங்கீரையோ, டரியதால் சப்பாணி கொட்டியே
முத்தமு தன்னொடு வராந்தவணியா-, இன்புற நடந்துவந்
தம்புலியை யக்கைகொடு சைந்திட வழைத்தம்மனை, பிளை
யவளு நாணிக் கனிக்கவிரை யாடிநல் லெழிமேலொடு நீராடி.

யுன், றன்பெருமை யறியாத நாயினேன் உள்ளினி தருளிரு ணைபயாலோதுமித், தமிழினிற் பிள்ளையேன விளையாடு மன் பதுதழைத்தாக்கு மதியோடுசெம், பொன்புரை கடுக்கை யணி பூமீசர் பங்கிலே பொன்னூச லாடியருளே, புலவர் புகழ் திருவிரை நகரின்மரகதவல்லி பொன்னூச லாடியரு ளே. (௧0)

உலகெலாம் வாழவயல் வருடமுப் போகமுற வொருமதிபின் மும்மாரிக, ளுதவமன் னவர்கோல்கள் வாழமகம் வாழமறை யுற்றமுனி வோர்வாழநீண், டிலகுமா லயனிந்திரன்சுரர்கள் வாழ்விவ ரில்லினங்க ணிறைவாழமற், றெங்குமங் கலமாக யாவர்களும் வாழவே யியல்செய்த தென்பவணியுட், டிலகமா மென்பவுயர் தெய்வநா யகமென்ப திருவென்ப தங்கொழுநராய்த், திகழ்கின்ற பூமீசர் செயல்செய்து வாழநற் செயமுற்ற தென்பவத்தப், பொலமிளிரியொடிலகுமணி மங்கலம் விளங்கவே பொன்னூச லாடியருளே, புலவர்புகழ் திருவிரை நகரின்மரகதவல்லி பொன்னூச லாடியருளே. ஊசற் பருவம் முற்றிற்று. (௧௧)

---

ஆகப் பருவம் பத்துக்கு விருத்தம் ௧௧௩.
பாயிரச் செய்யுள் ௫.
ஆகச் செய்யுள்—௧௧௮.
பிள்ளைத்தமிழ் முற்றிற்று.
மரகதவல்லியம்மை திருவடிகளே சரணம்.



உ

குமரன் துணை.

# திருவிரை மரகதவல்லி

# இன்னிசைப்பா மாலை.



## காப்பு.

### கட்டளைக் கலித்துறை.

சீர்கொண்ட தென்பொதி யைக்குண வீரைத் திருநகரிற்
கார்கொண்ட கூந்தன் மரகத வல்லி கழலடிகட்
கேர்கொண்ட மாலை யியம்பத் துணையெனக்கிங்குவெள்ளைப்
பேர்கொண்டவோர்கொம்பினேரம்பன்கஞ்சப்பெருங்கழலே

## நூல்.

### வெண்டளைக் கோச்சகக்கலிப்பா.

அன்னமலி வீரை யணிநகரி ஞருமுயர்
சொன்னமலை வில்லியிடந் தோய்ந்தே யுலகனைத்துந்
தன்னருளிற் காக்குந் தயையினெனைத் தன்னடியின்
மன்னவருள் செய்வாய் மரகதமெய்ந் நாயகியே (க)

தாயையொழித் தியாரே தாரணிதனிற் காப்பவர்தாஞ்
சேயையொழித் தியாரைத் தெரிந்திங் கருள்வாளென்
பேயையொழித் திங்கே பிறங்கினுநீ பெற்றனையென்
மாயையொழித் தாள்வாய் மரகதமெய்ந் நாயகியே. (௨)

அஞ்சிலகும் பூதத் கலித்தியமற் றோர்க்கருளும்
பஞ்சிலகும் பாதப் பணிநித்தி யக்கருள்வாய்
நஞ்சிலகுங் கண்டனுழை நாண வவனிடங்கொண்
மஞ்சிலகுங் கூந்தன் மரகதமெய்ந் நாயகியே. (௩)

வான்மருவுஞ் சோலை வளவிசை நன்னகரி
ஞான்மறுகக் கண்டிருத்தல் ஞாயமுண்டோ பொன்மலர்த்து
தேன்மருவுங் கொன்றைச் செறிசடையம் பூமீசர்
மான்மருவும் பங்கின் மரகதமெய்ந் நாயகியே. (௪)

வெஞ்சமருன் மேவுகின்ற வினையடி வேண்டியுன்றாட்
கஞ்சமரு மோவாக் கழுதுநிகர் வேலொளிநுந்
தஞ்சமறுத் தால்வேறு தஞ்சமுண்டோ வென்றனக்கென்
வஞ்சமறுத் தாள்வாய் மரகதமெய்ந் நாயகியே. (௫)

உன்னைத் தழுவா தொழிந்திங்கு மண்ணுறுமொண்
பொன்னைத் தழுவும் புலையனெனைப் போற்றுவையோ
தன்னைத் தழுவாத தாயிலையாற் றற்பரனு
மன்னைத் தழுவும் மரகதமெய்ந் நாயகியே. (௬)

பங்கமென வோராத பாழ்வினையே னாயிடினுந்
துங்கமென் னின்னைத் துதிக்கவைத்தல் போன்றருள்வாய்
புங்கமென மாயனைக்கைப் போதெடுத்தான் பாலினருள்
வங்கமென வாய்த்த மரகதமெய்ந் நாயகியே. (எ)

தேன்மொழியுஞ் சோலைத் திருவிரிஞ்சை யம்பதியி
னூன்மொழியுஞ் சொற்க ணறவாகக் கொண்டருள்வாய்
நோன்மொழியார் தங்களுள்ளி னுண்ணறிவாய்நின் றருளும்
வான்மொழியு மன்பார் மரகதமெய்ந் நாயகியே. (அ)

நொந்துபணிந் துன்றனது நோன்கழலே நோக்குமெனைச்
சிந்துபணி வென்ற திருக்கண்கள் பின்னுகுழல்
பந்துபணி கொள்ளும் பயோதரங்க ளோடெழுந்து
வந்துபணி கொள்வாய் மரகதமெய்ந் நாயகியே. (கூ)

இணக்கமுட னின்றாளை யேத்தி யிறைஞ்சுதற்கோர்
வணக்கமறி யாதேன்றன் வன்குடம்பைக் குண்ணிறைந்த
பிணக்கமறுத் தாளப் பிறங்குந் திருமலர்த்தார்
மணக்கவரு வாயே மரகதமெய்ந் நாயகியே. (க0)

காழ்த்தகண் கருணைக் கழலென் றலைசூட்டிப்
பாழ்த்த பிறவி பறியவெனைப் பார்ப்பாயோ
சூழ்த்தல் விரும்பித் தொழுதுநின்று வானோர்கள்
வாழ்த்த வருளும் மரகதமெய்ந் நாயகியே. (கக)

ஏழை யெனக்கின் கிரங்கியருள் வாயடர்ந்து
வாழை வளரும் வளவீரை மாநகரிற்
பேழை வயிற்றுப் பெருமானும் பேணுமெழின்
மாழை மலர்த்தாண் மரகதமெய்ந் நாயகியே. (கஉ)

விண்ணினுக்கு மண்ணினுக்கு மிக்கவருள் செய்யுமுனைத்
கண்ணினுக்குக் கண்ணாகக் காணப் பெறுவேனோ
வெண்ணிநிற்கு மன்ப ரிதயத் திருணீக்கு
மண்ணினிற்றென் வீரை மரகதமெய்ந் நாயகியே. (கங)

கண்ணா னுடனுதித்த கட்ட ழகென் கண்ணார
நிண்ணயமாக் கண்டுதொழ நேர்ந்துநின்று லாகாதோ
வுண்ண வுடுக்க வுதவியருள் வீடுதவும்
வண்ண மலர்த்தாண் மரகதமெய்ந் நாயகியே. (கச)

இன்னுங் கருப்பத் தியற்றினையே லுன்கழல்க
ளென்னுங் கருத்தங் குறுமோ வொழிந்திடுமோ
வென்னுங் கருத்தா லிரங்கேதற் கிரங்காயோ
மன்னுங் கருணை மரகதமெய்ந் நாயகியே. (கரு)

போற்ற வறியாப் புதல்வரையுந் தாயானோ
ராற்ற வருட லழகென் றறியாயோ
சீற்ற வளத்துச் சிறியேன் மயற்பிணியை
மாற்ற வருவாய் மரகதமெய்ந் நாயகியே. (கசு)

ஆதார மற்றே யலைந்தின் கலுத்துனது
பாதார விந்தம் பணிந்தே பரவியசொற்
காதார வேற்றுக் கருணைக் கடனேக்கான்
மாதா வெனைக்கா மரகதமெய்ந் நாயகியே (கஎ)

காணவர்கள் கூட்டாய்க் களித்துக் கழிந்தேனைத்
தானவர்கள் கூட்டந் தழுவாத தன்னடியா
ரானவர்கள் கூட்டத் தணைவித்தா லாகாதோ
வானவர்கள் வாழ்த்து மரகதமெய்ந் நாயகியே. (கஅ)

அங்கைதலை யேற்ற வறியே னறிந்திடவென்
சங்கையறுத் துன்று டலையளித்தாற் றூக்காதோ
செங்கை யனமே திகழ்மயிலே மாறாத
மங்கை வடிவே மரகதமெய்ந் நாயகியே. (கக)

போத மொழிந்தேனைப் போதமுற வென்னகத்தி
னேதமொழிக் காண்டாலி யாவ ரிகழ்வாரோ
வேதமொடு விண்ணும் வியக்கும் புகழுடைய
மாதவரு மேத்து மரகதமெய்ந் நாயகியே. (உ0)

அணிக்குட் சிறந்த வணியென் றடிக்கோதும்
பணிக்குட் பரிந்தாண்டாற் பாரோர் பழிக்காரே
பிணிக்குட் பெரிதாம் பிறவிமருந் தாகியொளிர்
மணிக்குட் பெரிதா மரகதமெய்ந் நாயகியே. (உக)

பாட்டு மனக்கப் படிக்குமன்பர் பாநின்று
கேட்டு மகிழ்ந்து கிருபை யளிப்பதினீ
நாட்டுபுக ழின்மழலை நற்சொற் சிறப்பெனவென்
மாட்டு வருவாய் மரகதமெய்ந் நாயகியே. (௨௨)

இரந்தங் கழல்பாவி யேத்தே னெனினுமென்பா
லூரந்தங் கியமறலி யோடிவரி னங்குனது
நரந்தங் கமழு நளினமலர்த் தாள்பரவும்
வரந்தந் தருள்வாய் மரகதமெய்ந் நாயகியே. (௨௩)

கருவார்த னீக்கக் கருதே னெனினுமெனைப்
பெருவாதி னேமன் பிடிக்கவரி னங்கேநான்
வெருவா துனைத்துதித்து வேண்டவர மிங்கருள
வருவா யெழிலாய் மரகதமெய்ந் நாயகியே. (௨௪)

உலையின் மலிதீ யுறவிழித்தங் கேகமெனை
வலையின் மடிக்க வருவான்கொ லென்றுவலைக்
கலையின் மயங்குங் கலக்க மொழித்தருள்வாய்
மலையின் மகளா மரகதமெய்ந் நாயகியே. (௨௫)

வெல்ல முடியாமல் வினைக்குட் கிடந்துழன்று
சொல்லமுடி யாதடைந்த துன்பங்கள் போதாவோ
வல்லலொழித் தெற்குன் னடிக்கமலப் போதளிப்பாய்
வல்லபைகோன் றுயா மரகதமெய்ந் நாயகியே. (௨௬)

களவார்ந்த கந்தைக் கருத்தோடிக் காசினியி
னளவார்ந்த தாகா தலைந்தேனை வாவெனநின்
றளவார்ந்த வாய்க்குமுதத் தாண்மலரக் காண்பேனே
வளமார்ந்த வீரை மரகதமெய்ந் நாயகியே. (௨.௭)

கல்லாது நின்றுள் கருதாதே ஞுயிடினு
நல்லாரி லாக்கி நலமுழுது நல்குவையே
பொல்லாத சேய்க்குமனை புத்தி புகட்டுவளால்
வல்லாளின் மிக்க மரகதமெய்ந் நாயகியே. (௨.௮)

எள்ளலறக் கல்லா வியலினே னென்னினுநா
னுள்ளமொடுன் றாளே யுயர்துணையென் றேத்தினனூற்
கள்ளமொழித் தாள்வாய் கயமுகற்குங் கந்தனெனும்
வள்ளலுக்குந் தாயா மரகதமெய்ந் நாயகியே. (௨.௯)

மாண்டழிவார் தம்மை மதியே னினதடிப்பூ
வேண்டளியே னெற்குன் விமல நிழலளிப்பாய்
பூண்டழையு மேனியொடு பூமியர் பாலமரு
மாண்டழையும் வீரை மரகதமெய்ந் நாயகியே. (௩.0)

கைய ரொழுக்கக் கசடர் மதங்கலக்கு
மைய லொழித்தெனைத்தன் மாமலர்த்தாட் கன்பளித்த
பையரவப் பூணர் பரன்பா லுனைமறவேன்
வையமகிழ் வீரை மரகதமெய்ந் நாயகியே. (௩.௧)

மரகதவல்லி மலரடி வாழ்க.

இன்னிசைப்பாமாலை முற்றிற்று.

---

குமாரன்றுணை.

# பிழைதிருத்தம்.

| நூற்பெயர். | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| சுசிந்தைக் கலம்பகம் | ௨ | ௧௧ | புகழ்புனியா | புகழ்முனியா |
| ,, | ௩ | ௧௧ | பழிபடு | வழிபடு |
| ,, | ௩ | ௨௰ | வானதுநீயே | வானவநீயே |
| ,, | ௫ | ௧௩ | ... | பதினைந்தடியாசிரியச்சுரிதகம், |
| ,, | ௧௧ | ௪ | தன்பொடு | தின்பொடு |
| ,, | ௧௩ | ௨௧ | முள்ளென | முள்ளென் |
| ,, | ௧௫ | ௬ | னரர்மனமே | னரர்மணமே |
| ,, | ௧௫ | ௧௫ | வேலென | வேலென் |
| ,, | ௧௬ | ௧௪ | தோளென் | தோளன் |
| ,, | ௧௮ | ௨௰ | மூன்னன்மை | மூன்னன்பை |
| ,, | ௨௨ | ௨௰ | வென்றனை | வொன்றனை |
| ,, | ௨௩ | ௧௧ | பாகப்பல் | பாப்பல் |
| ,, | ௩௬ | ௨ | கும்பரந் | கும்புரந் |
| ,, | ௪௪ | ௧௨ | நவின்றிடனே | நவின்றிடினே |
| ,, | ௪௬ | ௪௧ | வெண்ணிந்து | விண்ணிந்து |
| ,, | ௫௪ | ௮ | புற்றவமே | புறறவமே |
| ,, | ௫௭ | ௧௬ | யருளனைபோய் | யருளனையோய் |
| சுசிந்தை மும் மணிமாலை | ௬௧ | ௧௯ | நக்கா | நட்கா |
| ,, | ௬௩ | ௯ | பிணிற்கன் | பிணிர்க்கன் |
| ,, | ௭௧ | ௮ | யோய்மான் | யோயம்மான் |
| ,, | ௭௧ | ௧௫ | ... | ஆசிரியப்பா |
| ,, | ௭௩ | ௨ | ஒருநகால | ஒருநால் |
| ,, | [illegible] | ௨௧ | கலக்கு | கலக்குண் |
| ,, | ௭௮ | ௮ | காத்தான் | காத்தாற் |

| நூற்பெயர். | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| மருங்கை ஒரு திணைமாலைக் கருத்து. | கூரு | ரு | கார்புதூர் | காற்புதூர் |
| மருங்கை ஒரு திணைமாலை | கூசா | அ | மலாக்கை | மலர்க்கை |
| ,, | கூசா | க௨ | கவ்வுருமு | கவருமு |
| ,, | க௦உ | [illegible] | பனவிரண்டார் | பன்னிரண்ட |
| ,, | க[illegible] | உ[illegible] | வைரயா | வரையா |
| வீரைக்கலப் பகம் | | | | |
| ,, | க௦அ | உ | தெருவிழ் | தெருவிற் |
| ,, | கஙள | உ | | |
| ,, | கஙக | உ | புததலர் | புத்தலர் |
| ,, | கருக | எ | யாரந்தம | யார்ந்தம |
| ,, | கசக | சா | புறியவர் | மறியவர் |
| | | | பூதமும | பூதமும் |
| மரகதவல்லி யம்மையின் பிள்ளைத்தமிழ் | கஅய | க | காப்புப்பருவம் | முதலாவது காப்புப்பருவம் |
| ,, | ககூக | கரு | செங்கீரை | 2. செங்கீரை; |
| ,, | உஉஉ | கு | னென்னல் நீ | னென்னநீ |
| ,, | உஙக | உக | ளி | ளோ |
| ,, | உசாக | சா | மனே | மணே |